கிய சம்பந்தம் இருக்குமானால், உலகஇயலும் வேதஅருளும் ஆகிய இவ்விரண்டிற்கும் காரணகர்த்தா ஒருவரே என்று அநுவபிப்பதுமல்லாமல், ஒன்றைப்பற்றிச் சொல்லும் ஆட்சேபனை மற்றொன்றையும் பற்றும் என்றும் அநுவயிக்க வேண்டியதாகும்.

3. Data assumed in the work. The existence of God.

"அகர முதலவெழுத்தெல்லா மாதிபகவன் முதற்றே யுலகு" என்பது பல திருஷ்டாந்தங்களினால் விளங்கும் சர்வசம்மதியான சத்தியம்;* இந்தச் சத்தியத்தை இந்த நூலுக்கு ஆதாரமாக நாட்டி, கடவுளே இயலுக்கும் அருளுக்கும் காரணரென்று அங்கிகரிக்கவேண்டும்.

(a) We must not argue from hypothetical and false, but true and natural principles.

குயுக்தியாகிய வீண்தர்க்கத்தினாலும், மனோராஜ்யமாகிய வீண்தோற்றத்தினாலும் இகபரத்துக்குரிய வைதிக தர்மவிஷயங்களை அநுமானித்துப் பகுத்தறியக்கூடாதாகையால், யாவரும் ஒப்புக்கொள்ளத்தக்க இயல்பான நியாயங்களைக்கொண்டே உள்ளகாரியங்களை உள்ளபடி அநுமானித்துப் பகுத்தறியவேண்டும்.

(b) Reasons for the existence of the world and God, and Religion, Natural and Revealed.

உலகம் உண்டென்பது ஐம்புலன்களுக்கும் விஷயமாயிருக்கிறது. காரணமில்லாமல் காரியமில்லை. "வித்தில்லாத சம்பிரதாயம் மேலுமில்லை கீழுமில்லை." காணப்பட்ட காரியமாகிய உலகத்தினால் காணப்படாத காரணர் ஒருவர் உண்டென்றும், உலகஇயலை அமைத்தவர் வேதஅருளையும் அமைத்தாரென்றும் மனதிற்கு இயல்பாய் விளங்கும். கடவுள் இல்லையென்னும் விபரீதநாஸ்திகக்கொள்கை அநுமானப்பிரமாணத்தினால் விளங்காது; கடவுள் உண்டென்னும் சாதாரண ஆஸ்திகக்கொள்கை அநுமானப்பிரமாணத்தினால் விளங்கும். கடவுள் ஒருவர் இருந்தால் அவருடைய

---

* சப்தப்பிரமாணம்=ஆகமப்பிரமாணம்.

திருவுளம் அவருடைய புத்தியுள்ள சிருஷ்டிகளுக்கு விளங்க வேண்டும். அது உலகஇயலிலும் வேதஅருளிலும் விளங்கக் காண்கிறோம். கடவுள் உண்டென்பதற்கு அத்தாட்சி அகத்திலும் புறத்திலும் உண்டு. அது காரணாநுமானத்தினாலும் காரியாநுமானத்தினாலும் விளங்குகிறதுமன்றி, மன்னுயிரின் மனச்சாட்சியினாலும் விளங்கும்.

சத்தியத்துக்கும் மனதிற்கும் சம்பந்தம் இருக்கிறபடியால் கடவுள் உண்டென்பதும், அவருடைய திருவுளம் யாவருக்கும் விளங்கவேண்டுமென்பதும் தகுதியென்று புத்திமான்கள் யாவரும் ஒத்துக்கொள்வார்கள்.

"எல்லாம் இரட்டையாய் ஒன்றுக்கொன்று எதிரிடையாயிருக்கிறது, கடவுள் ஒன்றையும் குறைவாய் உண்டாக்காமல், ஒன்றுக்கொன்று உதவியாயிருக்கும்படி உண்டாக்கியிருக்கிறார்" என்று சீராக்கின் ஞானத்தில் சொல்லியிருக்கிறதை முன்னிட்டு,* இந்த நூல் செய்யப்பட்டிருக்கிறதை அறிந்து, சத்தியத்தை மனதிற்கும், மனதைச் சத்தியத்திற்கும் இசைந்திருக்கும்படி உண்டுபண்ணினவர், இயலை அருளுக்கும் அருளை இயலுக்கும் இசைந்திருக்கும்படி உண்டுபண்ணியிருக்கிறாரென்று உணர்ந்து, உலகஇயலையும் வேதஅருளையும் உள்ளபடி பகுத்தறியவேண்டும். அவைகளைப் பற்றிக் குயுக்தியான விபரீத நியாயங்களைச் சொல்வது வியர்த்தமாயிருக்கும். உலகஇயலிலும் வேதஅருளிலும் குற்றம்பாராட்டுவது திருவுளத்தை முற்றிலும் அறியக்கூடாத சிற்றறிவாளராகிய மனுஷருக்குத் தகுதியல்ல; அது யானை கண்ட குருடர் பிதற்றியதுபோலிருக்கும். தனக்குவமையில்லாதவருடைய திருவுளத்தை அறிந்து, மனோவாக்குக் கெட்டாத அவருடைய செயலைச் சிற்றறிவாளராகிய மனுமக்களால் அளவறுக்கக்கூடுமோ?

* Ecc. 42. 24.—26. "All things are double one against another: and he hath made nothing imperfect. One thing establisheth the good of another."

காரியம் இப்படியிருக்க, உலகத்தார் இயலையும் அருளையும் பற்றிக் குற்றம் பாராட்டத் துணிந்து, சுகமும் இன்பமுமேயல்லாமல் துக்கமும் துன்பமுமிருக்கலாகாது, பரீட்சையும் சிட்சையும் தண்டனையும் மரணமும் இருக்கலாகாது, நன்மைக்கே ஒழிய தீமைக்கு இடமிருக்கலாகாது என்றும், உலகத்தில் உயர்வு தாழ்வு இராமல் எல்லாம் சமமாயிருக்கவேண்டும் என்றும் பல வீணான ஆட்சேபனைகள் செய்வார்கள்.

(c) Folly of vain speculations. That all creatures should be made perfect and happy, free from sin and misery, free from punishment and death.

மனோவாக்குக்கெட்டாத வைதிக விஷயங்களைப்பற்றி நீக்குப்போக்கு அறியாத சொற்ப புத்தியுள்ள மனுஷர் ஆட்சேபனைகள் செய்வது தகுதியல்ல. கடவுளுடைய செயலையும் திருவுள நோக்கத்தையும் ஆதியோடந்தமாய் யார் அறியக்கூடும்? அறவாழியந்தணராகிய கடவுள் நன்மையிலும் ஞானத்திலும் பூரணரானபடியால், சகலத்தையும் நன்மையும் ஞானமுமாய்ச் செய்து முடிப்பார் என்பதற்குச் சந்தேகமில்லை.

(d) For such speculations men have not faculties.

குயுக்திகளுக்கும் விபரீதங்களுக்கும் நாம் இடங்கொடாமல், நமது அநுபவத்திற்குரிய உலக இயலையும் அறிவுக்கெட்டின வேத அருளையும் ஒன்றோடொன்று ஒத்திட்டுப் பார்த்து, அவற்றில் தோன்றிய சம்பந்தங்களை அறிந்து, அவைகளைச் சமரசப்படுத்தி, அவற்றில் விளங்கிய உண்மையை அங்கீகரிக்கவேண்டும். அப்படிச் செய்வோமானால் "தர்மமே ஜயம்," "அறத்தால் வருவதே இன்பம்" என்று அறிந்து உணர்ந்துகொள்ளுவோம். மனச்சாட்சியின் சத்தத்துக்குச் செவிகொடுத்து, நம்மை நாம் அறிவோமானால் தலைவனையும் அவருடைய வழுவா நீதியையும் அறிந்துகொள்ளுவோம்.

C. Practical advice.

இந்த நூலில் நாம் கவனிக்கப்போகிற ஒப்புமை நியாயத்தினுல் விளங்கும் அநுமான அத்தாட்சி சில சம்பந்தங்களில் நிறைவாயும், சில சம்பந்தங்களில் குறைவாயும் தோன்றும். இயலையும் அருளையும் பற்றிய அத்தாட்சிகளை ஆராய்ந்தறியுமுன் அவைகளை இகழ்ந்து பழிப்பது தகுதியல்ல. அவைகளைப்பற்றிச் சொல்லிய அநுமானம் நமக்கு விளங்காததினுல் அநுமேயத்தைக் குற்றப்படுத்துவதும் தகுதியல்ல. பூரண அத்தாட்சி இல்லாதவிடத்தில் குறைவான அத்தாட்சியைக்கொண்டே நம்மால் கூடியமட்டும் காரியத்தை நிதானித்து அறிந்துகொள்ளவேண்டும்.

D. The Analogy—Its plan, scope, and force.

மனுஷர் பட்சிகளைப்போல ஆகாயத்தில் பறக்கக்கூடாதிருக்கிறபடியால், அவர்கள் நடக்கவுங்கூடாதென்று சொல்லத்தகுமா? சூரியவெளிச்சமில்லாத பட்சத்தில் விளக்குவெளிச்சத்தைக் கையாடவேண்டியதில்லையா? இயலிலும் அருளிலும் உள்ள விஷயங்களைப்பற்றிச் சொல்லிய ஆட்சேபனைகளுக்கும், அவைகளைக்குறித்த அத்தாட்சிகளைப்பற்றிச் சொல்லிய ஆட்சேபனைகளுக்கும் இந்த ஒப்புமைநியாயத்தினுல் விளங்கும் காரியாநுமான அத்தாட்சியை நியாயமாய்ப் பிரயோகித்தால் உலகஇயலிற்கும் தேவசெயலிற்கும் மனுஷர் அநுபவத்திற்கும் உண்டாயிருக்கிற சம்பந்தந்தோன்றி, உலகஇயலையும் வேதஅருளையும் சமரசப்படுத்தி, அவைகளைப்பற்றிய சந்தேகத்தை நிவிர்த்திசெய்து, நிச்சயத்தை அறிந்து தேறுதலடையக்கூடும்.

கடவுள் உலகத்தை உண்டாக்கி ஆண்டு நடத்திவருகிறாரென்பது சர்வசமயங்களின் சம்பிரதாயமும், கிறிஸ்துமார்க்கத்தின் உபதேசமுமாயிருக்கிறது. இது இயல்வேதத்தைப்பற்றின காரியம்: இதைப்பற்றியே இந்த நூலின் முதலாம் பங்குக்கடுத்த ஏழு அதிகாரங்களில், (1) மனுஷர் இனி ஜீவிக்கப்போகிற மறுமை உண்டென்

E. The treatise is divided into two parts, and is thus analysed:
I. Natural Religion: (1) That there is a *future* state. (2) A *natural* government, present and future (3) a *moral*

government (4) life a probation, involving risks. (5) promoting *Improvement*, testing character. (6) Not affected by necessity, (fate) (7) and that the *perfection* of God's government cannot be objected to, for it is, as a scheme incomprehensible.

றும், (2) இம்மை மறுமைக்குரிய இயல்பான ஒரு ஆளுகை உண்டென்றும், (3) நல்வினை தீவினைக்கடுத்த பலனும் தண்டனையும் உண்டென்றும், (4) இம்மையானது சிட்சைக்குரிய பரீட்சை நிலைமையென்றும், (5) சிட்சை ரட்சையினால் பக்குவம் உண்டாகிறதென்றும், (6) விதிவசமல்ல மதிமுயற்சியே மன்னுயிர் வாழ்வுக்குரியதென்றும், (7) உலகஇயலிலும் தேவசெயலிலும் மனோவாக்குக்கெட்டாத சில காரியங்கள் தேவஞானத்துக்கும் காருணியத்துக்கும் விபரீதமாய்த் தோன்றினாலும் அவைகளைப்பற்றிச் சொல்லிய ஆட்சேபனைகளுக்குச் சமாதானம் உண்டென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

II. Revealed Religion: wherein it is shown that mankind being in a state of apostasy, wickedness and ruin, Revelation, an additional dispensation of Providence is given: and therefore (1) that Christianity is of the utmost importance: (2) as *miraculous*, no objection can be urged against it. (3) as a *scheme*, no valid *objection* can be urged against it, as a *fact*, though differing from our expectations, or (4) against the *moral perfections* displayed in it (5) or against the system of *means* and *general* laws whereby it is carried on, i.e. by the

உலகத்தார் பாவத்தால் கெட்டழிந்து, செய்யத்தக்கவைகளைச் செய்யாமல், செய்யத்தகாதவைகளைச் செய்து, இகபர சுகம்பெறக்கூடாதவர்களாயிருக்கிறபடியால், முதலாம் பங்கில் சொல்லிய இயல்வேதம் அவர்களுக்குப் போதாது; அவர்களைக் குணப்படுத்திக் கரையேற்ற அருள்வேதம் அவசியம் வேண்டியது. இதைப்பற்றியே இந்த நூலின் இரண்டாம் பங்குக்கடுத்த எட்டு அதிகாரங்களில்: (1) கிறிஸ்துமார்க்கமாகிய அருள்வேதத்தைக் கடவுள் அநுக்கிரகித்திருக்கிறது மகா முக்கியமான காரியமென்றும், (2) அது போதுமான அத்தாட்யினால் மெய்ப்பிக்கப்படுகிறதென்றும், (3) அதில் அடங்கிய உபதேசங்களைப்பற்றி ஆட்சேபிக்க இடமில்லையென்றும், (4) அதில் சொல்லிய அறநெறி ஒழுக்கங்களைப்பற்றி ஆட்சேபிக்க இடமில்

லையென்றும், (5) ஒரு மத்தியஸ்தர்மூலமாய் உலகம் இரட்சிக்கப்படவேண்டியது அவசியமென்றும், (6) அது எல்லாருக்கும் ஒரேகாலத்தில் பலமான திருஷ்டாந்தங்களினால் ரூபகாரப்படவில்லையென்னும் ஆட்சேபனைக்கு சமாதானம் இன்னதென்றும், (7) அது தீர்க்கதரிசனம் அற்புதம் முதலான புறஅத்தாட்சிகளினாலும், மனுஷருக்கும் அநுபவத்திற்கும் ஏற்றிருக்கிற அக அத்தாட்சிகளினாலும் ரூபிக்கப்படுமென்றும், (8) கடைசியில் ஒப்புமை நியாயத்தினால் விளங்கும் அநுமான அத்தாட்சியானது இயல்வேதத்தையும் அருள்வேதத்தையும் சம்பந்தப்படுத்தி மெய்ப்பிக்கிறதுமல்லாமல், அது நிராகரிக்கக் கூடாத அத்தாட்சியாய் விளங்கும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

mediation of a Divine Person to save mankind. (6) or against its want of Universality and supposed deficient proof: (7) or against its *evidence* prophetic, miraculous, or general (8) and lastly that analogy is strongly and in various ways on the side of religion, general and revealed, and is unanswerable.

மறுமை உண்டென்பது நம்முடைய பயபக்திக்கடுத்த வைதிக தர்மநிலைக்கு ஆதாரமாயிருக்கிறபடியால், அது உண்டென்பதற்கு நியாயங்கள் அடியில் வரும் முதல் அதிகாரத்தில் சொல்லப்படும்.



## PART I.

# ON NATURAL RELIGION.

## CHAPTER I.

*Of a Future Life.*

# முதலாம் பங்கு.

# இயல்வேதம்.

## 1-ம் அதிகாரம்.

### மறுமை உண்டென்பது.

*சரீரசம்பந்தமாய் மூர்த்திகரித்திருக்கிற ஜீவாத்துமாவானது இன்றைக்கு இருக்கிறபடியே நாளைக்கும் இருக்குமென்றும், இம்மையில் இருக்கிறபடியே மறுமையிலும் இருக்குமென்றும் ஒப்புமை நியாயத்தினால் விளங்கும்:**

A. Personal identity.

I. *நாம் இவ்வுலகத்தில் மனுஷஜநநம் எடுத்தபோது மிகுந்த பலவீனமான நிலையில் பிறந்து, பிள்ளைகளாக பற்பல மாறுதல்களின் வழியாய்ப் பற்பல சுகதுக்கங்களை அநு*

I. A future life is probable: From similar changes already undergone in.

---

* *"ஒற்றுமை நயத்தி னொன்றெனத் தோன்றினும்*
*வேற்றுமை நயத்தின் வேறே உடலுயிர்."*

*அதாவது, சத்தும் சித்துமாகிய உடலும் உயிரும் ஏகோபித்திருக்கிறதினால் ஒன்றாய்த் தோன்றினாலும் அவைகளைப் பகுத்தறியும்போது வெவ்வேறு வஸ்துக்களாய் விளங்கும். இந்நன்னூல் சூத்திரம் உயிரும் மெய்யுமாகிய எழுத்தைப்பற்றிச் சொல்லப்பட்டாலும் உடலும் உயிருமாகிய சரீரத்தையும் பற்றும்.*

Body and soul though one by conjunction, are yet distinct from one another.

(a) ourselves, and in,
(b) other creatures, worms, birds, &c.

பவித்து, வயது முதிர முதிர பூரண புருஷத்துவம் அடைகிறோம். அப்படியே மற்ற ஜீவஜந்துக்களும் பற்பல மாறுதல்களின் வழியாய்ப் பக்குவப்படுகிறதைக் காண்கிறோம். மண்ணில் ஊருகிற புழுக்கள் விண்ணில் பறக்கும் பூச்சிகளாக மாறும்; பட்சிகள் முட்டையிலிருந்து பிறந்து ஆகாசத்தில் பறக்கும்; ஜீவராசிகள் பற்பல நூதனமான விகாரங்கள் அடையும். இம்மையில் நாம் கர்ப்பத்தில் கருதரித்து உருவாகும்போதும், கர்ப்பத்திலிருந்து வெளிப்பட்டுக் குழந்தைகளாய்ப் பிறக்கும்போதும், பருவமடைந்து பக்குவப்படும்போதும், பற்பல விகாரங்களுக்குட்பட்டபடியே, மறுமையிலும் பற்பல விகாரங்களின் வழியாய் நாம் பக்குவப்படவேண்டியதென்று ஒப்புமைநியாயத்தினால் விளங்கும்.

II. A future life is probable from our present powers, which are likely to *continue*, unless death destroy them. We *fear* death may, but there is *no* proof that it will.

II. நாம் நல்வினை தீவினைகளைச் செய்யவும், சுகதுக்கங்களை அநுபவிக்கவும் உரியவர்களாயிருக்கிறோமென்பது பிரத்தியட்சமான காரியம். இந்தச் சக்தி மரிக்குமுன்னும் மரிக்கும்போதும் நமக்குள் இருக்கிறபடியே, மரித்தபின்னும் இருக்கலாம். மரணம் இந்தத் தன்மையை அழித்துப்போடுமென்று நாம் அஞ்சி சந்தேகிக்க இடமிருந்தாலும், இந்தத் தன்மை மரணத்தினால் அழிந்துபோகுமென்கிறதற்கு நிச்சயமான அத்தாட்சியில்லை. இவ்விஷயத்தில் போதுமான அத்தாட்சியில்லாமையால், நாம் மரிக்குமுன் இருந்ததுபோலவே மரித்தபின்னும் இருப்போமென்று எண்ணித் துணிந்து நடப்பது தகுதியாயிருக்கும். சுயம்புவான கடவுள்மாத்திரம் என்றும் இருக்கிறபடி மாறாமலிருக்கிறார். சிருஷ்டிக்கப்பட்ட பஞ்சபூத சம்பந்தமான மாறுதலுக்குரிய சத்துப்பொருள் விகாரப்பட்டு அழிந்துபோனாலும், விகாரப்படாத சித்துப்பொருள் எப்பொழுதும்போல் அழியாமலிருக்கும்.

மரணம் இன்னதென்று நமக்குத் தெரியாது; மரணம் நம்முடைய அநுபவத்திற்குப் படாத காரியம்; ஆகையால் மரணத்தினால் ஆத்துமாவுக்கு அழிவுண்டாகுமென்று சொல்ல ஏதுவில்லை.

We know not what death is.

“உறங்குவதுபோலுஞ் சாக்காடு உறங்கி விழிப்பதுபோலும் பிறப்பு” என்று சொல்லியிருக்கிறபடியே, மரணத்தினால் பஞ்சபூத சம்பந்தமான செயற்கைப்பொருளாகிய தேகம் அழியுமேயன்றி இயற்கைப்பொருளாகிய ஆத்துமா அழியுமென்று சொல்ல ஏதுவில்லை. ஜீவனுள்ள இடத்தில் அசைவும் உணர்வுமுண்டு. உயிரும்-உடலும் ஒருமைப்பட்டு நிற்பதே ஜீவசம்பந்தம், இவற்றின் பிரிவே மரணம். நாம் நித்திரைசெய்யும்போதும், மூர்ச்சையடைந்திருக்கும்போதும், அசைவும் உணர்வும் அடங்கியிருக்கிறதே ஒழிய அழிந்துபோகிறதில்லை; நாம் விழித்துக்கொள்ளும்போது அசைவும் உணர்வும் முன்னிருந்ததுபோலவே இருக்கும்.

Sleep, swoon.

மாம்சதேகியாகிய ஆத்துமாவானது மரணத்தினால் அழிந்துபோகுமென்று உலகஇயல்பில் விளங்கிய ஒப்புமைநியாயத்தைக்கொண்டு சொல்ல ஏதுவில்லை. கண்ணுக்கு விஷயமாகிற பொருள் விகாரப்பட்டு அழிந்துபோவதினால், கண்ணுக்கு விஷயமாகாத பொருளும் அப்படியே விகாரப்பட்டு அழிந்துபோகுமென்று சொல்ல இடமில்லை. ஆகையால் ஜீவதத்துவங்களுக்கு ஆதாரமான மெய்ப்பொருளாகிய ஆத்துமா அழியாதிருக்குமென்று சொல்ல ஏது உண்டு.

Analogy of nature.

மரணத்தினால் நாம் முற்றிலும் நிர்மூலமாகி அழிந்துபோகிறோமென்பது நம்முடைய மனோராஜ்யமான தோற்றமே ஒழிய வேறல்ல. இந்த மாயாதோற்றம் மதியை மயக்குகிறபடியால், இதற்கடுத்த மூன்று நியாயங்களை விசாரித்து அறியவேண்டும்.

B. Still men *imagine* death will *destroy* them. This imagination unfounded. Take the question in *three* forms.

I. நமக்குள் இருக்கிற நான் எனது என்று சொல்லும் அறிவும் உணர்வுமுள்ள ஜீவாத்துமாவானது செயற்கைசம்பந்தமான பகுபொருளாயிராமல் இயற்கைசம்பந்தமான பகாப்பொருளாயிருக்கிறபடியால், ஆத்துமா அழிவுக்குரியதல்லவென்று தத்துவஞானத்தினாலும் அநுபவஞானத்தினாலும் விளங்கும்.

1. Is death *the destruction of living beings*? No reason to think it is, for this supposes we are compounded and so discerptible; but the contrary is probable, having metaphysical and experimental proofs.

(*a*) சத்துப்பொருளாகிய ஸ்தூலசரீரம் அழிந்துபோனாலும், சித்துப்பொருளாகிய சூட்சும சரீரம் அழியாது. உடல் ஆத்துமாவுக்கு உறைவிடமாயிருக்கிறது. ஆத்துமாவானது கூடுவிட்டுக் கூடுபாயக்கூடும். சரீரம் விகாரப்பட்டு மாறி உருவழிந்து போகும். ஆத்துமாவானது சரீரப்பற்றற்று தனிமையாயிருக்கும். ஆத்துமா பகுபொருளானால் அது விகாரப்பட்டுப் பல இடங்களில் பங்குபங்காய்ச் சிதறியிருக்கும்; அப்படி இருக்கக்காணோம். அது சிருஷ்டிப்பொருளாயிருந்தபோதிலும் சிருஷ்டிகர்த்தாவின் அருளால் தனியேகப்பொருளாயிருந்து சரீரத்தோடு சம்பந்தப்பட்டு ஏகமாகவும், சரீரத்தோடு சம்பந்தப்படாமல் பிரத்தியேகமாகவும் இருக்கும்.

(*a*) Metaphysical: consciousness is indivisible; so must the subject in which consciousness inheres: hence, our bodies are not the living being, nor is the matter in which the living being thinks. The living being may exist out of the body, may animate other bodies, and be as little affected by the dissolution of all these bodies, as of any other foreign matter.

(*b*) ஜீவாத்துமாவானது அரூபப்பொருளானபடியால் பஞ்சேந்திரியங்களுக்கு விஷயமாகாது. சரீரத்துக்குரிய இந்திரியங்களும் அவையவங்களும் ஜீவாத்துமாவுக்குக் கருவிகளாயிருக்கிறது. இந்தக் கருவிகளைக்கொண்டே ஜீவாத்துமா சரீரத்தை ஆண்டு நடத்துகிறது. இளமையில் நம்முடைய சரீரம் சிறிதாயும் முதுமையில் பெரிதா

(*b*) Experimental: parts of the body (limbs) may be lost, the body be larger or smaller, or even entirely (though gradually) changed, and the *living being* (the soul) *remain*.

யும் இருக்கிறது. சரீரத்திலுள்ள அவயவங்கள்தோறும் எப்பொழுதும் வளர்வும் தேய்வும் உண்டாயிருக்கிறபடியால் சரீரம் எப்பொழுதும் மாறிமாறி, ஏழு வருஷத்திற்கொருதரம் முழுதும் விகாரப்பட்டு, வருகிறது. சரீரத்துக்குரிய சில இந்திரியங்களும் புறத்துறுப்புகளும் விகாரப்பட்டு அழிந்து போனபோதிலும் ஜீவாத்துமாவுக்குரிய தத்துவமும் அகத்துறுப்புகளும் விகாரப்பட்டு அழிந்துபோகிறதில்லை.

முதலாவது: ஜீவாத்துமாவான மனுஷன் சத்துப்பொருள் சம்பந்தமான வஸ்துவாய்மாத்திரமிருந்தாலும், சத்துப்பொருள்களெல்லாம் அணுத்திரளின் கூட்டமாயிருக்கிறபடியால், அணுக்கள் விகாரப்பட்டாலும் முற்றிலும் அழிந்துபோகுமென்று சொல்லக் கூடாது. ஜீவாத்துமாவானது அணுத்திரளின் செயற்கையான சத்துப்பொருளாயிராமல், தனியேக இயற்கையான சித்துப்பொருளாயிருப்பதினால் அது மரணத்துக்குரியதல்ல.

1. Even if man is material, still death may not destroy the elementary particles in which the living being inheres; and if not, death does not destroy him.

இரண்டாவது: மாம்சம் எலும்பு முதலானவைகளால் உண்டாக்கப்பட்ட தேகமானது நாளுக்குநாள் பல மாறுதலுக்கும் விகாரத்துக்கும் உட்படுகிறதுமன்றி, சிலவேளைகளில் காயம் வியாதிமுதலான துர்ச்சம்பவங்களினால் கைகால் முதலான அவயவங்கள் ஊனப்பட்டு அறுக்கப்பட்டுப்போவதுண்டு. அதினால் ஜீவாத்துமாவுக்கு யாதொரு குறைவும் அழிவுமில்லை. அப்படியே சடுதியில் சம்பவிக்கும் மரணத்தினால் தேகம் அழிந்துபோனாலும் தேகியாகிய ஜீவாத்துமாவுக்கு ஒரு நஷ்டமுமில்லை.

2. So, as the destruction of the *bodily* system (by gradual changes, by amputation) destroys not the living being, neither will the destruction of any other (say internal) system. Death indeed, is a sudden not a gradual change, and the living being is affected by the body; but the first fact is not decisive, nor is the latter more true of the body than of other foreign matter that affects the soul.

3. The body has organs of perception, &c, which may be removed or destroyed without affecting the living being ; so may all other organs-eye-glasses, wooden-limbs—perception without organs, as in dreams. In those cases the organ is an instrument which may be laid aside ; so the dissolution of matter or of organs is not the destruction of the being himself.

மூன்றாவது: தேகத்துக்குரிய கண் மூக்கு முதலான அவயவங்கள் அழிந்துபோனாலும், தேகி அழிந்துபோகிறதில்லை. கண் ஒளி சாலேலைரத்தினால் மங்கினால் கண்ணாடி போட்டுப்பார்க்கிறோம். கால் உடைந்துபோனால் மரத்தால் கால் செய்து தொடுத்துக்கொண்டு நடக்கிறோம். நாம் கனவு காணும்போது இந்திரியங்களெல்லாம் அடங்கியிருக்க, ஆத்துமாவானது தனக்குரிய தொழிலை நடத்துகிறது. சொப்பனத்தில் குருடன் கண்ணுள்ளவன் போல் கண்டு, முடவன் காலுள்ளவன் போல் நடக்கிறதுண்டு.* அப்படியே ஜீவாத்துமாவானது கருவிகளைக் கொண்டும் கருவிகளில்லாமலும் தன் தொழிலை நடத்தக்கூடும்.

கைக்கெட்டிய பொருளைக் கையினால் பறிக்கிறோம், கைக்கெட்டாத பொருளைத் துரட்டினால் பறிக்கிறோம். கால் நொண்டியானவன் ஊன்றுகோலைக்கொண்டு நடக்கிறான். கண்ணுக்கெட்டாத பொருளைப் பூதகண்ணாடியைக்கொண்டு பார்க்கிறோம். ஊன்றுகோலுக்கு நடக்கும் சக்தியும், கண்ணாடிக்குக் காணும் சக்தியும் இயல்பாயில்லை. அவைகளைப் பிரயோகிக்கும் ஆத்துமசக்தியினால் அவைகள் பயன்படும். அப்படியே ஜீவாத்துமா இல்லாவிடில் கண் காணாது, கைகால் அசையாது. இப்படியிருக்க, கருவியாகிய தேகம் அழிவதினால் அதை நடத்துகிற ஆத்துமா அழியாது என்று விளங்கும்.

---

* "The mind sees, all else is deaf and blind." Greek proverb.
காண்பதும் கேட்பதும் மனதிற்கே உரியது, கண்ணும் செவியும் குருடும் செவிடுமே—

"தேகமல்லாமல் வேறே தேகியார் காணேனென்றாய்
மோகமாங் கனவில்வந்து முனைத்திடு மவனார்சொல்லாய்
சோகமாங் கனவுதோன்றாச் சுழுத்திகண் டவனார்சொல்லாய்
ஆகநீ கனவிலென்னு மறிவுதா னேதுசொல்லாய்." கைவல்லியம்.

மேற்கூறிய நியாயங்கள் மனுஷர்களுக்குமாத்திரமல்ல, மிருகங்களுக்கும் உரியதென்றும், மனுஷர்கள் இம்மை மறுமைக்குரிய சம்பந்தத்துக்கடுத்த சாவாத ஜீவாத்துமாக்களானால் மிருகங்களும் அப்படியிருக்கலாமே என்றும் சிலர் ஆட்சேபிப்பார்கள், ஆயினும் அது பயனில்லாத ஆட்சேபனையாயிருக்கும். எப்படியெனில்,

Objection. It may be objected, this applies to brutes, which must, therefore, be immortal, and moral too. To which answer,

(a) மனோவாக்கில்லாத மிருகங்கள் செத்தபின் அவைகளின் உயிர்கள் அழியாமல் இருக்குமென்பது அசாத்தியம். சொற்ப அறிவுள்ள குழந்தைகள் இருக்க இருக்கப் பகுத்தறிவுள்ளவர்களாகிப் பக்குவப்படுவதுபோல, மிருகங்களும் இருக்க இருக்க படிப்படியாய் பகுத்தறிவுள்ளவைகளாகி மறுமையில் பக்குவப்பட்டாலும் படலாம். என்றாலும் இம்மையில் அவைகளுக்கு நன்மை தீமை இன்னதென்று பகுத்தறியும் விவேகமும் அறநெறியும் தர்மகுணமும் இல்லையென்று விளங்குகிறது.

(a) Be it so; brutes may have latent powers, which fit them to be immortal; and,

"பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமையால்" என்றும்,

"ஊணுடையெச்ச முயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு" என்றும் சொல்லியிருக்கிறபடியே,

மனுஷர்களுக்கும் மிருகங்களுக்கும் வெகு வித்தியாசமுண்டு. மனுஷர் பேரறிவாளர், பாவபுண்ணியம் அறிந்தவர்கள், தங்கள் செய்கைக்கு உத்தரவாதிகள். மிருகங்களுக்கு இந்த லட்சணங்களில்லை.*

---

* "பானைக்கில்லை தானமுந்தருமமும்
பூனைக்கில்லை தவமுந்தவையும்." வெற்றிவேற்கை.

(b) It does not follow; brutes may have a natural immortality without any higher faculties; and God may dispose of them as He shall please.

(a) மரணமடைந்தபின் பேரறிவில்லாத மிருகங்களின் ஆவி மறுமையில் ஜீவித்திருந்தாலும் அவைகளுக்கும் மனுஷர்களுக்கும் பேதம் இருக்குமென்பதற்குச் சந்தேகமில்லை. மறுமையில் அவைகள் இருக்கத்தக்கதானால் அவைகளின் கதி இன்னதென்று திருவுளத்துக்கே தெரியும்.

2. Is death the destruction (not of the *living being*, but) of our present living powers of reflection, as it is of those of sensation?

(a) Man lives in two states, sensation, reflection (attention).

(b) Ideas once gained, sensation may be destroyed, and reflection remain untouched; for now,

1. We can, and do reflect, independently of the senses,

ஐம்புலன்களும் அவற்றிற்கு விஷயமாகிற புறத்துறுப்புகளும் அழிந்துபோவதுபோல, அந்தக்கரணமாகிய அகத்துறுப்பும் அழிந்துபோகுமென்று சொல்ல ஏதுவில்லை. ஐம்புலன்கள் அழிந்தாலும் மனம்-புத்தி-சித்தமாகிய அந்தக்கரணங்கள் அழியாது. மனுஷனுக்கு இரண்டு நிலைமைகளுண்டு, ஐம்புலன்களின் வழியாய் அறிவைச் சம்பாதிக்கும் நிலைமையொன்று, ஐம்புலன்கள் அடங்கியிருக்க சம்பாதிக்கப்பட்ட அறிவை ஆத்தும அவதானமாகிய தியானத்தினால் பயன்படுத்துகிற நிலைமையொன்று. வீடுகட்டுகிறதற்குப் பலவித கருவிகளும் சாரங்களும் வேண்டும்; வீடு கட்டி முடிந்தபின் அந்தக் கருவிகளும் சாரங்களும் வேண்டியதில்லை. பேரின்பவீடு அடையும்பொருட்டு இந்த சிற்றின்பவீடு அழியவேண்டும். அப்படியே அறிவில் தேறும்படி புறத்துறுப்புகளாகிய இந்திரியமுதலானவை வேண்டியது; அறிவில் தேர்ந்து பக்குவப்படும்போது அகத்துறுப்புகள் போதும். மனுஷர் செய்யும் ஜீவாத்துமாவுக்குரிய முயற்சிகளுக்கும் அநுபவங்களுக்கும் இந்த ஸ்தூலசரீரத்தின் சம்பந்தம் அவசியமல்ல; மரணத்தினால் இந்திரிய சம்பந்த

மான ஸ்தூலசரீரம் அழிந்துபோனாலும் சூட்சமசரீரம் தனித்து முயற்சிசெய்யும்.*

மரணத்துக்கேதுவான சில கொடிய வியாதிகளினால் மரண பரியந்தம் அந்தக்கரணங்கள் சிதைவுபட்டு அழிந்துபோகாமல் இருக்கிறபடியால், தேகத்துக்கும் தேகிக்கும் அந்நியோன்னிய சம்பந்தமிருந்தாலும் தேகம் அழியும்போது தேகி அழியாமலிருக்கிறதென்று விளங்கும். ஆகையால் தேகத்தில் உயிர்நிலையாகிய ஜீவாத்துமாவின் ஸ்தானம் மண்டையிலுள்ள மூளையிலோ இருதயகமலத்திலோ? இன்ன இடமென்று குறிப்பாய்ச் சொல்லக்கூடாது. மூளையிலும் இருதயத்திலும் வியாதி தோன்றி அவைகளை ஒருவாறு பழுதுபடுத்தி பின்னப்படுத்தினாலும், ஜீவாத்துமா பழுதுபட்டு பின்னப்படாமலிருக்கக் காண்கிறோம். இந்த ஆதாரங்கள் முற்றிலும் பழுதுபட்டு அழிந்துபோனாலும், மனம்-புத்தி-சித்தமாகிய அகத்துறுப்புக்கள் தங்களுக்குரிய ஜாக்கிரம முதலிய தொழில்களை நடத்தக்காண்கிறோம். இவ்வாறு தேகத்துக்கும் தேகிக்கும் அந்நியோன்னிய சம்பந்தமிருக்கிறபடியால் தேகம் அழியும்போது தேகிக்கு அவஸ்தை உண்டானாலும் அழிவு உண்டாகாது.

2. In mortal diseases reflection is unaffected up to the moment of death, after sensation has ceased.

(c) Each state indeed affects the other, but the destruction of one thing is not necessarily the destruction of the two.

அசாத்தியமான வியாதிகளிலும் மனதுக்குரிய நினைவு ஞாபகம் முதலிய சக்திகள் விகாரப்படாதிருக்கக் காண்கிறோம். சரீரத்தில் மயக்கமுண்டாகி பிரக்கினையில்லாமல் கனநித்திரை உண்டாகும்போது மரணம்போலவும், நித்திரைகலைந்து தெளிவுண்டாகும்போது பிறப்புப்போலவும் தோன்றும்.

(d) Diseases even give a presumption to the contrary.

* சரீரம் வீடுபோல் கட்டப்பட்டு செயற்கையினால் ஆக்கப்பட்ட வஸ்துவானதால் அதற்கு யாக்கை என்று பெயர். அது கட்டுவிட்டு அழிந்துபோம். ஆத்துமா அகம் (ἐγώ-I-நான்) என்னும் பேருள்ள சுவாச சம்பந்தமான ஆவியாகிய அரூபவஸ்து, அது அழியாது.

3. Death may be like birth, a continuation and perfection of our powers.

இறப்புப்போலவே பிறப்பும் பிறப்புப்போலவே இறப்பும் என்று சொல்லலாம். நாம் கர்ப்பத்தி லிருக்கும்போது இருட்டுவீட்டிலிருந்து உந்தியின் வழியாய் ஆகாரமுண்டு, பூமி யாகிய புதிய உலகத்தில் அவஸ்தைப் பட்டுப் பிறந்து, வெளிச்சத்தைக் கண்டு, வாய்வழியாய் ஆகாரமுண்டு பிழைத்திருக்கிறோம். அப்படியே ஆத்துமா வானது சரீரத்தைவிட்டு வேதனையோடு பிரியும்போது பே ரொளியுள்ள வேறுலகத்தையும் வேறே அநுபவங்களையும் அடைந்து சுகித்திருக்கும்.

Obj. Death is after all our destruction, as it is clear from vegetable decay. But the things compared differ in the essential point of comparison-the possession of living powers of *perception.*

மேற்சொன்ன நியாயங்களினாலே, தேகம் அழிவதினால் தேகி அழியாதென்று ஒருவாறு விளங்கி னாலும், ஒப்புமைநியாயத்தினாலேயே, ஜீவராசிகளான மரம் முதலான தாவர சங்கங்கள் செத்தழிந்துபோவதுபோல, மனுஷர்முதலான ஜீவஜந்துக்களும் செத் து அழிந்துபோகுமென்று சிலர் ஆட்சே பிப்பார்கள். நரஜீவ வாழ்வு பொய், அது புல்லைப்போலும் பூவைப்போலும் வாடிப் பட்டு அழிந்து ஒழிந்துபோகுமென்று புலவர்கள் உபமானித்துச் சொல்லி யிருப்பது மெய்யே. என்றாலும், அந்த நியாயம் ஆத்துமா வைப் பற்றாது; உடம்பு பொய்யானாலும் ஆத்துமா மெய், அதற்கு உண்மை என்னும் பெயருண்டு.* புல்முதலிய அசை வும் அறிவும் நினைவுமில்லாத வஸ்துக்களும், அசைவும் அறி வும் நினைவுமுள்ள ஜீவாத்துமாக்களும் சம்பந்தப்பட்ட பொ

---

* "பீறிய போர்வையைப் பெயர்த்தப் பின்னரோர்
வேறிய போர்வையை விரும்புவாரென
ஊறிய உடம்பினில் உதித்த உண்மைதான்
மாறியோர் உடம்பினை மருவுமன்னனே.

உருப்பான்மை மற்றதனுக்கொருநாளுமின்மையால்
செருப்பால்வெம் படைக்கலங்கள் சேதிக்கமாட்டாவாம்
நெருப்பால் வெந்தழியாது நீரானெக்கொழுகாது
மருத்தாலுஞ் சலியாது மற்றதன்றனியல்கேளாய்." பகவத் கீதை.

ருட்களல்ல, ஆகையால் அவைகளை உபமானித்து நியாயஞ் சொல்லக்கூடாது. புல் பூ முதலான சத்துப்பொருள்கள்போல் தேகமாகிய சத்துப்பொருள் அழிந்தாலும் ஆத்துமாவாகிய சித்துப்பொருள் அழிந்துபோகுமென்று இந்த ஒப்புமைநியாயத்தால் விளங்காது. ஆகையால் மரணத்தினால் ஜீவாத்துமா அழிந்துபோகாமல் மறுமையில் பிழைத்திருக்குமென்று நியாயமாய் அநுமானித்து உறுதியாய்க் கைக்கொண்டு நடப்பதே உத்தமம்.

Conclusion.

ஆத்துமாவை இம்மையில் திருப்திப்படுத்த ஒன்றுமில்லாதபடியால் அது மறுமையை நாடுவது இயல்பு. இவ்வுலகத்தில் நாம் பிறக்கும்போது நூதனமான இடத்தையும் நூதனமான நிலைமையையும் அடைந்து வசிப்பது எப்படி இயல்பாயிருக்கிறதோ, அப்படியே மரணத்தினால் இவ்வுலகத்தை விட்டுப் போகும்போது, நூதனமான இடத்தையும், நூதனமான நிலைமையும் அடைந்து வசிப்பது இயல்பாயிருக்கும். இந்த நூதனமான நிலைமையானது ஏகாந்த நிலைமையாயிராமல், இனஜனம் முதலானவர்களோடு கூடிப் பலபேர் ஒருமித்து வாழும் நிலைமையாயிருக்கும். இந்த நிலைமை தர்மமும் ஒழுக்கமுமான நிலைமையாயிருக்கும், இம்மைக்குரிய காரியங்கள் மனுஷர் செய்யும் ஏற்பாட்டின்படி நடக்கிறதுபோல மறுமையில் நடக்காமல், நீதி வழுவாத அன்புள்ள கடவுளின் ஏற்பாட்டின்படி நடக்கும்.

C. The future life here shown to be probable is *natural:*

1. We enter it naturally, by a change like our birth.

2. It is naturally *social.*

3. Ruled by natural *fixed* laws, according to virtue.

4. Nor less natural that these laws are administered by God, not by men, &c.

மறுமையைப்பற்றி நாம் அறிந்துகொள்ளவேண்டியவைகளையெல்லாம் இம்மையில் அறிந்துகொள்ளக்கூடாதாகையால், இவ்விஷயத்தைப்பற்றி மேலே சொன்ன நியாயங்களினால் நாம் அறிந்துகொள்ளவேண்டியமட்டும் அறிந்துகொள்ளலாம்.

D. This probable proof of a future life helps religion as much as demonstration would do; for,

வேதத்தையும் தர்மத்தையும் நம்பாத சில விரோதிகள் முதலாய் மறுமை உண்டு, ஆத்துமா கூடுவிட்டுக் கூடுபாய்ந்து எழுவகை தோற்றத்தின் வழியாய் எழுவகைப் பிறப்புக்குட்பட்டு மாறி மாறிப் பிறக்குமென்னும் கொள்கையை ஒத்துக்கொள்வார்கள்; மறுமை உண்டென்றாலும், தர்மமில்லை, கடமையில்லை, பாவபுண்ணியமில்லை, உத்தரவாதமில்லை, பலனில்லை, தண்டனையில்லையென்று சாதிப்பார்கள்.

1. Demonstration would not silence an unbeliever in religion, since his unbelief may admit a future life as it admits this; and

மறுமை உண்டென்கிற கொள்கை பக்திவிஷயமாகிய வைதீகதர்மத்துக்கு அவசியமானது. மறுமை இல்லையென்று சாதிப்பது சமயவிரோதமும் தர்மதுரோகமுமாம். மறுமை உண்டென்கிற கொள்கை நாட்டப்பட்டு அங்கீகரிக்கப்படுமானால் வேதவிஷயங்களுக்கும் சமயசித்தாந்தங்களுக்கும் அடுத்த மற்றக் கொள்கைகளெல்லாம் எளிதில் அங்கீகரிக்கப்படும்.*

2. Probable proof silences objections, and prepares the mind to attend to the proper evidence of religion.

——>>><<<——

---

* "உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர் வித்து."

ஒரு தகப்பனானவர் மறுமை இல்லையென்னும் கொள்கையைக்கொண்டிருந்த தன் மகனை நோக்கி எதிரில் நிற்கும் ஒரு பெரிய ஆலமரத்திலிருந்து ஒரு பழத்தைக் கொண்டுவரச்சொல்லி, அதைப் பிட்கக் கட்டளையிட்டு, அதில் என்னத்தைக் காண்கிறாய் என்று கேட்டார். அணுக்கள் போன்ற வித்துகளைக் காண்கிறேன் என்று மகன் சொல்ல, அந்த வித்தில் ஒன்றைப் பிட்டுப்பார்க்கச்சொல்லி, அதில் என்னத்தைக் காண்கிறாய் என்று கேட்டார். மகன் அப்படிச் செய்து, ஒன்றுமில்லையென்று சொல்ல, நீ ஒன்றுமில்லையென்று சொல்லி ஒன்றுங்காணாத வித்தில் ஒரு பெரிய ஆலமரம் இருக்கிறது என்றார். விதையானது செத்தாலொழிய உயிர்க்கமாட்டாதென்று வேதத்தில் சொல்லியிருக்கிறது.. (யோவா. 12. 24. 1 கொரி. 15. 36.) கண்ணுக்குத் தோன்றாத ஜீவமுளை அல்லது மூலம் அதிலிருக்கிறபடியால் அது முளைத்து விருட்சமாகும். இது ஜீவனையும் அழியாமையையும் வெளிப்படுத்தின கிறிஸ்துவின் உபதேசமாகிய சரீர உயிர்த்தெழுதலைக் குறிக்கும்.

மறுமையைப்பற்றின உபதேசம் ஜீவனையும் அழியாமையையும் வெளிப்படுத்தின ஜீவகாரணராகிய கிறிஸ்துவினால் விளங்கினது. (2 தீமோ. 1. 10.) மறுமைக்கு சாதனமும் சாட்சியும் வேதத்தில் பூரணமாய் விளங்கும். உலகஇயலால் இந்த விஷயத்தை அறிகிறவர்கள் அநுமானித்து அறிகிறார்கள். "It is only one guess among many; he only discovers, who proves." Paley. "பாவத்தின் சம்பளம் மரணம், தேவனுடைய கிருபை வரமோ நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினால் உண்டான நித்திய ஜீவன்." (ரோம. 6. 33.) உலகத்தில் உள்ள காணப்பட்டதும் காணப்படாததுமான சராசரமனைத்தும். இம்மை

# CHAPTER II.

*Of the government of God by rewards and punishments, and particularly of the latter.*

# 2-ம் அதிகாரம்.

## நல்வினைக்குப் பலனையும் தீவினைக்குத் தண்டனையையும் அளித்து, உலகத்தைக் கண்டிப்பாய் ஆண்டு நடத்தும் கடவுளுடைய இயல்பான ஆளுகையைப்பற்றிச் சொல்லியது.

*Introduction.* A future life is probable (ch. I.) and important, because (ch. II.) our happiness in it may depend on our present conduct; *i. e.* we are under government. Consider that we are under government generally; and under government by *punishment*, as well as by rewards.

மறுமை உண்டென்பதைப்பற்றி முந்தின அதிகாரத்தில் கவனித்தோம். நாம் இன்பதுன்பத்தை அநுபவிக்கத்தக்கவர்களாயிருக்கிறபடியால், மறுமை உண்டென்கிற விசாரணை முக்கியமானது. இம்மையில் நாம் செய்யும் நன்மைதீமைக்குத்தக்கதாய் மறுமையில் இன்பதுன்பம் அடைவோமாகையால் இது மகா முக்கியமான விசாரணையென்பதற்குச் சந்தேகமில்லை. மற்றவர்கள் மரித்துப்போகிறதை நாம் பார்க்கும்போதும், நாமும் ஒருநாள் மரித்துப்போவோம் என்கிற சிந்தை நமக்குள் உண்டாகும்போதும், மறுமை உண்டென்கிற விஷயத்தைப்பற்றி எண்ணமுற்று நம்முடைய நடக்கையைபற்றிக் கவலைகொள்ளுகிறோம்.

---

மறுமையைப்பற்றி ஒன்றோடொன்று பற்றிக்கொண்டு சம்பந்தப்பட்டு தொடர்ச்சியாய் நின்று விளங்குகிறது. (The principle of continuity) "காணப்படுகிறவைகள் அநித்தியமானவைகள், காணப்படாதவைகளோ நித்தியமானவைகள்." 2 கொ. 4. 18.

1. Our present happiness and misery depend on our behaviour and are foreseen. Our state is *put in our own power.*

இம்மையில் நம்முடைய சுகதுக்கங்களுக்கு நம்முடைய நடக்கையே காரணமாயிருக்கிறபடியால், மறுமையிலும் அப்படியே இருக்குமென்று உத்தேசித்து துக்கத்தை உண்டாக்கும் தீவினையை விட்டொழித்து, சுகத்தை உண்டாக்கும் நல்வினையை அநுசரித்து நடப்பதே நம்முடைய கடமை. நமக்குரிய இன்பதுன்பங்கள் நம்முடைய சுயாதீனத்திற்குட்பட்டிருக்கிறது; இன்பமும் துன்பமும் நம்முடைய நல்வினை தீவினையின்பயனுயிருக்கிறது. இன்னது செய்தால் இன்பமும், இன்னது செய்தால் துன்பமும் உண்டாகுமென்று ஏற்கனவே அறிந்திருக்கிறோம். இந்த அறிவை நம்மை உண்டாக்கின கர்த்தரே நமக்குள் அமைத்திருக்கிறார்.

(a) Life is preserved by our own care and attention.

கடவுள் நம்மை உண்டாக்கி நம்முடைய ஜீவரட்சணைக்கு வேண்டியவைகளையெல்லாம் படைத்திருந்தாலும், அவைகளைச் சம்பாதித்து அநுபவிக்கிறதற்கு நாம் முயற்சிசெய்து பிரயாசப்படவேண்டியதாயிருக்கிறது; அப்படிச் செய்யாமற்போனால் நமக்கு நஷ்டமுண்டாகும்.

(b) The possession of external good depends on exertion.

உற்சாகமும் முயற்சியும் இல்லாமல் நம்முடைய காரியங்களில் ஒன்றும் சித்திக்கிறதில்லை.

(c) Enjoyment (happiness) and misery are consequences of prudence, rashness, &c.

விவேகமும் ஜாக்கிரதையும் காரியசித்தியை உண்டுபண்ணும். அவிவேகமும் அஜாக்கிரதையும் நஷ்டத்தை உண்டுபண்ணும். துர்நடக்கையினால் அவமானமும் தரித்திரமும் வியாதியும் வியாகுலமும் அகாலமரணமும் நேரிடும்.

மனுஷர் செய்யும் தீவினைகளுக்கும், அவர்கள் அநுபவிக்கும் துக்கங்களுக்கும் கடவுள் ஏன் இடங்கொடுக்கிறார்? கொடாதிருந்தால் நலமாயிருக்குமல்லவா? என்று சிலர் ஆட்சேபிப்பார்கள். இது நம்முடைய புத்திக்கெட்டாத விஷயம். இதற்குத்தகுந்த உத்தரவு எளிதில் சொல்லமுடியாது. "இது உலகஇயல், இது திருவுளச்செயல், வேறு வழிவகை இல்லை, உள்ளதே தகுதி, கடவுள் இட்டதே சட்டம்" என்றுமாத்திரம் சொல்லத்தகும். மேலும் அமைக்கப்பட்டிருக்கிற உலகஇயலே மன்னுயிர் வாழ்வுக்கு ஏற்றதென்றும் சொல்லத்தகும். உண்மையும் உத்தமமுமாய் நடப்பவர்களுக்கே நன்மையும் சுகமும் பலிக்கிறது திருவுள ஏற்பாடாயிருக்கிறபடியால், நல்லோர்-பொல்லோர் யாவரையும் ஒரேசீராய் நடத்துவது தேவநீதிக்கும் தயவுக்கும் அடுத்ததல்ல. மேலும் மனுஷர் அநுபவிக்கும் சுகத்தினாலல்ல, அவர்களிடத்தில் விளங்கும் உத்தமத்தினாலேயே தேவனுக்கு மகிமையும் உலகத்துக்கு நன்மையும் உண்டாகும். மேலும் கடவுள் உலகத்தை ஆண்டுநடத்தும் வழியும் வகையும் நோக்கமும் முடிவும் சிற்றறிவாளராகிய நம்முடைய புத்திக்கு எட்டாதவைகளாயிருக்கிறபடியால், இவைகளை நாம் ஆராய்ந்து அறியும்படி தலையிடுவது குருடனானவன் வர்ண பரீட்சை செய்வதுபோலிருக்கும். என்றாலும் நல்வினை சுகத்தையும், தீவினை துக்கத்தையும் உண்டுபண்ணுமென்று நாம் ஏற்கனவே அறிந்திருக்கிறோம். "பெருமையுஞ் சிறுமை

Objection. 1. One may ask why, and wish that God had given happiness promiscuously; but, in answer, remember

(*a*) Such an arrangement may be impossible.

(*b*) The present plan may produce more happiness than any other.

(*c*) God's goodness may be a disposition to make (not all but only) the good happy.

(*d*) The *goodness* of moral agents may be more pleasing to God and better for the universe than mere happiness.

(*e*) The reason may be to us incomprehensible—as colours to the blind; and

(*f*) At all events the *fact* is (whatever

the reason), that happiness and misery do depend upon ourselves.

யும் தான்தரவருமே" என்று சொல்லியிருக்கிறபடி, நாம் செய்யும் நல்வினை தீவினைகளும், நாம் அநுபவிக்கும் சுகதுக்கங்களும் பெரும்பாலும் நம்முடைய சுயாதீனத்திலே இருக்கிறதென்பது நிச்சயம்.*

நல்வினைதீவினைகளினால் உண்டாகிற சுகதுக்கங்கள் உலக

Obj. 2. One may object that these consequences of behaviour follow, and are therefore to be ascribed to, *the course of nature*, and not to Divine appointment:

இயலுக்குரியது, அது கடவுளுடைய செயலல்லவென்று சிலர் ஆட்சேபிப்பார்கள். உலகஇயல் என்பது உணர்வற்ற அசித்துப்பொருளாகியகாரியத்தையல்ல, உணர்வுள்ள சித்துப்பொருளாகிய காரணத்தையே குறிக்கும். சகலத்தையும் ஆண்டுநடத்துகிற ஒரு காரணகர்த்தா இருக்கிறபடியால், சகலமும் ஒழுங்காய் நடத்தப்பட்டுவருகிறது.

(*a*) The course of nature means God acting uniformly; and if so, our foresight of the course is His gift.

இன்னின்ன காரணத்தினால் இன்னின்ன காரியம் சித்திக்குமென்று நாம் ஏற்கனவே அறிந்துகொள்ளும் அறிவை கடவுள் நமக்கு அநுக்கிரகித்திருக்கிறார். மனுஷர் தீமையை விலக்கி நன்மையைச் செய்து சுகத்தை அடையவேண்டுமென்பது கடவுளுடைய சித்தமும், நல்வினைக்கு இன்பமும் தீவினைக்குத் துன்பமும் பலிக்குமென்பது கடவுள் நியமித்த சட்டமும், அதை நாம் ஏற்கனவே அறியும் அறிவை அடைந்திருப்பது நாம் இன்னபடி நடந்துகொள்ளவேண்டுமென்று அவர் நமக்கு அருளும் எச்சரிப்புமாயிருக்கிறது.

(*b*) We ascribe all to God, and deem our foresight a warning and inducement given by Him.

---

* A man's deeds are the touch-stone of his greatness and littleness.

"பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தம்
கருமமே கட்டளைக் கல்." குறள்.

அவரவருடைய உயர்வையும் இழிவையும் அறிதற்குக் கருவி அவரவர் செய்தொழிலேயல்லாமல் வேறில்லையென்பதாம்.

நமக்குரிய ஆசாபாசங்களையெல்லாம் நிறைவேற்றுகிறதினால் இயல்பாய் இன்பம் உண்டாகிறபடியால், அந்த இன்பத்தின்பொருட்டு நம்முடைய ஆசாபாசங்களை நிறைவேற்றுகிறது தகுதியென்றும், அப்படிச் செய்வது அச்செயலுக்குரிய பலன் என்றும் சொல்லக்கூடுமோ? கூடாது. கண்ணுக்கு விஷயமாகிற பொருள்களைக் காணவே கண் உண்டாக்கப்பட்டிருக்கிறது, என்றாலும் கண்ணுக்கு விஷயமாகிற பொருள்களில் சிலது கண்ணுக்கு ஊனத்தை உண்டாக்குமாகில், அவைகளை உற்றுப் பார்க்கிறது தகுதியல்ல. சூரியவெளிச்சத்தினால் எல்லா வஸ்துக்களையும் பார்க்கிறோம்; என்றாலும் அந்தச் சூரியன் உச்சியில் ஏறும்போது அதைப்பார்த்தால் கண்கூசும், உற்றுப்ப்பார்த்தால் கண் அழிந்துபோம்.

(c) It may be asked, whether in every case, the pleasure following an act proves that God intended us so to act, and the answer is, No. It is a pleasant thing to behold the sun, and yet thereby the eye may be destroyed.

யாவருக்கும் விளங்கத்தக்க மேற்சொல்லிய நியாயங்களின்படி, நாம் நன்மைசெய்தால் இன்பமும், தீமைசெய்தால் துன்பமும் உண்டாகுமென்னும் உணர்வு நமக்குள் இருக்கிறபடியால், நாம் நியாயாதிபதிகளின் ஆளுகைக்கும் ஆக்கினைக்கும் உட்பட்டிருக்கிறபடியே கடவுளுடைய ஆளுகைக்கும் ஆக்கினைக்கும் உட்பட்டிருக்கிறோமென்றும், அவர் நம்முடைய நன்மைதீமைக்கடுத்தபடி நமக்கும் பலனளிக்கிறாரென்றும் அநுபவத்தினால் அறிந்துகொள்ளுகிறோம்.

2. The knowledge that happiness depends on our behaviour is of the essence of government, which is simply annexing consequences to acts, and giving notice of the arrangement.

நல்வினை தீவினைகளுக்குரிய பலனையும் தண்டனையையும் கடவுள்தாமே நேராய் அளித்து நாம் அதை உடனே அநுபவித்தாலும் சரி, சிலகாலம் பொறுத்து அநுபவித்தாலும் சரி, விதிவிலக்குகளெல்லாம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது நிச்சயம். அதின்படி

(a) Nor is it important that God should Himself and immediately execute His laws. They may execute themselves.

நடப்பது நமது கடமையாயிருக்கிறது. விதிவிலக்குகளும் அவற்றிற்குரிய பலனும் தண்டனையும் நிறைவேறுமற்போகாது.

(b) Even the lesser pains and pleasures which follow acts are instances of proper government; nor can this be denied without denying all final causes (design), of which such pains are examples.

கடவுள் ஆளும் ஆளுகையில் ஏதோ ஒரு கருத்தும் நோக்கமும் தோன்றுகிறபடியினால், மனுஷர் அநுபவிக்கும் இன்பதுன்பங்களும் ஏதோ ஒரு கருத்தும் நோக்கமும் நிறைவேறும்படியே நியமிக்கப்பட்டிருக்கிறதென்று விளங்குகிறதுமன்றி, மன்னுயிர் வாழ்வுக்கும் நன்மைக்குமென்றே விதிவிலக்குகளெல்லாம் நியமிக்கப்பட்டிருக்கிறதென்றும் விளங்குகிறது. "சூடுகண்ட பூனை அடுப்பங்கரையைச் சேராது" என்கிற பழமொழியின்படியே, நாம் அக்கினியில் கையிடுவதினால் சுடுகிறதை உணர்ந்து, அக்கினியில் தேகம் விழுந்து அழியாதபடிக்கு தேகத்தை அக்கினியினின்று காத்துக்கொள்ள அது ஒரு எத்தனமாயிருக்கிறதல்லவா? இவ்வித சொற்பகாரியங்களினால் பெரிய காரியங்களைப் பற்றி எச்சரிக்கையடைகிறோம்.

Conclusion. Hence, if told that God will reward and punish hereafter, still attaching consequences to acts; such a statement is in harmony with the whole present course of Nature, and so credible.

இதனால் உலகஇயலுக்குக் காரணரானவர் எல்லாவற்றையும் ஆண்டு நடத்தும் எஜமானாகிய ஆண்டவரென்று விளங்குகிறது. பெற்றோர், எஜமான்கள், அதிகாரிகள் முதலானவர்கள் எவ்விதமாய் தங்கள் பிள்ளைகள் வேலைக்காரர் குடிகள் முதலானவர்களை நயமும் பயமுமாய் சிட்சைரட்சை செய்து நடத்துகிறார்களோ, அப்படியே கடவுளும் புத்தியும் சித்தமுமுள்ள தம்முடைய சிருஷ்டிகளை நடத்துகிறார்.

உலகஇயல் இப்படியிருக்கிறபடியால், மனுஷர்கள் இம்மையில் செய்யும் நன்மைதீமைக்குத்தக்கதாய் கடவுள் மறுமையில் அவர்களுக்குப் பலனளித்துச் சிட்சைரட்சை செய்வாரென்னும் கொள்கை இயல்பான கொள்கையென்றே ஒத்துக்கொள்ளவேண்டும்.

சிலர் தேவதண்டனை உண்டென்னும் கொள்கையை ஒப்புக்கொள்ள மனதில்லாமல், அதைப் பற்றி ஆட்சேபிப்பார்கள். தீவினைக்குத் தண்டனை தற்காலத்திலும் இம்மையிலும் இயல்பாய் உண்டாகிறபடியே, தீவினைக்குத் தண்டனை பிற்காலத்திலும் மறுமையிலும் உண்டாகுமென்று வேதத்தினால் விளங்குகிறது.

B. We are under government by *punishment now*, and so may be *hereafter*.

இம்மையில் கிடைக்கும் தண்டனைக்கு ஒத்தபடியே மறுமையிலும் தண்டனை கிடைக்குமென்று சகல சமயத்தார்களும் சொல்லுகிறதைக் கவனிக்குங்கால், இம்மைக்கும் மறுமைக்கும் உரிய சுகதுக்கங்களைப்பற்றி சம்பந்தம் உண்டென்றும், அதை உணர்வதினால் மனுஷர்களுக்குக் கவலையும் பயமும் உண்டாகுமென்றும் விளங்குகிறது. பஞ்சமாபாதகங்களாகிய துரோகங்களினால்மாத்திரமல்ல, அவிவேகத்தினாலும் அஜாக்கிரதையினாலும் செய்யும் துர்க்கிர்த்தியங்களினாலும் துன்பமும் துக்கமும் தண்டனையும் உண்டாகிறது. தண்டனையை நற்குணத்தினால் நீக்கிக்கொள்ள ஏதுவிருந்தும், மனுஷர்கள் தங்கள் துர்க்குணத்தினால் தண்டனையைத் தங்கள் மேல் தாங்களே வருவித்துக்கொள்ளுகிறார்கள்.

1. Present punishments are analogous to future, of which religion (not only *revealed* but natural) speaks, in various respects:

இம்மையில் நாம் அநுபவிக்கும் சொற்ப பிரயோஜனத்திற்காகவும், அற்ப இன்பத்திற்காகவும் பெருந்துன்பத்தையும் கொடுந்துக்கத்தையும் அநுபவிக்கவேண்டியதாயிருக்கிறது. திருஷ்டாந்தமாக: குடிவெறியாகிய சிற்றின்ப களியாட்டு மதியை மயக்கி, வியாதியை உண்டாக்கி, அகாலமரணத்தைப் பிறப்பிக்கும். அற்ப இன்பம் பெருந்துக்கத்துக்குக் காரணமாகும். தண்டனைகள் சிலவேளைகளில் உடனேயும், சிலவேளைகளில் வெகுகா

(*a*) Both follow actions of present advantage or pleasure: ex. intemperance.

(*b*) They are often greater than the advantage or pleasure obtained by the acts they punish.

லத்துக்குப் பின்னும் சம்பவிக்கிறதுண்டு. செய்த செய்கைகள் மறக்கப்பட்டுப்போய், வெகுகாலம் சென்றபின் தண்டனை விடாமல் வந்து உறுத்தும். தண்டனை தாமதிப்பதினால் ஆக்கினை நேரிடாதென்றும், காலதாமசத்தினால் விமோசனம் உண்டாயிற்றென்றும் சொல்ல ஏதுவில்லை.

(c) They are often long delayed and yet come.

தீவினைக்கு உடனே தண்டனை நேரிடாததினால் பாவிகள் துணிவுகொண்டு, பாவ இன்பத்தினால் வரும் துன்பத்தை நினையாமல் தண்டனைக்குத் தப்புவோமென்று அகங்கரித்திருக்கிறார்கள். தண்டனை உடனே நேரிடாமல் தாமதித்து நேரிட்டாலும், அது நினையாதநேரத்தில் வந்து நேரிட்டு வருத்தும் என்பதற்குச் சந்தேகமில்லை. இன்ன தீவினைக்கு இன்ன தண்டனை நேரிடுமென்று பாவிகள் முன்னதாக அறிந்திருந்தும், பாவத்தைச் செய்யும்போது மதிமயக்கினால் அதை உணராதிருக்கிறார்கள். பாலியத்தில் செய்யும் தீவினையின் பயன் முதிர்வயதில் தோன்றும். காலமும் சமயமும் அறிந்து நாம் முயற்சிசெய்யாமற்போனால் காரியம் சித்திக்காது; கடந்துபோன காலமும் சமயமும் மறுபடியும் வந்து நேரிடாது. சமயத்தை உபயோகப்படுத்திக்கொள்ளாதவர்கள் பின்னுக்கு நஷ்டத்தை அடைவார்கள். காலம் அறிந்து விதைக்காத குடியானவன் வருஷமுழுதும் நஷ்டப்படவேண்டும். பாலியத்தில் மதிகெட்டுத் தகாதவிதமாய் நடந்து, பொருளையும் சுகத்தையும் கீர்த்தியையும் இழந்துபோனவர்கள், மனமாறி தக்கபடி நடந்துகொண்டால், இழந்துபோன பொருளையும் சுகத்தையும் கீர்த்தியையும் ஒருவாறு சம்பாதித்துக்கொள்ள ஏதுவுண்டு; என்றாலும் இளமையில் விதைத்ததே முதுமையில் அறுக்கப்படும். அவனவன் செய்த பாவத்தின் பயன் நிழல்போல்

(d) They often come not gradually but suddenly.

(e) They are never *certainly* foreseen, and seldom thought of at the time of the act.

(f) Opportunities once lost are never recalled.

அவனவனைத் தொடர்ந்து நிற்கும். துர்க் குணத்துக்கும் துர்நடக்கைக்கும் ஒரு மட்டுண்டு. அந்த மட்டுமிஞ்சினால் மனமாறி குணப்பட்டு சீர்ப்பட உதவிராது.

(g) They are often, after a time, beyond alleviation by repentance.

பெருங்குற்றங்களை அகங்கரித்துச் செய்வதினால்மாத்திரமல்ல, நல்விஷயங்களைப்பற்றிக் கவனமில்லாமலும், தர்மகாரியங்களைப்பற்றி அஜாக்கிரதையாயும் இருக்கிறதினாலும் துன்பமும் தண்டனையும் நேரிடும். மேலும் தேச ஆளுகைக்கடுத்த நியாய ஏற்பாடுகளுக்குத்தக்கதாய் தண்டனைகளும் விதிக்கப்பட்டிருக்கிறது. "துஷ்ட நிக்கிரகம் சிஷ்டபரிபாலனம்" என்பது தேச ஆளுகைக்கடுத்ததாகையால், கொலைபாதகத்தைச் செய்கிறவர்கள் கொலைசெய்யப் படவேண்டியது. சிற்றின்ப உல்லாசத்தில் உழன்று கெட்டுப் போகிறவர்களுக்கு கொடுந்தண்டனையே நேரிடும். குற்றவாளிகள் தண்டிக்கப்படுகிறதினால் மற்றவர்களுக்கு எச்சரிப்பு உண்டாகும். சன்மார்க்கனுக்கு நன்மையும் துன்மார்க்கனுக்குக் கேடும் உண்டாகுமென்பதற்குச் சந்தேகமில்லை.*

(h) They follow neglect or thoughtlessness as well as passion.

(i) They are sometimes final and irremediable.

இப்பொழுது நாம் திருஷ்டாந்தங்களாக எடுத்துச் சொல்லிய காரியங்கள் யாதாமொருகாலத்தில் ஏகதேசமாயும் அபூர்வமாயும் நடக்குங் காரியங்களாயிராமல், நாடோறும் நம்முடைய கண்முன்னே நடக்குங் காரியங்களாயிருக்கிறது. கடவுள் உலகத்தை ஆண்டு நடத்தும் விதிவிலக்குகளினால் இவைகள் சம்பவிக்கிறது என்று காண்கிறோம்.

2. Further note concerning them:

(a.) That they are not accidental or occasional, but matters of daily experience.

இம்மையும்-மறுமையும் இயலும்-அருளும் சம்பந்தப்பட்டிருக்கிறபடியால், மறுமையில் பாவிகளுக்கு உண்டாகும் தண்டனையைப் பற்றி சத்தியவேதம் சொல்வதை யாவரும் ஒத்துக்கொள்வார்கள்:

(b) The present and the future are so analogous that both may be described in the same words. (Prov. ch. 1.)

* ஏசா. 3. 10, 11.

நீதிமொழி என்னும் வேதாகமத்தில் ஞானமானது உலகமக்களுக்கு இம்மை மறுமையைப்பற்றிச் சொல்வதென்னவென்றால்: "ஞானமானது வெளியே நின்று கூப்பிடுகிறது, வீதிகளில் சத்தமிடுகிறது. அது சந்தடியுள்ள தெருக்களின் சந்திலும் ஒலிமுகவாசலிலும் நின்று கூப்பிட்டு, பட்டணத்தில் தன் வார்த்தைகளை வசனித்துச் சொல்லுகிறது: பேதைகளே, நீங்கள் பேதைமையை விரும்புவதும், நிந்தனைக்காரரே, நீங்கள் நிந்தனையில் பிரியப்படுவதும்; மதியீனரே, நீங்கள் ஞானத்தை வெறுப்பதும் எதுவரைக்கும் இருக்கும். என் கடிந்துகொள்ளுதலுக்குத் திரும்புங்கள்; இதோ, என் ஆவியை உங்களுக்கு அருளுவேன், என் வார்த்தைகளை உங்களுக்குத் தெரிவிப்பேன்" என்று சொல்லுகிறது. அந்த ஞானத்தின் எச்சரிப்பை மனுமக்கள் கேட்காமல் அவமதிக்கிறபடியால், அது அவர்களை நோக்கி: "நான் கூப்பிட்டும், நீங்கள் கேட்கமாட்டோம் என்கிறீர்கள்; நான் என் கையை நீட்டியும் கவனிக்கிறவன் ஒருவனும் இல்லை. என் ஆலோசனையையெல்லாம் நீங்கள் தள்ளி, என் கடிந்துகொள்ளுதலை வெறுத்தீர்கள். ஆகையால், நானும் உங்கள் ஆபத்துக்காலத்தில் நகைத்து, நீங்கள் பயப்படுங் காரியம் வரும்போது ஆகடியம்பண்ணுவேன். நீங்கள் பயப்படுங் காரியம் புசல்போல் வரும்போதும், ஆபத்து சூறாவளிபோல உங்களுக்கு நேரிடும்போதும், நெருக்கமும் இடுக்கணும் உங்கள்மேல் வரும்போதும், ஆகடியம் பண்ணுவேன். அப்பொழுது அவர்கள் என்னை நோக்கிக் கூப்பிடுவார்கள், நான் மறுஉத்தரவு கொடுக்கமாட்டேன்; அவர்கள் அதிகாலையிலே என்னைத் தேடுவார்கள், என்னைக் காணமாட்டார்கள்" என்றும் சொல்லுகிறது. இந்த வாக்கியம் உபமான கல்பனை அலங்காரமாயிருந்தாலும், அதனால் உணர்த்தப்பட்ட பொருள் வெளிப்படையாயிருக்கிறது. அதன் பொருள் இன்னும் தெளிவாய் விளங்கும்படி: "அவர்கள் அறிவை வெறுத்தார்கள், கர்த்தருக்குப் பயப்படுதலைத் தெரிந்துகொள்ளாமற்போனார்கள். என் ஆலோசனையை அவர்கள் விரும்பவில்லை; என் கடிந்துகொள்ளுதலையெல்லாம் அசட்

டைபண்ணினூர்கள். ஆகையால் அவர்கள் தங்கள் வழியின் பலனைப் புசிப்பார்கள்; தங்கள் யோசனைகளினால் திருப்தியடைவார்கள். பேதைகளின் மாறுபாடு அவர்களைக் கொல்லும், மூடரின் நிர்விசாரம் அவர்களை அழிக்கும். எனக்குச் செவிகொடுக்கிறவன் எவனோ, அவன் விக்கினமின்றி வாசம்பண்ணி, ஆபத்திற்குப் பயப்படாமல் அமைதியாயிருப்பான்" என்றும் சொல்லுகிறது.* ஞானமானது இம்மை–மறுமையில் உண்டாகும் பலனையும் தண்டனையையும் பற்றி இவ்வாக்கியத்தில் சொல்லும் நியாயங்கள் உலகஇயலுக்கும் வேதஅருளுக்கும் ஒத்திருந்து அவ்விரண்டிற்குமுரிய சம்பந்தத்தை ஒப்புமைநியாயத்தால் விளங்கப்பண்ணுகிறது.

(c) So close is the analogy, that when once a future punishment is proved (by its proper evidence), nothing can so fully impress it on the mind as to note the facts above named.

மறுமையைப்பற்றியும் அதற்குரிய சிட்சைரட்சையைப் பற்றியும் உண்டாயிருக்கிற திருஷ்டாந்தங்களை நாம் கவனிக்கும்போது, மனுஷர் செய்யும் பொல்லாப்பையும் துஷ்டத்தனத்தையும் அடக்க நயமும் பயமுமான பற்பல கண்டனங்களும் எச்சரிப்புகளும் உண்டாயிருந்தபோதிலும், மனுஷர் பெரும்பாலும் அவைகளைக் கவனியாமலும் மதிக்காமலும் இருக்கிறார்கள். தீவினைசெய்யேல், செய்தால் பாவமும் பழியும் விளையும் என்னும் உணர்வைத் தங்கள் சொந்தமனமே தங்களுக்கு உணர்த்தினாலும், தீதொழிய நன்மைசெயல் என்பது எல்லா சமயத்தாரின் கொள்கையாயிருந்தாலும், பாவத்தினால் மற்றவர்கள் கெட்டுப்போகிறதை கண்ணாலே கண்டிருந்தாலும், பாவத்தினால் தங்களுக்கே நேரிடுகிற விபத்துக்களைத் தாங்களே உணர்ந்திருந்தாலும், ஞானவான்களும் புத்திமான்களும் நல்வழிக்கடுத்த புத்திமதிகளை உபதேசித்தாலும், பாவிகள் அகங்கரித்து, இவைகளை இகழ்ந்து பழித்துப்பேசுவார்கள். மனமறிந்து பாவஞ்செய்யும் இவ்வித பாதகருக்கு இம்மையில் மனமாறுதலும் சுகமும் மறுமையில் பாவநிவிர்த்தியும் இன்பமும் இராது.

* நீதி. 1. 20—33.

மனுஷருடைய துர்க்குணத்துக்கும் துர்நடக்கைக்கும் தக்க தண்டனை எப்பொழுதும் இம்மையில் சரிக்கட்டப்படுகிறதில்லை. என்றாலும் நேரிடுகிற தண்டனைகள் பாவிகளை எச்சரிக்கப் போதுமான தண்டனைகளாயிருக்கிறது.

(d) Present punishments, however, are not always, it must be admitted, in proportion to misbehaviour, still they are sufficient.

சிலர்: மனுஷர்கள் பலவீனமானவர்கள், மனதை மயக்கும் பல சோதனைகளுக்கு ஏதுவானவர்கள், அவர்கள்மேல் குற்றஞ்சுமத்துவதும் அவர்களைத் தண்டிப்பதும் நியாயமல்லவென்றும், மனுஷர்கள் தங்கள் தலையில் எழுதப்பட்ட விதியின்படி நடக்கிறதினால் அவர்களைத் தண்டிக்கிறது நியாயமல்லவென்றும், இரக்கமுள்ள கடவுள் பாவிகளை தண்டிப்பது நியாயமல்லவென்றும் சொல்லுவார்கள். இவைகளெல்லாம் வீண்போக்கு; மனுஷர் செய்யும் பாவத்திற்கு தண்டனை நேரிடுகிறது இயல்பான காரியம்; ஆகையால் இவ்விஷயத்தில் நம்முடைய குயுக்தியான நியாயங்கள் ஒன்றிற்கும் உதவாது.

1. To answer objections founded either on the imagination that our frailty or temptation will excuse us; that we are *necessary* (fated) agents, and so guiltless; or that God is incapable of offence; and

மறுமையையும் அதில் அடையப்போகிற தண்டனையையும் கவனிக்கும்போது, மதவிஷயத்தில் பக்தியும் வைராக்கியமுமில்லாதவர்களுக்கும் பயமுண்டாகும். தேவனையும் மறுமையையும் இனிவரும் தண்டனையையும் கண்டது யார் என்று நாஸ்திகர் பேசுவது போல, இக்காலத்தில் அநேகர் அகங்கரித்துப் பேசத் துணிகிறபடியால், இந்த வீண்துணிவையும் அதனால் உண்டாகும் நஷ்டத்தையும் எடுத்துக் காட்டுவதும் தங்கள் இஷ்டப்படி நடக்கிற துஷ்டரைக் கண்டித்து அவர்களுக்கு உண்மையை உணர்த்துவதும் சான்றோர் கடமையாம்.

2. To create a serious apprehension of future punishment, and to rebuke presumption, scepticism, false security, and licentiousness.

# CHAPTER III.

*On the moral government of God.*

# 3-ம் அதிகாரம்.

## உலகத்தை நியாயமும் நீதியுமாய் ஆண்டு நடத்தும் கடவுளுடைய தர்ம ஆளுகையைப்பற்றிச் சொல்லியது.

*உலகஇயல் நடத்தப்படும் ஒழுங்கில் பற்பல பிரயத்தனங்களும் நோக்கங்களும் காணப்படுகிறபடியால், இந்த உலகஇயல் ஞானமுள்ள காரணகர்த்தாவினால் நடத்தப்படுகிறதென்று விளங்குகிறதுமல்லாமல், அவரால் உண்டாக்கப்பட்ட மனம்-புத்தி-சித்தமுள்ள சிருஷ்டிகள் அநுபவிக்கும் சுகதுக்கங்களும் தற்செயலாய் அல்ல, தெய்வாதீனமாய் உண்டாகிறதென்றும் விளங்குகிறது. கடவுள் உலகத்தை ஆண்டுநடத்தும் இயல்பான ஆளுகையானது, ஒரு எஜமான் தன் ஊழியக்காரர் செய்யும் நல்வினை தீவினைகளுக்குப் பலனளித்து நடத்தும் ஆளுகையைப்போலிருக்கிறது.*

In ch. ii. the fact of *natural* government was proved. Here it is intended to prove that we are not under a tyrannical or capricious, but under a *moral* or righteous government.

*நீதிதவறுமல் செங்கோல் செலுத்தி, நயமும் பயமுமாய் நடத்தி, சிட்சைரட்சைசெய்து, நல்லோருக்குப் பலனளித்து தீயோரைத் தண்டித்து, துஷ்டநிக்கிரகம் சிஷ்டபரிபாலனஞ்செய்வதே நீதியான தர்ம ஆளுகையாம். நல்வினை-தீவினையாகிய செய்கைகளை நோக்கிமாத்திரமல்ல, அவைகளுக்கு ஆதாரமாகிய குணாகுணங்களையும்*

A. 1. What is *moral* government? It implies the rewarding of *virtue*, and the punishment of vice; perfect moral government consists in an exact distribution of each.

நோக்கிப் பாரபட்சமில்லாத நடுவுநிலைமை விளங்க நல்லோ ரைப் புகழ்ந்து தீயோரை இகழ்ந்து குறைவற்ற பிரதிபலன் அளிப்பதே பூரண தர்மஆளுகையாம்.

2. Some hold that the character of God is that of *simple benevolence*. But this is not probable; for,

பேரருளாகிய அன்புடைமையே கட வுளுடைய குணம் என்றும், யாவருக்கும் தயை அநுக்கிரகிப்பதே அவருடைய செயல் என்றும் சிலர் சொல்லுவார்கள்.

"சமஞ்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற் கோடாமை சான்றோர்க் கணி"

என்று மனுஷரைப்பற்றிச் சொல்லப்படுமாகில், இப்பெருந் தன்மை கடவுளிடத்தில் விசேஷமாய் விளங்கவேண்டியதல்லவா? அவர் பட்ச பாதமில்லாத அன்புடையோராகையால், அவரிடத்தில் சத்தியமும் நீதியும் குறை வின்றி விளங்கும். நீதியும் இரக்கமு முள்ள கடவுள் தம்முடைய சிருஷ்டிக ளுடைய சுகத்தை நாடி அவர்களை நடத்துகிறதுமல்லாமல், அவர்களுடைய குணகுணங்களையும் நாடி அவர்களை நடத்து கின்றார். உலகத்தைப் படைத்துக் காத்து ஆண்டு நடத்தும் எப்பொருட்கும் இறைவனான அறவாழி வேந்தனாகிய நீதி நாயகருடைய தன்மையையும் செயலையும் விளக்குவிக்கும் குணங்களாகிய லட்சணங்களெல்லாம் பூரணமாயும் சமமாயும் இருக்கும். ஆதலால் உலகஇயலை நடத்துவதில் கடவுளுடைய அன்பென்னும் குணமாத்திரமல்ல, சத்தியம் ஞானம் நீதி என்னும் குணங்களும் அன்போடு சமரசப்பட்டு விளங்கும்.

(*a*) This supposes that moral conduct is not regarded for its own sake, and so gives no place for *veracity* and justice, except as forms of benevolence.

சற்பாத்திரரான சிறந்த சிருஷ்டிகள் விஷயத்தில் கடவுள் அன்புள்ளவராகவே விளங்கினாலும், அ பாத்திரரான பாவிகளாகிய நம்முடைய விஷயத்திலும் அவர் அன்போடுகூடிய சத்தியம் நீதி ஞானமுதலிய குணங்களுள் ளவராய் விளங்குகிறார். அவர் ஆண்டவர், நாம் அடியார்; அவர் இட்டதே நமக்குச் சட்டம்; அவருடைய

(*b*) And though perhaps God is purely benevolent to holy beings, yet He is *to us* as we see, a Governor, and so a moral one.

விதிவிலக்குகளைக் கைக்கொண்டு அவருக்கு அடங்கிநடப்பதே நம்முடைய கடமை.

இந்த உலகத்தை ஆண்டுநடத்தும் தெய்வசெயலில் விளங்கும் நீதியானது எல்லாவிஷயங்களிலும் குறைவற்ற பூரணநீதியாய் நம்முடைய சிற்றறிவுக்கு விளங்காமற்போனாலும், இம்மையில் நீதியான செங்கோல் பெரும்பாலும் செலுத்தப்பட்டு வருகிறதென்றும், இம்மையில் குறைவாயும் கருதலாயும் விளங்கும் நியாயங்கள் மறுமையில் பூரணமாயும் தெளிவாயும் விளங்குமென்றும் தோன்றுகிறது. தர்மமே இவ்வுலகத்தை ஆண்டு நடத்திவருகிறதென்றும், தர்மத்தின் பண்பும் பயனும் இன்னதென்றும் விசாரிப்பதே இந்த அதிகாரத்தின் நோக்கம்.

3. It is admitted that the moral government of God here is not perfect. The business of this chapter is to ascertain how far it exists, and what are likely to be its results.

இவ்வுலகத்தில் நல்வினையினால் இன்பமும் தீவினையினால் துன்பமும் அநுபவிக்கப்படுகிறது இயல்பானகாரியம். மனுஷர் அநுபவிக்கும் சுகதுக்கங்கள், நயநஷ்டங்களெல்லாம், நல்வினைதீவினைகளின் பயனென்பதற்கு அவர்களுடைய மனமும் அநுபவமுமே சாட்சி. மனுஷர் வெட்கங்கெட்ட காரியங்களைத் துணிந்து செய்வார்களானால், அதனால் வரும் பழியையும் நிந்தையையும் துக்கத்தையும் சகித்துத் தீரவேண்டியதாகும். "தன்வினை தன்னையே சுடும்." "அறத்தால் வருவதே இன்பம்;" இவை முதலான திருஷ்டாந்தங்களினால் தர்மமே உலகத்தை ஆண்டு நடத்துகிறதென்று பிரத்தியட்சமாய் விளங்கினாலும் நல்வினை தீவினைகளுக்குத்தக்க பலாபலன்கள் இம்மையில் சில சமயங்களில் உடனே பலிக்காமல் தாமசப்பட்டு பலிப்பதுமுண்டு; சிலசமயங்களில் நல்லவர்கள் துன்பத்தையும் பொல்லாதவர்கள் இன்பத்தையும் அடைவதுமுண்டு.

4. It is not intended to reason here from the presages of conscience, nor from the nature of things, nor from the greater degree of happiness of virtue over vice (which it is difficult to estimate) but on other grounds

B. A moral government, present and future, is argued from the following facts:

ஆகையால் பின்வரும் நியாயங்களினால் தர்மஆளுகையின் உண்மையை நாட்டுவோம்.

I. God is a Governor, as we have seen (ch. ii.), and so probably a moral Governor. Such a conclusion at least falls in with our sense of things.

Distributive justice.

I. கடவுள் தாமே விதித்த பிரமாணத்தின்படி உலகத்தை ஆண்டுநடத்தி, நல்வினை தீவினைகளுக்குத்தக்க பலனை அளித்து, துஷ்டநிக்கிரகம் சிஷ்டபரிபாலனஞ் செய்துவருகிறாரென்று உலகஇயலில் விளங்குகிறது. அவர் இம்மையில் செய்கிறபடியே மறுமையிலும் செய்வாரென்பதும், மறுமையில் நல்லவர்கள் சுகத்தையும் பொல்லாதவர்கள் துக்கத்தையும் அநுபவிப்பார்களென்பதும் கடவுளுடைய நீதிவழுவாத நடுவுநிலைமை உண்டென்று திருஷ்டாந்தப்படுத்துகிறபடியால் தர்மஆளுகை உண்டென்று விளங்குகிறது.*

II. Prudence and imprudence (lower forms of virtue and vice), are rewarded and punished; and this is a moral arrangement.

II. நம்மையும் நம்முடைய காரியங்களையும் விவேகமாய் நடத்துவதினால் இன்பமும் திருப்தியும் இயல்பாய்ப் பயன்படும்; நம்மையும் நம்முடைய காரியங்களையும் அவிவேகமாய் நடத்துவதினால் துன்பமும் துக்கமும் இயல்பாய்ப் பயன்படும். மனமறியச் செய்யப்படும் தீமைகள் கேடுண்டாக்குமென்பதற்குச் சந்தேகமில்லை. பிள்ளைகளை நயமும் பயமுமாய் நடத்தி சிட்சை ரட்சைசெய்து சீராய் வளர்ப்பது விவேகமான காரியமென்று யாவரும் ஒத்துக்கொள்ளுவார்கள். அப்படியே கடவுளும் தம்முடைய சிருஷ்டிகளாகிய பிள்ளைகளையும் நடத்திவருகிறார். விவேகமான நற்செய்கைகளுக்குப் பலனும், அவிவேகமான துர்ச்செய்கைகளுக்கு தண்டனையும் நடக்கிறபடியால் தர்ம ஆளுகை உண்டென்று விளங்குகிறது.

* பிரசங்கியின் ஆகமம், 8. 12, 13. வசனம்.

III. கொலை-களவுமுதலான தீவினைகள் உலகத்தாருக்கு இடைஞ்சலுண்டாக்குகிறபடியால், அவைகள் தண்டிக்கப்படவேண்டியது அவசியம். இவ்வித தீவினைகளைச் செய்கிறவர்கள் கண்டுபிடிக்கப்பட்டால் தண்டிக்கப்படுவார்களென்கிற பயம் அவர்களுடைய உள்ளத்திலே இயல்பாய் உண்டாகிறது. இவ்வித பயமும் ஒருவித தண்டனையாயிருக்கிறபடியால் இதுவும் தீவினைக்கு ஒரு தடையும், தர்மத்துக்கு ஒரு ஏதுவுமாயிருக்கிறது. உலகத்தார் ஒத்துவாழுகிறதற்குத் தடையாயிருக்கிற பொய்-அநியாயம்-கொடுமைமுதலான குற்றங்கள் தண்டிக்கப்படாவிடில், ஜனங்களுக்கு இடையூறாயிருந்து விக்கினத்தை உண்டுபண்ணும். அப்படியே நீதிவழுவாத கடவுளின் செங்கோல் விளங்கும்படி குற்றவாளிகள் தண்டிக்கப்படுகிறது நியாயமாயிருக்கிறதுமல்லாமல், அது கடவுளுடைய கட்டளையினால் உண்டாகும் ஆக்கினையாயும் இருக்கிறது. மனுஷர் தங்கள் நடக்கைக்கு உத்தரவாதிகளாயிருக்கிறபடியால், அவர்கள் அடக்கமுடையவர்களாய் விவேகத்தோடு நடந்துகொள்ளவேண்டுமென்று விளங்குகிறது.

III. Vice is punished, as mischievous to society, by penalties, and by the fear of them (itself a kind of punishment).

(a) This punishment, moreover, is natural; and

(b) Of God's appointment.

மருள்கொண்ட மதவைராக்கியமுள்ளவர்கள் யாதொரு தீமையையுஞ் செய்யாத நல்லவர்களைத் துன்பப்படுத்துகிறதும், துன்பப்படுத்துகிறவர்கள் புகழப்படுவதும் உண்டென்றும், துஷ்டர்கள் பெரிய உத்தியோகங்கள் செய்து செல்வமாய் வாழுகிறார்களென்றும், இப்படிப் பட்டவர்கள் தண்டிக்கப்படக் காணோமென்றும் சொல்லி, இது நியாயமா என்று சிலர் ஆட்சேபிப்பார்கள். இவ்விதமான தண்டனைகள் நியாயமான தண்டனைகளல்ல, அதனால் பிரஜைகளுக்கு யாதொரு அநுகூலமுமில்லை,

(c) It may be objected to this that good actions are punished (as in persecution.)

(1.) Such punishment is in no sense necessary to society, and so not natural.

(2.) Good actions are never punished, but through mistake.

அது இயல்புக்கு விரோதமானது;. . அறிவீனத்தினாலும், வீண் வைராக்கியத்தினாலும், அகங்காரத்தினாலும் இவ்வித ஆக்கினைகள் நேரிடுவதால் இவைகள் புத்திமான்களால் இகழப்படத்தக்கதாயிருக்கும். இவ்வித மாறுபாடுகள் சிலவேளைகளில் நேரிட்டாலும், இவைகள் உலகஇயலை நடத்துகிறவருடைய செயலாயிராமல், மதியீன அகங்காரிகளுடைய செயலென்றே மதிக்கவேண்டும். பிரஜைகளுடைய இகபர நலத்துக்கும் சுகத்துக்கும் ஏதுவாயிருக்கும் நலமான காரியங்களைப் புகழ்ந்து அதற்குப் பலனளிப்பதும், தீமையான காரியங்களை இகழ்ந்து அதற்கு தண்டனையிடுவதும் உலகஇயலை நடத்துகிறவருடைய செயலாயிருக்கிறபடியாலும், ஆகாரம் உயிரைக் காப்பாற்றுகிறதுபோல தர்மம் உலகத்தைக் காப்பாற்றுகிறபடியாலும், தர்ம ஆளுகை உண்டென்று விளங்குகிறது.

IV. Vice is punished *as vice*, and virtue rewarded *as virtue*; where note,

IV. உலகஇயலில் நல்வினையென்னும் புண்ணியத்துக்குப் பலனும், தீவினையென்னும் பாவத்துக்குத் தண்டனையும் நேரிடுவது சகஜமாயிருப்பதினால், தர்மஆளுகை ஸ்தாபிக்கப்பட்டு, எல்லாம் தர்மமாய் நடத்தப்பட்டு வருகிறதென்றும் விளங்குகிறது. கடவுளால் செலுத்தப்பட்டுவரும் இந்த தர்மஆளுகையானது நம்முடைய சிற்றறிவுக்குப் பூரணமாய் விளங்காமற்போனாலும், தர்மமே உலகத்தைக் காத்துநடத்துகிறதென்பதற்குச் சந்தேகமில்லை.

(*a*) This statement implies that an action may have one effect, and the *quality* of an action another, (*gain* for ex, as gain, brings pleasure: gain, as dishonest gain, brings misery).

இவ்விஷயத்தை விபரமாய் அறிந்துகொள்ளும்பொருட்டு செய்வினையையும், அதற்குரிய குணகுணங்களையும், செய்வினை நோக்கத்தையும், அதனால் உண்டாகும் பயனையும் பகுத்தறியவேண்டும். நமக்குரிய சரீரசம்பந்தமான இயற்கை இச்சைகளை அநுபவிப்பதினாலும், சரீரசுகத்தின்பொருட்டுப் பொருளைச் சம்பாதிப்பதினாலும் மன

திற்கு ரம்மியமும் இன்பமுமுண்டு. இயற்கைக்கு விரோதமாய் கிரமந்தப்பி மிதமின்றி நடத்துகிற இச்சைகளும், அநியாயமாய்ச் சம்பாதிக்கப்பட்ட பொருளும் இன்பத்தையல்ல துன்பத்தையே உண்டாக்கும். பசியை ஆற்றுவது இயல்பும் நியாயமுமாயிருக்கிறது, அதினால் இன்பமுமுண்டு. பிறர் உணவை அபகரித்துப் பசியை ஆற்றுவது இயல்பல்ல, அது அநியாயம், அதினால் துன்பம் உண்டாகும்.

(b) It affirms that virtue brings advantages to the virtuous; and vice, evils to the vicious; and the following are examples:

நல்வினை தீவினையாகிய விதிவிலக்குகளுக்கு அடங்கி நடப்பதே தர்மமும், அவைகளை மீறி நடப்பதே அதர்மமுமாம். நல்வினை இன்பத்தையும், தீவினை துன்பத்தையும் உண்டுபண்ணும். நல்வினை செய்வோருக்கு அமைவும் சமாதானமும் சந்தோஷமுமுண்டு, தீவினை செய்வோருக்குத் துயரமும் சஞ்சலமும் வியாகுலமுமுண்டு. நல்வினைதீவினையின் பயனை உணர்ந்து மறுமையை நோக்கி அறநெறியில் நிற்கும் தர்மவான்களுக்கு இம்மையில் தீவினையைப்பற்றியிருந்த அச்சமும் நல்வினையைப்பற்றியிருந்த அமைவும் உண்டென்பதற்குச் சந்தேகமில்லை. இதுவும் தர்மம் உலகத்தை ஆளுகிறதென்பதற்கு ஒரு அத்தாட்சி.

(1.) In our own temper, virtue produces peace; vice, vexation, selfreproach.

(2.) Nor ought the *present* fear of future punishment to be left out of this view, and the present peace in prospect of future happiness.

நல்லவர்கள் தங்கள் உத்தமகுணத்தினிமித்தமும் நல்லொழுக்கங்களினிமித்தமும் உத்தமர்களால் புகழப்பட்டு நற்பலன் அடைகிறார்கள். உலகத்தாரும் தாங்கள் எப்படிப்பட்டவர்களாயினும், பெரும்பாலும் நல்லவர்களையே அபிமானித்துத் துஷ்டர்களைப் பழித்து இகழுவார்கள். நீதி-உண்மை, தயவு-இரக்கம், தைரியம்-வீரியம், சுதேச

(3.) In common life, virtue has rewards, and vice punishments; a virtuous man being befriended because of his character; and in public life advantages are the natural rewards of fidelity,

patriotism &c, as such; while external annoyances often follow vice.

நேசம், பரோபகாரம் முதலான நற்குண சீலர் சாதாரண பிரஜைகளால்மாத்திர மல்ல, ராஜாங்கத்தாராலும் மதிக்கப்பட்டு கனமும் புகழும் மேன்மையும் அடைகிறார்கள். அநீதி கொடு மைமுதலிய துர்க்குணமுள்ளவர்கள் தாழ்வும் இகழ்வும் நஷ்ட மும் அடைகிறார்கள். உபகாரத்துக்கு அபகாரஞ்செய்வதும், செய்நன்றி மறப்பதும் துரோகம் என்று யாவரும் ஒத்துக் கொள்ளுவார்கள். இதுவும் தர்மஆளுகை உண்டென்பதற்குத் திருஷ்டாந்தமாகும்.

(4.) In domestic government, children and others are rewarded for veracity, &c, and punished for falsehood.

மேலும் இல்லறதர்மத்தில் பிள்ளைகள் வேலைக்காரர் முத லானவர்கள் மெய்யைச்சொல்லி அடங்கி நடந்தால் அவர்களை அரவணைத்து அபி மானித்து அவர்களுக்குப் பலன் அளிக் கிறதும், அவர்கள் பொய்யைச்சொல்லி அடங்காத துஷ்டர்களாய் நடந்தால் அவர்களை இகழ்ந்து சிட்சித்து தண்டிக்கிறதும் சகஜமான காரியமே.

(5.) In civil government, though law regards *actions* chiefly, yet the viciousness of the actor, or the opposite, will often secure the infliction of the penalty, or induce men to remit it.

ராஜாங்கதர்மத்தில் துர்க்குணத்துக்கு அல்ல துர்ச்செய்கைக்கே தண்டனை நிய மிக்கப்பட்டிருந்தாலும்,குற்றவாளி பேர் போன துஷ்டனுயிராவிடில் அவன் குற்றம் மன்னிக்கப்படுகிறதும், அவன் பேர்போன துஷ்டனாயிருந்தால் அவன் குற்றம் மன்னிக்கப்படாதிருக்கிறதும் உண்டு.

(*c*) The conclusion to which these facts lead is that, as our moral nature is a proof that we are under moral government, and will be finally treated as responsible, so ex-

நமக்குள்ளேயே நமக்குத் தோன்றுகிற நல்வினை தீவினை யின் பயனுமன்றி, பிறர்செய்யும் நல் வினை தீவினையின்பொருட்டு நமக்குத் தோன்றுகிற விருப்பும்-வெறுப்பும் நாம் கடவுளுடைய தர்மஆளுகைக்குட்பட் டிருக்கிறோமென்றும், அவருடைய விதி விலக்குகளைக் கைக்கொண்டு நடக்கக்

கடவுளிகளாயிருக்கிறோமென்றும், நாம் செய்யும் நல்வினை தீவினைக்கு உத்தரவாதிகளாயிருக்கிறோமென்றும், அதற்கு நம்முடைய மனமே சாட்சியாயிருக்கிறதென்றும், இந்தச் சாட்சியைக் கடவுள்தாமே நமக்குள் அமைத்திருக்கிறாரென்றும் விளங்குகிறது.

amples justify this reasoning, and prove an existing moral government.

நல்வினை பலன்பெறுகிறதற்கும், தீவினை தண்டிக்கப்படுகிறதற்கும் காரணம் என்னவெனில், நாம் செய்யும் நல்வினைக்கும் நம்முடைய மனச்சாட்சிக்கும் ஒற்றுமை இருக்கிறதினாலும், நாம் செய்யும் தீவினைக்கும் நம்முடைய மனச்சாட்சிக்கும் வேற்றுமை இருக்கிறதினாலும் தர்மநாயகராகிய கடவுளே இந்த சம்பந்தா சம்பந்தங்களை நியமித்தாரென்றும், அதனால் நாம் அநுபவிக்கிற இன்பதுன்பங்கள் உண்டாகிறதென்றும் விளங்குகிறது.

(d) If it be asked, whence it is that virtue is rewarded and vice punished, and that this rule is not reversed, answer, it is, because

தர்மத்தைச் செய்தவுடனே மனதிற்கு ஆனந்தமுண்டு, இது கைகண்ட பலன். அதர்மம் செய்தவனைப் பாவமும் பழியும் தொடரும், இது சகஜமானகாரியம்.

(1.) Virtue brings present satisfaction to our minds, and

பிறருடைய இன்பதுன்பங்கள் நம்முடைய வசத்திலும், நம்முடைய இன்பதுன்பங்கள் பிறருடைய வசத்திலும் வைக்கப்பட்டிருக்கிறபடியால், துன்பத்தை உண்டாக்குகிற தீவினையைத் தண்டித்து, இன்பத்தை உண்டாக்குகிற நல்வினையை அநுசரிக்கிறோம். நியாயத்தையும் சத்தியத்தையும் மனது இயல்பாய் அநுமதிப்பதுபோல, அநியாயத்தையும் அசத்தியத்தையும் அநுமதிப்பதில்லை. தப்பித்தவறி தீவினை செய்வோமானால் அது சுபாவமான காரியமாயிராமல் சுபாவத்துக்கு விரோதமும் விகாரமுமான காரியமாயிருக்கும்.

(2.) With this moral nature God has made our happiness depend upon one another; so that vice, being infamous, brings punishment. Nor is there any such regard for injustice and falsehood as for their opposites. If examples can be quoted to the contrary, they are felt by all to be monstrous perversions.

*(e)* Not, indeed, that the degrees of reward given to virtue are always proportionate to it; but *it is* rewarded, and vice punished; so much is clear.

இம்மையில் தர்மத்துக்குத்தக்க பலனும், அதர்மத்துக்குத்தக்க தண்டனையும் எப்பொழுதும் சரிப்பட நேரிடாமற்போனாலும், தர்மம் எவ்வளவாகிலும் பலனடைந்து, அதர்மம் எவ்வளவாகிலும் தண்டிக்கப்படுகிறது நிச்சயம்.

*(f)* It is admitted, also, that sometimes happiness and misery are distributed according to *other rules*. But this is explained;

மனுஷர் செய்யும் நன்மைதீமைக்கடுத்த இன்பதுன்பம் சிலவேளைகளில் நமக்கு விளங்காமல் விகாரப்பட்ட வேறு விதிகளால் பயன்படுகிறதாகத் தோன்றும். என்றாலும்,

(1.) It may be as mere discipline.

1. அது மனுஷருடைய சிட்சைரட்சையின்பொருட்டு அவர்களை பரீட்சிக்கத்தக்க காரியமாயிருக்கலாம்.

(2.) It may be the result of the operation of general laws, which may render persons prosperous, though wicked.

2. சிலதுஷ்டர்கள் வாழ்ந்திருப்பதும், சில உத்தமர்கள் துன்பப்படுகிறதும் உலகஇயலுக்குரிய யதார்த்த நியாயமாயிராமல், உலகமக்களைச் சோதிக்கத்தக்கதாக நமக்கு விளங்காத பொதுவிதிகளின் பயனாயிருக்கலாம்.

(3.) It is, after all, not a natural arrangement, since we intuitively expect the opposite.

3. திருவுளத்துக்கே விளங்கும் அவ்வித விகாரங்கள் இயல்புக்கு விரோதமாய்த் தோன்றுகிறபடியால், அவைகள் வேறுவிதமாய்ச் சம்பவிக்கவேண்டுமென்றே எதிர்பார்த்திருக்கிறோம்.

(4.) It will be found to be owing, in most cases, to the perversion of some passion.

4. அவ்வித விகாரங்கள் பெரும்பாலும் துர்க்குணசம்பந்தத்தினால் உண்டாகும் விகாரங்களென்றே விளங்கும்.

*(g)* From the whole it is plain that this arrangement is a declaration, upon God's part, that He is on the side of virtue,

இதனால் உலகஇயலுக்கு ஆதிகாரண கடவுளானவர் தர்மத்தையே சார்ந்து அதர்மத்தை நிராகரிக்கிறாரென்றும், இதை அறிந்து உணரும் உத்தமர்களுக்கு இது ஆறுதல் அளிக்கத்தக்கதாயிருக்கிறதென்றும் விளங்குகிறது.

கடவுள் தர்மத்தை விரும்பி அதர்மத்தை வெறுக்கிறார். யதார்த்தத்தையும் நீதியையும் தயையையும் சார்ந்த தர்மவான்கள் யாவரும் தர்மசாகரமாகிய கடவுள் பட்சத்திலிருந்து திடத்தையும் ஊக்கத்தையும் அடைந்து, இப்பொழுது விளங்காத காரியங்கள் இனி விளங்குமென்று உறுதியான நம்பிக்கையுள்ளவர்களாயிருப்பார்கள்.

which assurance is itself a fresh source of comfort to the good man.

V. இந்த நம்பிக்கையானது உலகஇயலில் தோன்றுகிற தர்மஏதுக்களினாலும் விளங்கும். எப்படியெனில், நல்வினைக்கு அடுத்த பலனும் தீவினைக்கு அடுத்த தண்டனையும் உடனே தற்காலத்தில் பூரணமாய்ப் பலிக்காமற்போனாலும் பிற்காலத்தில் பூரணமாய் பலிக்குமென்றும், இம்மையில் பலிக்காத பலன் மறுமையில் பலிக்குமென்றும், இம்மையில் விளங்காத நீதி மறுமையில் விளங்குமென்றும் நினைக்க ஏதுவுண்டு.

(5.) In the nature of things there is a tendency in virtue and vice to *greater* rewards and punishments than at present; which tendencies are a strong argument in favour of a perfect moral government *in the future.*

புலிமுதலிய புத்தியில்லாத துஷ்டமிருகங்களுக்கு அதிக பெலன் இருந்தாலும் புத்தியுள்ள மனுஷனுடைய பெலனே அதிகப் பலன் செய்யும். அப்படியே புத்தியினால் செய்யப்படும் தர்மமே கடைசியில் பலிக்கும். மிருகத்துக்கு இயற்கை அறிவும் இயற்கை பெலனுமுண்டு, மனுஷனுக்கு இயற்கையோடு செயற்கை அறிவும் செயற்கை பெலனுமுண்டு. மனுஷன் புத்தியினால் ஆயுதங்கள் கருவிகள்முதலான எத்தனங்களைக் கையாடி, இடம்-பொருள்-காலம்-ஏவல் முதலியவற்றை அறிந்து காரியத்தை நடத்துவான். புலி தன் பெலனால் மனுஷனை வெல்லக்கூடியதாயினும், மனுஷன் தன் புத்தியினால் புலியை வெல்லக்கூடும். ஒருவனால் ஆகாதகாரியம் பலராலாகும்; ஒருவனால் முடியாதகாரியத்தைப் பலபேர் சேர்ந்து முடிப்பார்

*(a)* Power with reason will conquer power without it, not necessarily, but commonly, under certain conditions.

கள். ஒருகாரியத்தைப் பலபேர் ஒருமித்துச் செய்தால் எளிதில் பலிக்கும்; மிருகஜீவன்களுக்கு இந்தச் சக்தியில்லை.

(b) With regard to virtue, it has a tendency to prevail through the union of the good for the sake of justice and veracity.

தர்மம் சத்தியத்தையும் நீதியையும் நாட்டிப் பரோபகாரத்தையும் பலஜனப்பிரயோசனத்தையும் நாடுகிறபடியால், அதின் வல்லமையும் பலனும் விளங்காமற் போகாது.

1. That this tendency is natural and the hinderances but accidental may be shown, either, by looking at the *whole universe*, the visible and the invisible being supposed analogous, virtue will finally prevail.

அண்டத்திலுள்ளபடியே பிண்டத்திலும் என்னும் பழமொழியின்படியே சராசரம் அனைத்திலும் ஒரே கர்த்தாவும் ஆளுகையும் இருக்கிறபடியால், கண்ணுக்குத் தோன்றுகிற விஷயங்களினாலே கண்ணுக்குத் தோன்றாத விஷயங்களை அநுவயித்து அறிந்துகொள்ளுகிறோம். புத்தியுள்ள மனுஷனுடைய சக்தி புத்தியில்லாத மிருகத்தின் சக்தியை மேற்கொள்ளுகிறதுபோல, அதர்மத்தை தர்மம் ஜெயிக்குமென்று விளங்கும். மனுஷருடைய குறுகின ஆயுசினாலும் மற்ற முகாந்தரங்களினாலும் தர்மம் எளிதில் நிலைபெற்று ஓங்கி விளங்காமற்போனாலும், மனுஷருக்குள் ஒருமையும் உறுதியும் இருந்தால் தீமையை நன்மை வெல்லும்.

This tendency, indeed, is hindered, but it is by causes which are accidental, and are likely to be removed in a future state, which will give the requisite scope for the operation of virtue.

இம்மையில் தர்மத்துக்குப் போராட்டமும் பல விக்கினங்களுமுண்டு; மறுமையில் இவைகள் நீங்கி தர்மம் தடையின்றி நிலைபெற்று ஓங்கி விளங்கும். ஆத்துமா அழியாதவஸ்து, அது நாளுக்குநாள் அறிவிலும் ஞானத்திலும் இம்மையில் தேறி விருத்தியடைந்து மறுமையில் பூரணமாகிப் பக்குவப்படும்போது தர்மம் நிலைகொண்டு பயன்பட்டு விளங்கும்.

This supposition of a boundless universe, and virtue triumphant throughout, is only a supposition, but it is credible.

தேவசெயலும் ஆளுகையும் இந்த சிறு அண்டமாகிய பூமியில் செல்லுகிறதுமல்லாமல், விஸ்தாரமான மற்ற பற்பல அண்டங்களிலும் செல்லுகிறபடியால்,

இந்த பூமியில் பயன்பட்டு விளங்காத தர்மம் மற்ற அண்டங்களில் பயன்பட்டுவிளங்கலாமே.

இந்த பூமியில் தர்மஆளுகையுள்ள ஒரு ராஜ்யம் நிலைபெற்றோங்கி அதின் குடிகள் தர்மவான்களும் ஞானவான்களும் ஒருமைப்பட்டவர்களுமாயிருந்தால், அந்த ராஜ்யத்தில் அநியாயமும் அதர்மமும் முற்றிலும் ஒழிந்து, நலமும் வாழ்வும் பெருகி, அடுத்த மற்ற ராஜ்யங்களால் மதிக்கப்பட்டு, காளாவட்டத்தில் சகல ஜனங்களையும் ஜாதிகளையும் பாஷைக்காரரையும் தனக்குட்படுத்திக் கொண்டு ஏகசக்ராதிபத்தியம் செலுத்தும். இம்மையில் மனுஷருக்குப் பாவத்தினாலே உண்டாயிருக்கிற குணபேதத்தினால் இவ்விதமான ஏகராஜ்யமும் ஏகஐக்கியமும் உண்டாகிறது அரிதாயினும், ஜனங்கள் மனமாறிக் குணப்படும்போது அவைகள் உண்டாகுமென்பதற்குச் சந்தேகமில்லை. "உன் ஜனங்கள் யாவரும் நீதிமான்களும் என்றைக்கும் பூமியைச் சுதந்தரிக்குங் குடிகளும், நான் நட்ட கிளைகளும், நான் மகிமைப்படும்படி என் கரங்களின் கிரியைகளுமாயிருப்பார்கள்"* என்று வேதமே சாட்சியிடுகிறது.

2. Or by looking at a human society, perfectly virtuous and united, and working for a succession of ages (indefinite time, not as before, indefinite space), (a) At home, such a society would certainly prosper; and (b) Abroad, it would become the basis of a universal kingdom.

காரியம் இப்படியிருக்கிறபடியால், இவ்வுலகத்தை ஆண்டுநடத்துகிற கடவுள் ஒருவர் உண்டென்றும், அவருடைய நீதிவழுவாத செங்கோல் எங்கும் செல்லுகிறதென்றும், தர்மம் தலைகாக்குமென்றும், அது அதர்மத்தை அழித்துத் தலையெடுக்குமென்றும், கடைசியில் அதுவே வெற்றி சிறப்படையுமென்றும் விளங்குகிறது. தர்மம் உலகத்தைக் காக்காமற்போனால் உலகம் முற்றிலும் சீர்கெட்டு அழிந்துபோமே.

(c) Hence the tendencies are a distinct testimony, upon God's part, to morality and virtue,—a testimony of great importance, if it be considered what the effect would be if vice had the advantageous tendency of virtue, and virtue the opposite.

* ஏசா. 60. 21.

C. The application of this analogy to a future moral government is obvious. It may indeed be objected at the outset.

(a) That good and evil may hereafter be mixed as now: Answer,

தர்மத்தினால் உலகத்துக்கு நன்மை உண்டாகுமென்று சொல்ல ஏதுவிருந்தாலும், பிரபஞ்சத்தில் இப்பொழுது நடக்கிறபடியே இனியும் எப்பொழுதும் நடக்குமென்றும், நன்மையும் தீமையும் எப்பொழுதும் கலந்திருக்குமென்றும், சிலவேளைகளில் தர்மமும் சிலவேளைகளில் அதர்மமும் மேற்கொண்டு நிற்குமென்றும் சிலர் ஆட்சேபித்துச் சொல்லுவார்கள். இந்த அதிகாரத்திலாவது இந்த நூலிலாவது கடவுளுடைய குறைவற்ற நீதியுள்ள ஆளுகையையும், அதைப்பற்றி வேதத்தில் உரைத்திருக்கிற சத்திய உபதேசங்களையும் எடுத்துச்சொல்லத் துணியாமல், உலகஇயல்பின்படி கடவுள் நீதிசெலுத்தி உலகத்தை ஆண்டு நடத்திவருகிறாரென்னும் நியாயங்களைமாத்திரம் எடுத்துச் சொல்லியிருக்கிறது. இம்மையில் மனுஷருடைய குணகுணங்களும் சுகதுக்கங்களும் அவற்றிற்குரிய நீதிநெறியும் சமரசப்படாமலிருந்தாலும், மறுமையில் சமரசப்பட்டு விளங்குமென்று மேற்கூறிய நியாயங்களினால் விளங்கும்.

1. The nature of that future life belongs to religion, which it is not here intended to prove, but only to confirm the proper proof of it.

2. Even if these facts did not confirm that proof, the proof still remains in all its force.

(b) But these facts confirm the proper proof of religion in various ways.

1. They show that God is in favour of virtue, and against vice.

2. They show that future perfect moral government will be the completion of

இந்த நியாயங்கள் நீதிவழுவாத வைதீகதர்மத்துக்குத் திருஷ்டாந்தங்களாயிருக்கிறது. எப்படியெனில், முதலாவது, உலகஇயலுக்குக் காரணராகிய கடவுள் தர்மத்தை விரும்பி விதித்து அதர்மத்தை வெறுத்து விலக்குகிறாரென்றும், மறுமையில் நல்லோருக்குச் சுகமும் தீயோருக்குத் துக்கமும் நேரிடுமென்றும்; இரண்டாவது, அவரவர் செய்யும் நல்வினை தீவினைக்குத்தக்கதாய் இம்மை மறுமையில் பலனடைந்து, இம்மையில் தொ

டங்கினது மறுமையில் முடியுமென்றும்; மூன்றாவது, நாம் செய்யும் நல்வினை தீவினைக்குத்தக்க பலன் இம்மையில் விளங்குவதைப்பார்க்கிலும் மறுமையில் விளங்கி, நல்வினைக்கு அதிக பலனும் தீவினைக்கு அதிக தண்டனையும் கிடைக்குமென்றும்; நான்காவது, நல்வினைக்குப் பலனும் தீவினைக்குத் தண்டனையும் விதிக்கப்படுகிறது இயல்பாயினும், இந்த இயல்பு இம்மையில் சிலவேளைகளில் விகாரப்பட்டு விளங்கினாலும் மறுமையில் இந்த விகாரம் எவ்வளவேனும் தோன்றாமல் தடையின்றி எல்லாம் இயல்பாய் நடக்குமென்றும் விளங்கும். இந்த விஷயத்தைப்பற்றி அருள்வேதத்தில் விபரமாய் அறிந்துகொள்ளலாம்.

what has already begun; differing from the present, not in kind, but only in degree.

3. They give reason to a hope that virtue *may* be more highly rewarded, and vice more severely punished, in the next life than in this.

4. And they even give reasons to conclude that these rewards and punishments *will* exist in a higher degree than here.

மேற்சொன்ன நியாயங்களினால் கடவுள் உலகத்தை ஆளுகிறாரென்று ஒத்துக்கொள்ளுகிறவர்கள், அவர் அதை நீதியாய் ஆளுகிறாரென்றும் ஒத்துக்கொள்ளவேண்டும். நல்வினைக்குப் பலனும் தீவினைக்குத் தண்டனையும் விதிக்கப்பட்டிருக்கிறது இயல்பு. நல்வினை தீவினையின் சம்பந்தா சம்பந்தமும் தகுதி தகாமையும் பிரத்தியட்சமாய் விளங்குகிறது. கடவுள் நீதிவழுவாமல் செங்கோல் செலுத்திவருகிறாரென்பது நம்முடைய அநுபவத்தில் பட்டிருக்கிறது. இதனால் இம்மையில் நல்வினைக்குப் பலனும் தீவினைக்குத் தண்டனையும் பலிக்கிறபடியே மறுமையிலும் பூரணமாய்ப் பலிக்குமென்றும், இம்மையில் ஆரம்பித்த நீதி மறுமையில் முடிவுபெற்றுப் பூரணப்படுமென்றும், இதற்கு நம்முடைய மனதே சாட்சியென்றும் விளங்குகிறது.

D. Recapitulation. On the whole, conclude that, besides arguments drawn from our moral nature, the eternal relations of things, the fitness of actions, there are arguments for a present moral government, and for a future perfect moral government, based upon facts. The notion, therefore, of such a future government is natural, and even probable.

## IV. CHAPTER.

*Of a state of Probation, as implying trial, difficulties, and danger.*

## 4—ம் அதிகாரம்.

### இம்மையிலே மனுஷனுடைய நிலைமையானது சோதனையும் வருத்தமும் மோசமுமான பரீட்சை நிலைமையாயிருக்கிறதென்பது.

Commonly, probation (trial) has the same meaning as *moral government*. It is here used, however, to indicate the difficulties and risks consequent upon temptation. In this light it deserves special consideration.

*இம்மையில் நமக்கு உண்டாயிருக்கிற நிலைமை பரீட்சை நிலைமையென்றும், இம்மையில் நம்முடைய நடக்கைக்குத்தக்க பலன் மறுமையில் நமக்குக் கிடைக்குமென்றும் வைதீகதர்மத்தினால் விளங்குகிறது. நல்வினைக்கு ஏதுவான அருளும் ஏவுதலும், தீவினைக்கு ஏதுவான மருளும் சோதனையும் நமக்கு உண்டாயிருக்கிறதென்பதற்குச் சந்தேகமில்லை. இதனால் நாம் கடவுளின் தர்ம ஆளுகைக்கு உட்பட்டிருக்கிறோமென்றும், நம்முடைய மனோவாக்குக்காயத்தினால் செய்யப்படும் யாவற்றிற்கும் கணக்கு ஒப்புவிக்க உத்தரவாதிகளாயிருக்கிறோமென்றும் விளங்குகிறது. நம்மை பரீட்சிக்கும் சோதனை நிலைமை இல்லாமற்போனால் நன்மைதீமை இன்னதென்றும், நன்மை தீமைக்குத்தக்க பலாபலன் இன்னதென்றும் அறிய ஏதுவிராது. பரீட்சை நிலைமையென்பது தீவினைக்குத் தூண்டிவிடு*

கிறதும், நல்வினைக்குத் தடைசெய்கிறதுமான நிலைமையா யிருக்கிறபடியால், அதைப்பற்றிக் கவனமாய் விசாரித்து அறியவேண்டியது அவசியமே.

இந்த உலகத்தில் நம்முடைய சுயநடக்கையினாலேயே நமக்குச் சுகதுக்கங்கள் நேரிடுகிறபடியினால், நாம் பரீட்சை நிலைமையிலும் கடவுளுடைய இயல்பான ஆளுகையிலும் உட்பட்டிருக்கிறோமென்று விளங்குகிறது. அப்படியே இம்மையில் நமக்கு உண்டாயிருக்கிற பரீட்சை மறுமை உண்டென்றும், கடவுளுடைய தர்ம ஆளுகை உண்டென்றும் திருஷ்டாந்தப்படுத்தி, நமக்குண்டாகும் நலத்துக்கும் பொல்லாத்துக்கும் நம்முடைய குணமும் நடக்கையுமே காரணமென்று விளக்குகிறது. இன்பத்தை உண்டாக்காமல் துன்பத்தையே உண்டாக்க ஏதுவாயிருக்கிற செயல் இகத்துக்குரிய நன்மையைக் கெடுக்கும் சோதனையாயிருக்கிறது. இகத்துக்குரிய துக்கங்கள் நேரிடும்போது நம்முடைய சொந்த நடக்கையே அவற்றிற்குக் காரணமாயிருந்ததென்று நாமே ஒத்துக்கொண்டு, நம்மை நாமே குற்றப்படுத்தி நொந்துகொள்ளுகிறோம்; நாம் பெறக்கூடிய நன்மைகளைப் பெற்றுக்கொள்ளாதிருப்பதற்கு நம்முடைய நடக்கையே காரணமென்றும் ஒத்துக்கொள்ளுகிறோம். அநேகர்துன்பத்தையும் நிர்ப்பந்தத்தையும் அறியாமையினால் செய்யும் காரியத்தினாலல்ல, மனமறிந்து செய்யும் குற்றத்தினாலேயே அடைகிறார்கள். தொழில் உத்தியோகம் முதலானவைகளைச் செய்ய வயதான வாலிபருக்கு நேரிடுகிற சோதனைகளினால் எங்கே கெ

A. That *religious* probation implies danger and risk (trial) in regard to the future is not improbable, from the analogy of our *present natural* probation, which makes interest depend upon behaviour.

The two are analogous in many particulars.

1. In *fact* our interests in both respects are in danger from ourselves, as is clear from the following:

*(a)* God has made our happiness to depend upon our own acts.

*(b)* We blame ourselves for misconduct in temporal affairs.

*(c)* We actually miss happiness and incur misery through our own acts.

ட்டுப்போவார்களோ என்று தாய்தகப்பன்மார் முதலானவர்கள் அவர்களைப்பற்றிக் கவலைப்படுகிறதுண்டே. இவ்வாறு நம்முடைய இயல்பான தன்மை இம்மைக்குரிய சோதனைகளுக்கு ஏதுவாயிருந்து, இகத்துக்குரிய நலத்தை இழந்துபோகச் செய்கிறதுபோலவே, பரத்துக்குரிய சோதனைகளுக்கும் ஏதுவாயிருந்து அதற்குரிய நலத்தையும் இழந்துபோகச்செய்யும்.

(d) The acknowledged hazards of the young, and the temptations to vices which are yet mischievous.

இயல்பாய் நமக்கு நேரிடுகிற சோதனைகளுக்கும், நமக்குள்ளிருக்கும் தர்மம் விளங்க நேரிடும் சோதனைகளுக்கும் காரணமும் முகாந்தரமும் சம்பந்தப்பட்டிருக்கும். ஆசாபாசங்களாகிய அகப்பற்று புறப்பற்று என்னும் இரண்டுமே மனுஷருடைய சோதனைக்கு ஏதுவாயிருக்கிறது. அகப்பற்று நமக்குள் இயல்பாயிருக்கிற சத்துரு; புறப்பற்று புறத்திலிருந்து இருளையும் மருளையுங் கொண்டு பற்பல மயக்கங்களையும் விகாரங்களையும் உண்டுபண்ணுகிற சத்துரு. சில சமயங்களில் திடீரென்று இடையூறாய்ச் சம்பவிக்கிற சோதனைகளினால் புத்திசாலிகளான யோக்கியர்கள் முதலாய்த் தீவினைக்கு உட்படுகிறார்கள். இப்படி நேரிடும் தீவினைகளை மனுஷர் பிழையென்று பாராட்டாமல், இடையூறான சம்பவமென்று பொறுத்துக்கொள்ளுவார்கள். மனுஷர் விவேகத்துக்கும் தர்மத்துக்கும் விரோதமாய்ப் பாவத்தில் இடைவிடாமல் பழகி, தங்கள் இச்சைகளுக்குத் தாராளமாய் இடங்கொடுத்து துஷ்டத்தனமாய் நடப்பார்களானால், இது தன்னயத்தையும் தர்மத்தையும் நாடாத அகப்பற்றினால் உண்டாகிற கேடு என்று யாவரும் சொல்லுவார்கள். என்றாலும் சோதனை பலன் செய்யும்படி அகப்பற்றும் புறப்பற்றும் ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டிருக்கவேண்டும். அகத்திலே உண்

2. The occasions or causes of our natural and religious probations are analogous. These causes are in our nature or in our circumstances.

(a) Circumstances or temptations often betray men; so do their passions; the two mutually implying each other.

டாயிருக்கிற இயல்பான ஆசாபாசங்களுக்கு ஏற்ற இன்பங்கள் புறத்திலே தோன்றுகிறபோது, அந்த இன்பங்களை நியாயமாய் அநுபவிக்கவுங்கூடும் அநியாயமாய் அநுபவிக்கவுங்கூடும். இதுவே மனுஷருக்குச் சோதனையாயிருக்கிறபடியால், அவர்கள் இன்னது தர்மம் இன்னது அதர்மமென்று பகுத்து அறிந்து, தீமையை ஒழித்து நன்மையைச் செய்து, இம்மையைத் தகுந்தபடி அநுபவித்து மறுமையை நாடக் கடமை உள்ளவர்களாயிருக்கிறார்கள்.

இம்மைக்குரிய நன்மையை நாடுகிறவர்கள், அதற்குத் தக்கபடி விவேகமாய் நடந்துகொள்ளவேண்டும். அடங்காத ஆசாபாசங்களுக்கு இடங்கொடுத்து, தகாதவிதமாய் உலக இன்பங்களை அநுபவிக்கிறவர்கள் சோதனைக்குட்பட்டு மோசம்போவார்கள்; அப்படியே மறுமைக்குரிய நன்மையை நாடுகிறவர்களும் அதற்குத்தக்கபடி நடந்துகொள்ளாமல் தகாத இச்சைகளுக்கு இடங்கொடுத்தால் சோதனையினால் மோசம்போவார்கள். இம்மைக்குரிய சோதனை விவேகத்தைப் பற்றிநிற்கும், மறுமைக்குரிய சோதனை தர்மத்தைப்பற்றிநிற்கும்.

*(b)* So close is the analogy, that in both cases the same passions are excited by the same means; so that we may describe both by similar terms.

இம்மை மறுமைக்குரிய சோதனைகள் எப்படி சம்பந்தப்பட்டிருக்கிறதோ, அப்படியே அவற்றிற்குரிய. மனுஷருடைய நடக்கையும் சம்பந்தப்பட்டிருக்கிறது. சிலர் மறுமையை நினையாமலும் நாடாமலும், தங்கள் இஷ்டப்படி சிற்றின்பங்களில் உலாவுகிறார்கள்.

3. The effects of these temptations on men's behaviour are analogous.

*(a)* Some gratify themselves without looking at the future.

*(b)* சிலர் அடங்காத ஆசாபாசங்களினால் மதிமயங்கி வஞ்சிக்கப்பட்டு, இகபரநன்மைகளை நாடாமல் சிற்றின்பங்களுக்கு இடங்கொடுக்கிறார்கள்.

*(b)* Some are *deceived* by passion.

(c) Some are *forced* away by it against their judgment.

(c) சிலர் தங்கள் புத்தி அவர்களை நல்வழியில் இழுக்க, தங்கள் இச்சை அவர்களைத் துர்வழியில் கட்டாயமாய் நடத்த, இச்சைக்கு இணங்கி மோசம்போகிறார்கள்.

(d) Some *shamelessly avow* their preference for vice in spite of consequences; and

(d) சிலர் வருகிறது வரட்டும் நாம் பாவத்தையே செய்வோம் என்று அகங்கரித்து நல்வினையை அகற்றித் தீவினையையே மனமறியச் செய்துவருகிறார்கள்.

(e) At the very least, men do voluntarily go wrong in both cases.

(e) மனுஷர் இகத்துக்குரிய நன்மைகளுக்கும் பரத்துக்குரிய நன்மைகளுக்கும் விரோதமாகவேண்டுமென்றே மனோற்சாகமாய் நடந்து மோசம்போகிறார்கள்.

4. The way in which these difficulties and dangers are increased, and in some sense made, is alike in both cases, by the ill behaviour of others.

நம்முடைய தர்மநிலையைப்பற்றின பரீட்சையில் நாம் தவறிப்போய்க் கெட்டுப்போகிறதற்கு மற்றவர்களுடைய துர்க்குணங்கள் காரணமாயிருக்கிறதுமுண்டு. எப்படியெனில் மற்றவர்கள் படிப்பிக்கும் அயோக்கியமான தகாத படிப்புகளும், நடந்துகாட்டும் தகாத நடக்கைகளும், தொழிற்றுறைமுதலானவைகளில் செய்யும் தந்திரமான வஞ்சனைகளும், அதர்மத்துக்கேதுவான வீண்பத்தி அவபத்தி நாட்டங்களும், மனுஷர் அநுசரிக்கிற தகாத அபிப்பிராயங்களும் துர்வழக்கங்களும், இம்மைக்குரிய நன்மைகளுக்குத் தடைகளாயிருக்கிறது.

(a) *Others* give us a bad education, set a bad example, encourage dishonest practices, corrupt religion, and diffuse false notions of happiness.

அன்றியும், மனுஷர் தங்கள் சொந்த மூடத்தனத்தினாலும் அஜாக்கிரதையினாலும் துஷ்டத்தனத்தினாலும் கெட்ட அப்பியாசங்களினாலும் துர்வழக்கங்களினாலும் பற்பல தீமைகளை வருவித்துக்கொண்டு, இளமையில் வளையாத மூங்கில் முற்றினால் வளைக்கக்கூடாதிருப்பதுபோல, இருக்க இருக்க விவேகம் மாறித் தீமை

(b) *We ourselves* increase our difficulties by negligence, by indulgence which weakens our moral powers; by accumulated irregularities,

யில் வைரங்கொண்டு துன்பத்தை அதிகரிக்கும்படி செய்துகொள்ளுகிறார்கள்.

which make the course of virtue perplexed and disadvantageous.

இம்மைக்குரிய நமக்கடுத்த சோதனை நிலைமையைப்பற்றி நாம் குற்றம்பாராட்டி முறையிடவேண்டியதில்லை. என்றாலும் கடவுளுடைய சிருஷ்டிகளில் நாம் பாவமுள்ள தாழ்ந்த நிலைமையில் பிறந்திருக்கிறோமென்றும், இந்த நிலைமையிலிருக்கிற நாம் இகபரசுகத்தை அடைகிறதற்குச் சக்தியற்றவர்களாயிருக்கிறபடியினால் நன்மைசெய்ய நம்மால் இயலாதென்றும் சிலர் ஆட்சேபிப்பார்கள். ஆம், ஒருபட்சத்தில் நாம் இப்படிப்பட்ட நிலைமையிலிருக்கிறது மெய்தான்; என்றாலும் அதைப்பற்றி நாம் முறையிடவேண்டியதில்லை. புத்தியையும் விவேகத்தையும் கையாடி எச்சரிக்கையாய் நடப்போமானால் இம்மைக்குரிய இடையூறுகள் நீங்கிப் போதுமான சுகத்தை அடைய ஏதுவாகும். அப்படியே மறுமைக்குரிய தர்மவிஷயத்திலும் நம்முடைய சக்திக்குத்தக்கபடி புத்தியையும் பக்தியையும் கையாடி, இயலுக்கு உதவும் அருளைநாடி எச்சரிக்கையாய் நடந்துகொள்வோமானால், இகபரசுகத்தை அடைய ஏதுவாகும்.

B. It is indeed objected that this state is improbable in two respects:

I. Our condition thus appears to be unfavourable to our interests. Answer:

*(a)* Still it is not to be complained of, for with care our difficulties may be met; and, as to God, it is equitable that He should put upon us what it is clear we can do, nor can we complain.

நாம் அறிந்து உணர்ந்திருக்கிறபடி நமக்கு இப்பொழுது இருக்கிற சோதனைநிலைமைக்கும் உலகத்தில் சாமானியமாய் நடந்துவருகிற தெய்வச்செயலுக்கும் சம்பந்தமுண்டாயிருக்கிறதென்று விளங்கும். இம்மையில் இப்பொழுது நமக்கு உண்டாயிருக்கிற நிலைமை பூரண சுகத்துக்குரிய குறைவற்ற நிலைமையாயிராமற்போனாலும், நாம் கவலையோடு பிரயாசப்பட்டு ஜாக்கிரதையோடு

*(b)* Our very condition in nature makes a similar condition in religion probable, from the analogy between the two.

நடந்து பூரணப்படுத்தக்கூடிய நிலைமையாயிருக்கிறது. அப்படியே மறுமைக்குரிய நிலைமையும் பரமசுகமும் நம்முடைய அடக்கத்தினாலும் ஒழுக்கத்தினாலும் பூரணப்படத்தக்கதாயிருக்கிறது.

2. This condition involves hazards, and may mark ruin, and must be foreseen to work it: Such an arrangement is improbable. [i. e., our state of trial incompatible with the foreknowledge of God.] No doubt,

(a) Such hazard is a mystery, which, however, the *whole* case may enable us to explain;

(b) At all events, the constitution of Nature is in favour of such hazard; and,

(c) As for the certainty of the ruin, it is as much contingent as our conduct is.

நம்முடைய சுகதுக்கங்களெல்லாம் தெய்வச்செயலினால் நிறைவேறுகிறபடியினால், நம்மால் ஆகக்கூடியது ஒன்றுமில்லையென்றும், நம்முடைய சோதனைநிலைமையானது துன்பத்தை உண்டுபண்ணும் என்றும் திருவுளத்துக்குத் தெரிந்தகாரியமாயிருக்கிறபடியால், அப்படிப்பட்ட நிலைமையை விதிப்பது தகுதியல்ல என்றும் சிலர் துணிந்து ஆட்சேபிப்பார்கள். இம்மையில் நாம் குறைவுள்ளவர்களாகையால் நமக்குரிய நிலைமையைப் பூரணமாய் அறிந்துகொள்ள ஏதுவில்லை. இவ்விஷயத்தில் இம்மையில் விளங்காத காரியம் மறுமையில் விளங்கும். என்றாலும் நம்மைப் பரீட்சிக்கும் சோதனை நிலைமையே நமக்குரிய இயல்பான நிலைமையென்பதற்குச் சந்தேகமில்லை. நம்முடைய சுகதுக்கங்கள் நம்முடைய வசத்திலேயே இருக்கிறது; நம்முடைய சுகதுக்கங்களுக்கு நம்முடைய நடத்தையே காரணமாயிருக்கிறது; விதைக்கிறபடி விளையும், நடக்கிறபடி பலிக்கும்.

C. The conclusion: in both capacities our interest is offered, not to our *acceptance*, but to our *acquisition; we are in danger* of missing it; and without attention and self-denial, it *must* be missed.

இம்மைக்குரிய நம்முடைய சுகம் கட்டாயமாய் நமக்கு உண்டாகாமல் உற்சாகமாய் உண்டாகிறது. அதை நாம் இலவசமாய்ப் பெற்றுக்கொள்ளாமல் முயற்சியினால் சம்பாதிக்கவேண்டியதாயிருக்கிறது. அடக்கமும் ஒழுக்கமுமில்லாமல், அசதியும் அஜாக்கிரதையுமாய் நடப்போமானால் சுகத்தையிழந்து துக்கத்தையே சம்பாதிப்

போம். நம்முடைய துர்க்குணத்தினாலும் அஜாக்கிரதையினாலும் பரம புருஷார்த்தத்தை நாம் இழந்துபோகிறதை உணர்ந்து, நம்முடைய முயற்சியினாலும் உற்சாகத்தினாலுமே உண்டாகவேண்டிய மறுமையைப்பற்றின தர்மத்துக்குரிய பேரின்பசுகத்தை நாடவேண்டும்.*



[* இம்மைக்குரிய சுகத்தையும் செல்வத்தையும் விரும்புகிறவர்கள் இம்மைக்குரிய வழிவகைகளை ஜாக்கிரதையாய்க் கையாடவேண்டும்; மறுமைக்குரிய அருளையும் மகிமையையும் விரும்புகிறவர்கள் மறுமைக்குரிய விதிவிலக்குகளை ஜாக்கிரதையாய்க் கையாடவேண்டும்.

[As natural (temporal) diligence secures health and wealth so spiritual (religious) diligence secures grace and glory.

"அருளில்லார்க் கவ்வுலகமில்லை பொருளில்லார்க்
இவ்வுலக மில்லாகி யாங்கு" என்றும்,

"பொருளற்றார் பூப்பரொருகா லருளற்றார்
அற்றார் மற்றாத லரிது" என்றும் குறளில் சொல்லியிருக்கிறது.

Future happiness depends on grace objectively and subjectively.

பரீட்சையினால் தெளிவும் தேறுதலுமுண்டு. இவ்விஷயத்தைப்பற்றி ஆதியாகமம், 2. 16, 17. அப்போஸ்தலர் நடபடி, 17. 26, 27. 1 கொரிந்தியர், 3. 13. கலாத்தியர், 6. 7, 8. யாக்கோபு, 1. 13—15. காண்க.

# CHAPTER V.

*On a state of Probation, as intended for moral discipline and improvement.*

## 5—ம் அதிகாரம்.

## பரீட்சை நிலைமையானது வைதீக தர்மத்துக்கு நம்மைப் பக்குவப்படுத்துகிற நிலைமையென்பது.

[*Introduction.* Why should there be the risk indicated in the last chapter? is a question attended with insuperable difficulties.

வருத்தத்துக்கும் மோசத்துக்கும் ஏதுவான பரீட்சை நிலைமையில் நாம் வைக்கப்பட்டிருப்பதற்குக் காரணமென்ன என்கிற கேள்விக்கு எளிதில் உத்தரவுசொல்ல முடியாது. மனுஷர்செய்யும் எல்லாத்தீமைகளும் மனோற்சாகத்துடன் செய்யப்பட்டுவருகிறது.

(*a*) All vice, indeed, and many miseries, have some good effects; yet the reason for the existence of vice and misery we cannot give, and perhaps,

மனுஷர் அநுபவிக்கும் அநேக துன்பங்களும் அவர்களுடைய நன்மைக்கு ஏதுவாயிருக்கக் காண்கிறோம். என்றாலும் தீமை உண்டாயிருப்பதற்குத் தகுந்த முகாந்தரங்கள் சொல்லவும் அந்த முகாந்தரங்களை அறிந்துகொள்ளவும் ஒருவராலுங்கூடாது. அந்த முகாந்தரங்களைச் சொல்லவும் அறியவும் கூடுமாயினும் அதைச் சொல்லுவதினாலும் அறிந்துகொள்ளுவதினாலும் நமக்குப் பிரயோஜனமில்லை. ஒரு

(*b*) It is beyond our faculties to understand it, or it may be better for us not to know it.

காரியம் விளங்குகிறது, அதென்னவென்றால், கடவுளால் ஆண்டு நடத்தப்படுகிற உலகத்தில் தீமை உண்டாயிருக்கிறபடி

யினால் அது இம்மைக்குரிய நம்முடைய நிலைமைக்குச் சம்பந்தப்பட்டதாயிருக்கிறதென்று விளங்குகிறதுமல்லாமல், நாம் தர்மத்தைக் கைக்கொண்டு நடப்பதினால் நம்மை மறுமைக்குரியவர்களாக்க ஏதுவாயிருக்கிறதென்றும் விளங்குகிறது. தீமைவந்த வழியைக் கவனிக்கிறதைப் பார்க்கிலும், தீமை போகும் வழியைக் கவனிப்பதே உத்தமம்.* ஆகையால் "இம்மையில் நாம் செய்யவேண்டியது என்ன" என்கிற கேள்வியே முக்கியமான கேள்வி. வருத்தமும் ஆபத்தும் மோசமுமான இம்மைக்குரிய நம்முடைய நிலைமை தர்மத்திலும் பக்தியிலும் தேர்ந்து மறுமைக்குரிய பேரின்ப நிலைமையையடைய ஏதுவாயிருக்கிறதென்பதே பரமபுருஷார்த்தம் என்னப்படும்.

(*c*) Yet the existence of these conduces to our fitness for another life. Though this be a *partial* reason only, it shows at least what *our present business* is—improvement in holiness.

இவ்வுலகத்தில் நாம் சிறுவயதில் கற்கிற கல்வி முதிர்வயதில் உதவுகிறதுபோல, இம்மையில் நமக்கு நேரிடுகிற சோதனைகள் மறுமைக்கு நம்மை உரியவர்களாக்கும். கல்விப்பரீட்சை லௌகீகவிஷயத்தையும், ஞானப்பரீட்சை வைதீகவிஷயத்தையும் அடுத்தது. இம்மை மறுமைக்குரிய இரண்டு நிலைமைகளுக்கும் பொதுவான சில நியாயங்களையும், ஒவ்வொன்றிற்கும் விசேஷித்த சில நியாயங்களையும் கவனித்துப்பார்ப்போமானால் இம்மைக்குரிய நிலைமையானது மறுமைக்குரிய நிலைமைக்கு நம்மைப் பக்குவப்படுத்துகிறதென்று விளங்கும்.

A. This present trial, preparing us for a future life, is analogous to the education men now undergo in one state of life, preparing them for another. This analogy will appear from some considerations common to both probations of (I, II); and from a distinct consideration of each, the natural (III) and the religious (IV).

* கிணற்றில் விழுந்துகிடக்கிற ஒருவன் கிணற்றில் விழுந்தது எப்படி என்பதைக் கவனியாமல், கிணற்றிலிருந்து வெளிப்படுகிறது எப்படி என்பதையே கவனிப்பான். பாவம் மனுஷனால் வந்தது, வேதத்தினால் வந்ததல்ல; பாவநிவாரணம் மனுஷனாலல்ல, வேதத்தினால் வருகிறது. இந்த அதிகாரத்தின் கடைசியில் இவ்விஷயத்தைப்பற்றிச் சொல்லுகிற புறநடையைக் காண்க.

Man fallen into a well will not ask *how* he fell, but *how* to get out.

I. All creatures have capacities, &c. for a particular way of life. Happiness depends now upon the agreement between their capacities and their condition. So it must be in the future.

I. ஒவ்வொரு சிருஷ்டியும் தான் நடந்துகொள்ளவேண்டிய நிலைமையில் நடந்துகொள்ள அந்தந்த நிலைமைக்குரிய தத்துவங்களோடும் திராணிகளோடும் உண்டாக்கப்பட்டிருக்கிறதுமல்லாமல், அதததற்குரிய நிலைமையும் திராணியும் அகப்பற்றும் புறப்பற்றும் சம்பந்தப்பட்டிருக்கிறதினால் இன்பமும்சுகமும் உண்டாகும். மனுஷனுக்குரிய நிலைமையும் மனுஷனுக்குரிய திராணியும் ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டிருந்தாலொழிய காரியசித்தியாகாது. நன்மைக்குத் தீமையும், ஜீவனுக்கு மரணமும், பக்திக்கு அவபக்தியும் ஆகிய இவைகளெல்லாம் இரண்டிரண்டாய் ஒன்றுக்கொன்று எதிர்நிலை சம்பந்தப்பொருள்களாகக் குறிக்கப்பட்டிருக்கிறதென்று ஒரு பூர்வஞானி சொல்லியிருக்கிறார்.*

வெளிச்சத்துக்கு இருளும், பகலுக்கு இரவும், உஷ்ணத்துக்குச் சீதளமும் ஒன்றுக்கொன்று எதிரிடையாய் உண்டுபண்ணப்பட்டு உபயோகப்படுகிறது; அப்படியே நம்முடைய அகநிலைமையும் புறநிலைமையும் உபயோகப்படும்படி சம்பந்தப்பட்டிருக்கிறது. மனுஷருடைய இயலும் நடையும் சம்பந்தப்படுகிறதினால் அவர்களுடைய வாழ்வும் சுகமும் பயன்படும். இப்படி இம்மையிலுள்ளபடியே மறுமையிலும் வாழ்வும் சுகமும் பயன்பட அதததற்கடுத்த குணமும் திறமையும் விளங்கவேண்டும்.

II. The constitution of creatures is such that they may become qualified for states of life for which they were once unqualified; on which, observe

II. பொதுப்பட எல்லா ஜந்துக்களும் விசேஷமாய் மனுஷர்களும் தாழ்ந்தநிலைமையிலிருந்து மேலானநிலைமைக்குப் பக்குவப்பட ஏதுவுள்ளவர்களாயிருக்கிறார்கள். பற்பல பழக்கங்களையும் அப்பியாசங்களையும் மனுஷர் கையாடுகிறதினால் மனோவிருத்தி அடைந்துகொள்ளத்தக்க சக்தி உண்

* சகரீப்பின் ஞானம். 33. 15 : 42. 24, 25.

டாகும். நாம் கல்வியினால் அறிவில் விருத்தியடைந்து, புத்தியில் தேறித்தெளிந்து, நாளுக்குநாள் பக்குவப்பட்டு வருகிறோம்; விவேகவிருத்தியினால் நம்முடைய குணமும் செயலும் மாறி நல்லொழுக்கமுள்ளவர்களாகிறோம். இவைகளெல்லாம் அப்பியாசத்தினால் உண்டாகிறது. செயற்கைஅறிவினால் இயற்கைஅறிவு விருத்தியாகும். ஒரு காரியத்தைச் செய்யவும் நினைக்கவும்தக்க சக்தி பயிற்சியினால் உண்டாகும். சிப்பி வெள்ளிபோலும், பழுதை பாம்புபோலும் கண்ணுக்குத் தோன்றினாலும், தெளிந்த புத்தியினால் அவைகளை இன்னவைகள் என்று பகுத்தறிகிறோம். அப்படியே மனமுயற்சியினால் அந்நியபாஷையைக் கற்று அதை எளிதாய் வாசித்து எழுதுகிறோம். அப்படியே சரீரமுயற்சியினாலும் அப்பியாசத்தினாலும் அநேககாரியங்களைச் செய்ய சக்தியுள்ளவர்களாகிறோம். மனதினாலும் சரீரத்தினாலும் எந்தெந்த குணங்களையும் பழக்கங்களையும் அடிக்கடி கையாடுகிறோமோ அந்தந்த குணங்களும் பழக்கங்களுமே விர்த்தியாகும். மனோதர்மங்களைக் கையாடுகிறதினால் அடக்கம்-ஒடுக்கம், உண்மை-உத்தமம், நீதி-நியாயம், ஈவு-இரக்கம் இவைமுதலான நற்குணங்கள் அமையும்; அப்படியே பகையும் பழியும் அப்பியாசத்தினால் உரங்கொள்ளும். நாம் நல்வினைசெய்ய உறுதிபண்ணிக்கொள்ளுதலும், மற்றவர்கள் நன்மைசெய்ய அவர்களை ஏவிவிடத் தீர்மானம்பண்ணிக்கொள்ளுதலும் நல்லபழக்கங்களை உண்டுபண்ணும் தர்மச்செயல்கள். துன்பம்மரணம்

*(a)* Men experience increased facility of action, or settled alteration of character, an improvement by exercise of their intellectual faculties. The first two are habit; as perhaps is the third.

*(b)* Habits are according to *their* nature, either *perceptive* or passive, and *active*: or according to man's nature, *bodily* and *mental;* which last are either intellectual or moral.

1. Our habits are formed by repeated acts, which acts, in the case of moral habits, are either the carrying out of practical principles and resolutions, or attempts to induce others to act.

2. Passive impressions, it must be noticed, are weakened by repetition, and will not of themselves form habits.

முதலான துக்கங்களோடே பழகுகிறவர்கள் அஞ்சாமலும் இரங்காமலும் இருக்கிறதுபோல, தர்மத்தைப்பற்றி மனோராஜ்யத்தை அப்பியாசித்து வீண்வார்த்தைகளைமாத்திரம் அலப்புகிறவர்கள் தர்மசிந்தை கெட்டு ஈவு இரக்கமில்லாதவர்களாவார்கள்.

Active impressions. செய்வினை பழக்கங்கள்.

Passive impressions. படுவினை பழக்கங்கள்.

செய்வினை பழக்கங்கள் நாளுக்குநாள் பெலன்கொண்டு விருத்தியாகும்; படுவினை பழக்கங்கள் நாளுக்குநாள் பலனற்று விகாரப்படும்.

3. From the two previous remarks it follows that, with repetition, the motives and excitements to act become feebler, as passive impressions; but stronger, as active principles. Three examples. (a,) (b,) (c,)

செய்வினை பழக்கங்கள் செய்யச்செய்ய பலன்கொள்ளும், படுவினை பழக்கங்கள் செய்யச்செய்ய பலவீனப்படும்; ஒன்று பெருகும் ஒன்று குறுகும்; அநுபவமே இதற்குச் சாட்சி. பிறர்படுகிற துன்பத்தை நாம் பார்க்கும்போது பரிதபித்து நம்மால் இயன்ற உதவி செய்கிறோம். (a) ஆபத்துக்கேதுவான காரியங்கள் பயத்தை உண்டாக்குகிறதுமல்லாமல் எச்சரிக்கையையும் உண்டாக்குகிறது. பயம் படுவினைபழக்கம், எச்சரிக்கை செய்வினை பழக்கம். ஆனால் ஆபத்துக்கேதுவான காரியங்கள் பலதரம் பட்டு அநுபவித்ததால் பயந்தெளிந்து குறைந்துபோகும், எச்சரிக்கையோ பலப்பட்டுப் பெருகும். (b) பிறர் படுகிற துன்பத்தை நாம் அடிக்கடி பார்க்கும்போது பழக்கத்தினால் பரிதாபம் பாராட்டப்படாமல் குறையும், என்றாலும் அவர்களுக்கு உதவிசெய்தல் குறையாமல் பழக்கத்தினால் பெருகும். ஈகையினால் இன்பமுண்டாயிருக்கிறபடியினால் கொடுத்த கை மறுபடியும் கொடுக்கும். (c) மற்றவர்கள் மரிக்கிறதை நாம் சகஜமாய் நாடோறும் காணும்போது நம்முடைய சொந்த மரணத்தைப்பற்றி நாம் அவ்வளவாய்க் கவனிக்கிறதில்லை; அது நமக்குள் பலன்செய்யாது; மரணத்தைப்பற்றித் தியானம் பண்ணிச் சிந்தைசெய்கிறவர்களுக்குள்ளேயோ அது அதிகமாய்ப் பலன்செய்யும்.

பழக்கங்கள் போதனையினாலும் படிவினை உணர்ச்சியினாலுமல்ல, தகுந்த செய்வினையினாலேயே பலப்படும். "கற்கக் கற்கக் கசடறும்."

4. Hence, habits are not strengthened by admonitions or passive impressions, but by appropriate action.

5. நெடுநாள் அப்பியாசத்தினாலும் பழக்கத்தினாலுமே ஒரு காரியத்தைச் சரியாய்க் கற்றறிகிறது நம்முடைய இயல்புக்குரிய காரியமென்று அநுபவத்தினால் உணருகிறோம். கண்ணில்லாதவன் ஸ்பரிஸ பழக்கத்தினால் தொட்டு நுட்பமான காரியங்களை அறிந்து கொள்ளுகிறான். ஈவிரக்கம் பாராட்டாதவன் கல்நெஞ்சனாகிறான். பேராசையுள்ளவன் பணத்தைச் சேர்க்கச் சேர்க்க அதிக லோபியாகிறான். பொறுமையும் பகையுமுள்ளவன் நாளுக்குநாள் உரங் கொள்ளுகிறான்.*

5. Of much connected with them we may be ignorant, and whether they can be formed in any other way &c., The facts, however, are clear, and are such as the foregoing.

6. பழக்கத்தினால் நாம் யாதாமொரு காரியத்தை லேசாய்ச் செய்கிறதுமல்லாமல் இன்பத்தோடும் செய்கிறோம். பழக்கத்தினால் மலைபோலிருந்த தடைகள் நீங்கிப்போகிறதுமல்லாமல், வெறுப்பாயிருந்தது விருப்பாய் முடிவதுமுண்டு. நல்ல பழக்கங்கள் மனுஷரைக் குணசாலிகளாக்கும்.†

6. With repeated acts, the facility and the pleasure increase, till a new character is gained.

---

* பழக்கங் கொடியதுபார் பாறையினுங் கோழி
கிழிக்கும் பொலியைக் கிளறும்—விழித்துங்
குருடர்க் கொளிப்பகையாய்க் கூசிக்கோல் போடா
ரருளைப் பகுக்கு மான்மா. ஒழிவிலொடுக்கம்.

பலநாள் தொன்றுதொட்டுவரும் பழக்கம் நீக்கக்கூடாமையால் கொடியதாம். பலநாட் குப்பை சீய்த்த பழக்கத்தால் கோழி கற்பாறையிலுஞ் சீய்க்கும் நெற்பொலிமேலுஞ் சீய்க்கும்; காசநோய் படர்ந்த குருடர் கண்ணோய் தீர்ந்து விழித்தபோதுங் கதிரொளி இருட்பகைபோலாய்க் கூசி, முன் பிடித்தகோலைக் கைவிடார்.

† தொடங்குங்கால் துன்பமா யின்பம் பயக்கு
மடங்கொன் றறிவகற்றுங் கல்வி—நெடுங்காமம்
முற்பயக்குஞ் சின்னீர வின்பத்தின் முற்றிழாய்
பிற்பயக்கும் பீழை பெரிது. நீதிநெறிவிளக்கம்.

கல்வி தொடங்கும்போது துன்பமாய்த் தோன்றினும் பின்பு இன்பந்தந்து மடத்தை நீக்கி, அறிவை விருத்தியாக்கும். நெடுங்காமம் சொற்ப இன்பத்தைக் கொடுத்தாலும் பெருந்துன்பத்தை உண்டுபண்ணும்.

III. Looking more closely at our *present natural* probation only (one state of life preparing us for another), we note,

III. அப்பியாசத்தினாலும் அநுபவத்தினாலும் தேறுதல் அடையும் சக்தி நமக்கு உண்டாயிருக்கிறபடியினால், இயற்கை அறிவோடு செயற்கைஅறிவு கூடிப் பயன்பட்டால் இம்மை மறுமைக்குரிய கடமைகளை நிறைவேற்ற சக்தியுள்ளவர்களாவோம். நாம் இளமையில் செய்யும் முயற்சிகள் முதுமையில் பயன்படுகிறதுபோலவே, நாம் இம்மையில் செய்யும் முயற்சிகள் மறுமையில் பயன்படும்.

(*a*) Men start in life unfurnished: *needing* acquired qualifications of knowledge and experience to fit them for after life.

ஒருவன் இளமைமுதல் படிப்படியாய்த் தேறாமல், ஒரே முறையில் பூரணபுருஷனாய் உலகத்தில் உதிப்பானாகில் அவன் நீக்குப்போக்கு அறியாமல், திக்குத்திசை தெரியாமல், அப்பியாசமும் முயற்சியும் இல்லாமல், மதியற்றவன்போல் தான் செய்யவேண்டிய கடமைகளைச் செய்யாமல் மலைத்துப் பிரமித்து விறைத்துநிற்பான். அப்பியாசமில்லாமல் தன் கண் காண்கிறதும் தன் காது கேட்கிறதும் இன்னதென்று பரிட்சையில்லாதவனுக்கு விளங்காது.*

1. If man were born with natural faculties, yet without training, he would be distracted how to use them; and probably,

2. So self-willed as to be unfit to learn.

இப்படிப்பட்டவர்கள் கற்க இணங்கார்கள், அடக்கம் இன்னதென்று அறியார்கள். அவர்களிடத்தில் வீண்சேஷ்டைகள் விளங்குமேயல்லாமல் நற்செய்கைகள் விளங்குவது அரிது. படிப்பும், முயற்சியும், அப்பியாசமும் இல்லாதவர்கள் மூடத்தனமாய் நடந்து அடங்காமை பாராட்டிப் பல கேடுகளைச் செய்வார்கள்.

---

* ஐம்புலன்களின் சக்தியும் அப்பியாசத்தினாலும் பழக்கத்தினாலுமே விளங்கும். ஒரு விஷயத்தைக் கண்ணினாலே முதல்முதல் பார்த்தால் போதாது, அதைத் தொட்டுப்பார்த்து அறியவேண்டியிருக்கிறது. பார்வையில்லாமையால் சாவி இன்னதென்று கையினால் தொட்டு அறிந்திருந்த ஒருவன் பின்பு வயித்தியசக்தியினால் பார்வையடைந்தபோது கண்ணால் கண்ட சாவி இன்னதென்று அவனுக்குத் தெரியாமல், கையினால் அதைத் தொட்டுப்பார்த்தபின்பு அறிந்துகொண்டானும்.

மனுஷர் குழந்தைகளாய் இவ்வித குறைவுள்ள இயற்கை அறிவோடு பிறந்து வளர்ந்தாலும் செயற்கை அறிவினாலும் பழக்கத்தினாலும் அநுபவத்தினாலும் தேறுதலடைந்து, இளமையில் கற்றதை முதுமையில் பயன்படுத்த ஏதுவுள்ளவர்களாகிறார்கள்.

(b) This need Nature supplies, by placing us at the outset in a condition for *acquiring* the necessary discipline and improvement.

(1) பிள்ளைகள் சிறுபிராயமுதல் பற்பல விஷயங்களைக் கண்டறிந்து கற்றுணர்ந்து, அறையிலே ஆடி அம்பலத்தில் ஆடப்பழகுகிறார்கள். வீட்டில் பெற்றோர்களுக்குக் கீழ்ப்படிந்து நடக்கக் கற்ற பிள்ளைகள் அடக்க ஒழுக்க முள்ளவர்களாய் நடந்துகொள்ளத் தகுதியுள்ளவர்களாகிறார்கள்; மற்றவர்களிடத்தில் விளங்கும் நன்மைதீமையின் பலனைக்கண்டு மோசநாசத்துக்கு எச்சரிக்கையாய் நடந்துகொள்ள ஏவப்பட்டு புத்திமான்களாகிறார்கள். (2) இந்த அறிவு பெரும்பாலும் புறத்திலிருந்து வந்தாலும், அது பயன்பட அகத்தில் வேரூன்றி சுயமுயற்சியினால் விருத்தியடையவேண்டும். (3) இந்தச் சிட்சை அல்லது படிப்பினை கையாளப்படுகிறபடியே மனுஷர்களுடைய குணமும் நடக்கையும் நிலைமையும் இருக்கும். இளமையில் சிறுமைப்பட்டுக் கற்றவர்கள் முதுமையில் பெருமைபெற்று சீரடைவது இயல்பு.

1. Children learn gradually the objects and facts around them; are placed under domestic government, where they are taught self-control and obedience, and afterwards by experience they acquire caution and acquaintance with rules of conduct innumerable.

2. This learning, however, depends much upon themselves; though part is communicated by others.

3. Upon their behaviour and use of this discipline, their character and station depend.

இப்பொழுது சொன்னகாரியங்களுக்கெல்லாம் நம்முடைய ஆத்தும தர்மநிலைமையும் ஒத்திருக்கும். இம்மையில் நாம் செய்யும் முயற்சிக்குத் தக்கபலன் நமக்குக் கிடைப்பதுபோல, மறுமையிலும் நம்முடைய முயற்சிக்குத்தக்க பலன் நமக்குக் கிடைக்கும்.

(a) To all this our religious probation is analogous; so that

(b) Even if the manner of that religious probation is not quite discernible,

this is no objection. For we see not the manner of our present probation, though we see its results (sleep, food, restraint).

அது எப்படியென்று நாம் விண்பிரமை கொள்ளவேண்டியதில்லை. நாம் சாப்பிட்டு நித்திரைசெய்வதினால் நம்முடைய சரீரம் எப்படி வளருகிறதென்று நாம் அறிய ஏதுவில்லை. நாம் பிள்ளைகளாயிருக்கும்போது நமக்குச் சொல்லப்படும் பாடங்களுக்கும் நமக்குச் செய்யப்படும் சிட்சைகளுக்கும் நியாயம் இன்னதென்று நமக்குத் தெரியாமற்போனாலும், பின்பு அதின் பயனும் பண்பும் விளங்கும். அப்படியே இம்மையில் நாம் செய்யும் முயற்சியின் பண்பும் பயனும் நம்மை மறுமைக்குரியவர்களாக்குமென்பது ஏற்றகாலத்தில் விளங்கும்.

IV. Looking more closely at our *present religious probation* only (the present life preparing us for another), note,

IV. இளமையில் கற்குங் கல்வியும், செய்யுமுயற்சியும் நம்மை முதுமைக்குரியவர்களாக்குகிறது போலவே, இம்மையில் நாம் தர்மநிலையில் நின்று தேறுதலடைந்து குணசாலிகளாவது மறுமைக்கு நம்மை உரியவர்களாக்கும். நாம் மறுமையில் ஜீவித்திருப்பது தனிமையான நிலைமையும் முயற்சியில்லாத நிலைமையுமாயிராமல், பரகதியடைந்த பலரோடுகூடிப் பரத்துக்கடுத்த முயற்சிகளைச் செய்து சத்தியம் நீதி அன்புமுதலிய குணங்களைப் பாராட்டும் நிலைமையாயிருக்கும். கடவுள் உலகத்தை ஆளுகிற ஆளுகை தர்ம ஆளுகையாயிருக்கிறபடியால், தர்மமாகிய நற்குணமும் பக்தியுமில்லாமல் மறுமைக்குரியவர்களாகக்கூடாது.

*(a)* That future life will apparently be moral, social, with scope for virtue, and requiring it, though there is much not revealed.

நாம் சிட்சையினால் தேறுதல் அடையக்கூடுமென்று முன்னமே திருஷ்டாந்தப்படுத்தியிருக்கிறது. அந்த சிட்சை நமக்கு அகத்தியமாய் வேண்டியது என்பதற்கு அத்தாட்சி வேண்டியதில்லை. தீவினைகளுக்கு ஏவும் குணவிகாரங்களினால் நாம் தேறுதலடையக்கூடாது; மனுஷர்களுடைய இயல்புபாவத்தினால் விகாரப்பட்

*(b)* Our capability of moral improvement in preparing for that state has already been proved. (II. b. 1—6).

டிருக்கிறது. மனுஷீகத்துக்குரிய மனம் புத்தி முதலானவைகள் வழுவி விகாரப் பட்டிருக்கிறபடியால், அக்கிரமம் செய்வதும் நற்குணங்களில் குறைவுள்ளவர்களாயிருப்பதுமே சிற்றறிவுள்ள மனுஷருக்கு இயல்பாயிருக்கிறது. நமக்குள் நியாயம் இன்னதென்று உணர்ந்தறியும் புத்தி இருக்கிறதுமல்லாமல், சில விஷயங்களைப்பற்றி ஏவிவிடும் ஆசாபாசங்களுமுண்டு. இந்த ஆசாபாசங்களைத் தகுந்தபடி நிறைவேற்றும்பொருட்டு தர்மநிலையுள்ள புத்திக்கு அடங்கியிருக்கவேண்டும். தர்மநிலையுள்ள புத்தியானது ஆசாபாசங்களை ஏவிவிடுகிறதுமில்லை, அவைகள் ஏவிவிடப்படும்போது அவைகளை அடக்குகிறதுமில்லை. அந்தஆசாபாசங்களுக்குஅடுத்த விஷயங்கள் நேரிடும்போது அவைகள் தகுதியாயிருந்தாலும் தகாததாயிருந்தாலும் இயல்பாய் அவைகளை அநுபவிக்க ஏவப்படுகிறோம். ஜீவனுக்கு இதமும் இன்பமுமான விஷயங்களை நியாயமானபடி நாம் அநுபவிக்கக் கூடாதிருந்தாலும், அவைகளை முற்றிலும் அடையக்கூடாதிருந்தாலும், அவைகளைப் பற்றியிருக்கிற ஆசை நம்மைவிட்டு நீங்காது, மனது அவைகளை நாடும். நியாயமாய் அநுபவிக்கத்தக்க சில இயல்பான விஷயங்களைத் தகாதவிதமாய் நாம் அநுபவிக்கநாடும்போது, அநியாயமான பிரயத்தனங்களைக் கையாடவும் அதனால் மோசத்துக்கு உட்படவும் ஏதுவுண்டு. புறம்பான பாவவிஷயங்களைப் பற்றின மோசத்துக்குத் தக்கபடி உள்ளான தர்மவிஷயங்களைப் பற்றின காவலும் இருக்கவேண்டும். இந்த மனோதர்மம் அப்பி

*(c)* Our need of moral improvement will appear from the following considerations.

1. In fact, mankind are wicked, and at best, imperfect. (constitutionally deficient).

2. From our nature, as finite beings, we are in danger of deviating from right, *(a)* Through particular affections, which fix on external objects, are excited by them independantly of the moral principle, and our only security is *(b)* from the moral principle strengthened into habit. To apply this to a future life supposes that particular affections will exist there. If they do, then this discipline will be required. If they do not, still the discipline will secure increased happiness, if the government of the universe is moral.

யாசத்தினலும் முயற்சியினலும் பலப்படும்போது புறம்பான சோதனைகளுக்கு இடங்கொடாமல், நம்மைப் பத்திரமாய்க் காக்கும். இந்த மனோதர்மஞ் சிட்சை முயற்சி அப்பியாசம் அநுபவம் முதலான பயிற்சிகளினல் தேறி நம்முடைய ஆசாபாசங்களை அடக்கி, நியாயத்தையும் நீதியையும் செய்யும்படி ஏவி, நம்மை இகபர நன்மைகளுக்கு உரியவர்களாக்கும். உலகவிஷயங்களைப்பற்றின ஆசைகளைக் கண்டித்து அடக்கும்படி மனோதர்ம முயற்சி மறுமைக்கு வேண்டியதாயிராவிட்டாலும், தர்ம அப்பியாசங்கள் இம்மையிலும் நம்மைத் தேறும்படி செய்து மறுமையிலும் பரமசுகத்துக்கு உரியவர்களாக்கும்.

3. The conclusion and a fresh proof is, that a nature originally upright may, through these laws, fail or be improved in virtue.

இவைமுதலான நியாயங்களினலே செம்மையான நிலைமையில் உண்டாக்கப்பட்ட மனுஷர்கள் பாவத்தில் விழுந்து கெட்டுப்போவதும், தங்களுக்குரிய செம்மையான நிலைமையைக் காத்துக்கொண்ட தூதர்கள் தர்மத்தில் அதிக உறுதிப்பட்டிருப்பதும் எப்படியென்று கவனித்து அறியலாம்.

(a) An upright man may fall; not through liberty, which can account for nothing, but through particular affections in themselves sinless. (five particulars.)

சுவாதீனமுள்ளவர்கள் தங்கள் இஷ்டப்படி நடந்து, நன்மைசெய்வதை விட்டுத் தீமைசெய்து, செம்மையான நிலைமையிலிருந்து விழுந்து கெட்டுப்போகலாமென்று சொல்லக்கூடியதாயினும், அப்படி சொல்வதிலும், அவர்களுக்குரிய ஆசாபாசங்களுக்கடுத்த இயல்பான குணங்கள் விகாரப்படுகிறதினலேயே தீவினைசெய்து பாவத்தில் விழ ஏதுவாயிருக்கிறார்களென்று சொல்லக்கூடும். சிருஷ்டிகளுக்கு உண்டாயிருக்கிற நிலைமைக்குத்தக்க குணங்கள் அளிக்கப்பட்டிருக்கிறது. அந்தக் குணங்களை ஆண்டு நடத்த மனோதர்மமும் உள்ளத்தில் அமைக்கப்பட்டிருக்கிறது. இயல்பான குணங்கள் தர்மநிலையில் நின்றொழுகுமாகில் சித்தமும் செயலும் சமரசப்பட்டு, உத்தமமும் பூரணமும் விளங்கும். நமக்கு

ரிய குணங்களை எவுகிற விஷயங்கள் நேரிடும்போது இச்சை தோன்றும்; இச்சையானது மனோதர்மத்துக்கு அடங்காமல் அதை மீறி நடக்கும்போது தீவினை பிறக்கும். தீமையை மனதினால் நினைக்கிறதினாலும் தோஷமும் மோசமுமுண்டு. தீவினை முதல்முதல் மனதில் பிறக்கும்போது குணங்கள் விகாரப்படும், உத்தமம் குலையும்; தீவினை பழக்கமாகி வேர் கொள்ளும்போது சீர்கெட்டுக் கேடுண்டாகும்.

(b) மனோதர்மம் தன் அதிகாரத்தைச் செலுத்தி குணத்தை விகாரப்படுத்தாதிருக்குமானால், தர்மநிலை குலையாமல் வளர்ந்தோங்கும். தீவினைக்கு இடங்கொடுக்கிறதினால் தன்மையும் குணமும் கெட்டுப்போம். தன்னைத்தான் ஆண்டு அடக்கி நடத்தும் முயற்சியானது தன்மையையும் குணத்தையும் உறுதிப்படுத்தி, நல்வினையினாலும் பழக்கத்தினாலும் மனதைப் பலப்படுத்தி, வழுவித் தவறிவிழாதபடி காத்துக்கொள்ளும். என்றாலும் மனோதர்மத்துக்கும் நடக்கைக்கும் பூரணசம்பந்தமில்லாதபடியால் மகா எச்சரிக்கையாயிருக்கவேண்டும்.

(b) Or be improved to higher and securer virtue, by following the moral principle, which would be strengthened as the particular affections would be weakened, till at last, security would be perfect; though a fall would always be possible, because the affection and the moral principle would never be absolutely coincident.

கடவுளால் குற்றமற்றவர்களாகச் சிருஷ்டிக்கப்பட்டவர்கள் சிட்சையினாலும் அநுபவத்தினாலும் மனோதர்மத்தைக் காத்து நல்வினை பழக்கங்களில் உறுதிப்படாதிருப்பார்களானால், தவறி வழுவிக் கெட்டுப்போக எதுவாயிருக்கிறார்கள். நிறைகாக்குங் காப்பாகிய அகத்துப்பிரமாணத்தோடு நல்வினைப் பழக்கங்களாகிய புறத்துப்பிரமாணமும் இசைந்திருந்தாலொழிய நாம் தர்மநிலையில் நிற்க இயலாது.

(c) Hence, creatures made perfect may need discipline as a security against falling, and a state fit for discipline may be requisite even for them.

குறைவற்ற உத்தமநிலைமையில் இருக்கிறவர்கள் தேறுகிறதற்கே நல்வினை பழக்கங்கள் வேண்டியதானால், வழுவித் தவறி விழுந்துபோன

4. If an upright nature needs im-

provement, much more does one that has fallen.

வர்களுடைய குணமாறுதலுக்கும் தேறுதலுக்கும் நல்வினை பழக்கங்கள் அதிகமாய் வேண்டியதல்லவா? உத்தமர்கள் தேறுதலடைய நயமும் பயமுமான கல்விப்பயிற்சியும் தர்மமுயற்சியும் வேண்டும். கெட்டுப்போனவர்கள் தேறுதலடைய கடுஞ்சிட்சையினால் உண்டாகும் மனமாறுதலும் குணப்படுதலும் வேண்டும்; இரட்சை சிட்சையே இவர்களுக்குள்ள தீமையை அகற்றி நன்மையைப் பிறப்பிக்கக்கூடும்.

(*d*) The present state is peculiarly fit for such discipline, for

மனுஷர் தங்கள் நிலைமையைச் சீர்திருத்தித் தேறுதலடைய இம்மைக்குரிய நிலைமையே அதற்கடுத்ததென்று விளங்குகிறது. (1) சோதனைகளையும் வஞ்சனைகளையும் உணர்ந்து, தீவினையினால் உண்டாகும் துன்பத்தை அநுபவித்து, தீவினையினால் பிறர்படுந் துன்பத்தையும் பார்த்து அறிந்தவர்கள் அடக்கமும் ஒடுக்கமுமுள்ளவர்களாயிருக்கவும் சீர்ப்படவும் ஏதுவுண்டு.

1. It teaches moderation and self restraint.

2. Shows peculiarly our liability to vice: a different thing from speculative knowledge.

(2) நம்முடைய பலவீனங்களையும் குணவிபரீதத்தினால் வரும் மோசங்களையும் உணர்வதுமல்லாமல் நம்மை உண்டாக்கி நமக்குரிய இயல்பை அளித்த கடவுளுடைய சர்வவல்லமையையும் உணர்ந்து, நாம் சீர்ப்பட்டுக் குணப்படாவிட்டால் முற்றிலும் கெட்டழிந்துபோவோம் என்கிற எண்ணத்தையும் கவனிப்போமானால் நாம் தேறுதலடைகிறதற்கு ஏதுவாயிருக்கும்.*

3. It puts us on our guard, exercises self denial, the moral principle, and forms virtuous habits. Self denial, indeed, is not necessary to virtue, but it conduces to form *habits* of virtue.

இம்மையில் நாம் அடக்கமுடையவர்களாய் நல்வினை பழக்கங்கள் செய்து தர்மநிலையில் நின்று தேறுவோமானால் அது நம்முடைய மனதில் மறுமைக்கு நித்திய வித்தாகிப் பலிக்கும்.

---

* மேலான நிலைமையிலிருக்கும் தூதர்கள்முதலாய் நிலைதவறி வழுவி விழாதபடி எச்சரிக்கையாயிருக்கவேண்டியது. அந்த எச்சரிக்கையைக் கைபோடாமல் அகங்காரங்கொண்டு மீறிநடந்த தூதர்கள் பிசாசுகளானார்களே.

தீமைக்கு உட்படுத்தும் மயக்கங்களும், கடமைகளை நிறைவேற்றாதபடித் தடுக்கும் தடைகளும், நேர்வழியில் வழுவாமல் நடக்க எச்சரிப்பில்லாமையும், அநியாயமாய் நடந்துகொள்ளும்படி நேரிடும் சந்தர்ப்பங்களை எதிர்க்க உறுதியில்லாமையும் இவ்வுலகத்தில் நமக்குக் கண்ணிகளும் சோதனைகளுமாயிருக்கிறது. இந்த சோதனைகளை வென்று உத்தமராய் விளங்குவோமானால், இந்த சோதனைகளே நம்மை மறுமைக்குரியவர்களாக்கத்தக்க கருவிகளாகும்.

தன்னை அறிந்து தலைவனையும் அறிந்து உறுதியைப்பற்றியிருக்கும் அடக்கமானது தன்னை ஆண்டு நடத்துவதுமல்லாமல் நல்வினை பழக்கங்களையும் உண்டுபண்ணும். நமக்குப் பிரியமாயிருக்கிற காரியங்களையும் நமக்கு ஒத்துக்கொள்ளுகிற காரியங்களையும்மாத்திரம் செய்வது தர்மமல்ல; வருத்தம், சங்கடம், மோசம் முதலானவை நேரிட்டிருக்கும்போது நாம் துணிந்து செய்யும் நன்மையே தர்மமாகும்.

B. Objections. 1. It may be said, this state of discipline overtaxes our powers and supposes a degree of improvement greater than we are capable of.

இந்தப் பரீட்சை நிலைமையானது நம்முடைய சக்திக்கு மேற்பட்டதாயிருக்கிறதென்று சிலர் ஆட்சேபிப்பார்கள். மனமுயற்சியினாலும் சரீரமுயற்சியினாலும் கூடியமட்டும் எப்படி ஒருவாறு தேறுதலடைகிறோமோ, அப்படியே தர்மமுயற்சியினாலும் ஒருவாறு கூடியமட்டும் தேறுதலடைகிறோம். என்றாலும் தர்மத்தில் தேறுதலடையும்படி அதற்கு வேண்டிய முயற்சிகளை இம்மையிலேயே செய்யவேண்டும்.*

2. It is said that, in fact, this life is rather a discipline in vice than in virtue. Answer: that God did not intend it to be so.

மனுஷர் பெரும்பாலும் இம்மையிலே தர்மத்தில் தேறாமல் அதர்மத்தில் தேறி புண்ணியத்தை நாடாமல் பாவத்தையே நாட ஏதுவுள்ளவர்களாயிருக்கிறார்களென்று சிலர் ஆட்சேபிப்பார்கள். என்றாலும் இம்மையில் தீயோர் செய்யும் தீவினையின் பலனைக் காணும்

* "தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக் கற்றனைத் தூறு மறிவு." குறள்.

போது நல்லோர் தர்மத்தை நாடி நல்வினை செய்வதற்கு ஏது வுண்டாகும்.

(a) It is not intended to give all the reasons why men are placed here, but some only.

இம்மையில் சோதனையான நிலைமையில் மனுஷர் ஏன் வைக்கப்பட்டிருக்கிறார்களென்கிற கேள்விக்குச் சொல்லத்தக்க நியாயங்கள் முழுவதையும் சொல்லாமல், சிலவற்றைமாத்திரம் வேண்டியவரையில் எடுத்துச் சொல்லுகிறோம்.

(b) And in fact, this life is a discipline in virtue to all who are willing to make it so.

சிலர்மாத்திரம் தேறுதலடைந்து அநேகர் கெட்டுப்போகிறதினால் மறுமைக்கு நம்மை உரியவர்களாக்கும்படிக்கே கடவுள் இம்மையில் சோதனையான நிலைமையில் நம்மை வைத்திருக்கிறார் என்கிற உண்மைக்குப் பழுதில்லை. (b) தர்மத்தில் தேறி மறுமையில் பலனடையவிரும்புகிற யாவருக்கும் இம்மையே தகுந்த சிட்சைரட்சை நிலைமையென்பதற்குச் சந்தேகமில்லை.

(c) The fact that such discipline is wasted with some is only analogous to other facts of waste; of seeds, for example, which yet God created to become fruitful. The things here compared are, indeed, different in value, but the facts are equally unaccountable.

(c) சிலர் தேறாமல் போவதற்குக் காரணமென்ன? உலகஇயலைக் கவனித்துப் பார்த்தால் அதின் காரணம் ஒருவாறு தோன்றும். நிலத்தில் விளைந்தோங்கும்படி போடப்படுகிற பலவிதமான வித்துகளில் ஆயிரத்தில் ஒன்றுமாத்திரம் பூரணபக்குவமாகி பலன் தரும். மற்ற வித்துக்களெல்லாம் அழிந்துபோகிறதே, இதற்குக் காரணமென்ன? மனுஷருடைய சரீரங்களும் மிருகங்களுடைய சரீரங்களும் பூரணபக்குவமடையும்படியே உண்டாக்கப்பட்டிருந்தாலும் பக்குவமாகிறதற்குமுன்னமே இளமையில் எவ்வளவோ சரீரங்கள் அழிந்துபோகிறதைக் காண்கிறோம், இதற்குக் காரணமென்ன? இதை நாம் இயல்பு என்று சொல்லாமல் இயல்பின் விகாரம் என்றே சொல்லவேண்டும். அப்படியே தர்மத்தில் தேறாமல் கெட்டுப் போகிறவர்களுடைய நிலைமையையும் இயல்பான நிலைமையென்று சொல்லாமல் இயல்பின் விகாரமென்றே சொல்லவேண்டும்.

இம்மையானது பரீட்சை நிலைமையென்பதைப்பற்றிச் சொல்லப்படும் வேறொரு ஆட்சேபனையுமுண்டு. அதென்னவென்றால்; நரகாக்கினைக்குத் தப்பிக்கொள்ளும் பயமும், தற்சிநேகத்தின் பொருட்டுப் பரமசுகத்தை அநுபவிக்கலாம் என்கிற பலனை நாடும் நாட்டமுமே, தர்மநிலைமைக்கு ஆதாரமாயிருப்பதினால் அது சிட்சைரட்சையான நிலைமையென்று சொல்லத்தகாதென்று சிலர் ஆட்சேபிப்பார்கள். இதற்கு உத்தரவு என்னவென்றால்,

3. It is said, against the whole of this discipline, that it makes moral conduct proceed from fear and self-love, and so is not properly moral discipline at all. To which answer,

(க) கடவுளின் கட்டளைகளைக் கைக்கொள்ளுதல் நயமும் பயமுமான காரியமாயினும், அவருக்கு அடங்கிப் பணிந்து நல்வழியில் நடந்து தர்மத்தில் பழகி, சத்தியம் நீதி அன்பு முதலியவற்றைத் தழுவி, நாளுக்குநாள் புண்ணிய நிலைமையில் தேறி, பரமபலனை நாடி அவருடைய கட்டளைகளைக் கைக்கொள்ளுகிறது நம்முடைய கடமையாம்.

To do God's commands because He gives them is obedience, even though it proceed from fear or hope, and repeated acts of obedience will form the moral habit.

தேவ்கட்டளைகளுக்கு இணங்குவதும், தேவசித்தத்துக்கு அடங்குவதும் நம்முடைய கடமையாயிருக்கிறதுமல்லாமல், அது நமக்குத் தகுதியாயுமிருக்கிறது. இம்மையில்மாத்திரமல்ல, மறுமையிலும் இப்படிச் செய்வது உத்தமர்களது இயல்பாம்.*

(b) This distinction between self-love and regard to God's authority may be too finely drawn. Both are coincident, and may coexist as just principles of action. He, moreover, who begins to act from the first, will come ultimately to act morally in the highest sense.

துன்பம் நிறைந்த இம்மைக்குரிய பரீட்சையான நிலைமையில் தேறுதலடைய அடக்கமும் ஒழுக்கமும் அகத்தியம் வேண்டியதே. அடக்கமுடைமையும், பரித்தியாகமாகிய துறவு

4. The discipline here spoken of includes passive resignation, and this can

* "அடக்க மமரருளுய்க்கு மடங்காமை
யாரிரு ளுய்த்து விடும்." குறள்.

have no place in heaven, because *there* are no afflictions. Answer. *(a)* Prosperity may beget discontent, as well as affliction.

முதலான குணங்களும் துன்பமில்லாத மறுமைக்குவேண்டியதில்லையென்று ஆட்சேபிப்பாருண்டு. பரித்தியாகமாகிய துறவும் அடக்கமுமாகிய உத்தமகுணங்கள் இம்மைக்குமாத்திரமல்ல மறுமைக்குமுரியவைகள். *(a)* செல்வமும் சுகமுமுள்ள இடத்தில் முதலாய் திருப்தியில்லாமை இருக்கலாம். துறவில்லாவிடில் சிற்றின்ப ஆசைகள் தொலையாது. பாவமும் துயரமும் இல்லாத இடத்திலும் அடக்கம் பொறுமை முதலான நற்குணங்கள் வேண்டியதே.

*(b)* And though resignation is not needed in heaven, the habit may be, for, without such habits, self-love and particular affections may be excited beyond their proper limits.

*(b)* மறுமையில் பரித்தியாகமாகிய துறவு வேண்டியிராதாலும், இம்மையிலிருந்தபோது இருந்த அந்தப் பழக்கம் மறுமையில் பேரின்ப ஆசைகளை முதலாய்ச் சமரசப்படுத்த உதவும்.

*(c)* Submission to God's sovereignty, which is not usurped and precarious, but just and eternal, requires in heaven the same temper as resignation upon earth.

*(c)* அடக்கமும் ஒடுக்கமும் யாவருக்கும் எப்பொழுதும் வேண்டியதே. துன்பம் நேரிடும்போது கடவுளுடைய சித்தத்துக்கு இணங்கும் இந்த நற்குணம் நம்மைத் தாங்கும். சர்வத்துக்கும் ஏகச்சக்கிராதிபதியாகிய கடவுளுடைய நியாயமான ஆளுகைக்குட்பட்டு ஆண்டவருடைய அதிகாரத்துக்கு அடங்கியிருப்பது அடியாராகிய நம்முடைய கடமையும் மேன்மையுமாயிருக்கிறது.

இப்படிப்பட்ட தன்மையும் குணமும் இம்மைக்குரிய பூரணவாழ்வுக்கு அடுத்தது. இதை நாம் நாளுக்குநாள் கொஞ்சங்கொஞ்சமாய்க் கற்றுத் தேறுதலடைந்தால் அது நம்மை மறுமைக்குப் பக்குவமுள்ளவர்களாக்கும்.*

* "அறத்தால் வருவதே இன்பம்." இன்பந்தரும் அறத்தின் பட்சமாய்க் கடவுள் இருக்கிறபடியால் நாம் அறஞ்செய்ய விரும்பவேண்டும். சிலவேளைகளில் அறத்தினால் உடனே இன்பம் பிறவாமற்போனாலும் அறத்தையே நாம் நாடவேண்டும். "என் நுகம் மெதுவாயிருக்கிறது" என்று சொன்ன ரட்சகரே "உன் சிலுவையை எடுத்துக்கொண்டு என்னைப் பின்பற்றிவா" என்றும் திருவுளம்பற்றியிருக்கிறார். மத். 11. 26.

இந்த சிட்சைரட்சையினால் உண்டாகும் வருத்தமும் அபாயமும் இல்லாமல், மனுஷர் இருக்க வேண்டிய சீரில் உண்டாக்கப்பட்டிருந்தால் நலமாயிருக்குமென்று சிலர் ஆட்சேபிப்பார்கள். அதற்கு உத்தரவு என்னவென்றால், இந்த ஆட்சேபனை வீண், இது இயல்புக்கும் அநுபவத்துக்கும் விரோதம். (a) முயற்சியும் வருத்தமும் இல்லாமல் யாதொரு நன்மையையும் அடையக்கூடாது. மனுஷர் இருக்கவேண்டிய சீர் அவர்களுடைய நடக்கையின் பயனாயிருக்கிறது. (b) கல்விப்பயிற்சியினாலும் அநுபவத்தினாலும் பழக்கத்தினாலும் அடைந்த செயற்கை அறிவு நம்முடைய குறைவை நிறைவாக்கி நமக்கு நேரிடுகிற அபாயத்தினின்று நம்மைக் காக்கும். (c) இம்மைக்குரியவைகளிலும் மறுமைக்குரியவைகளிலும் முயற்சிக்குத் தக்க பலன் உண்டென்பதற்குச் சந்தேகமில்லை.

5. But might not all the difficulty and risks of this discipline, have been prevented, if men had been made at once what they were to be? To which answer,

(a) The law of life is not to save us trouble, but to impose it, and enable us to go through it. What we become seems ever dependent upon what we do.

(b) Improvement by habit supplies natural deficiency, and creates natural security, as acquirement in natural things meets our bodily needs.

(c) And everywhere we are to choose improvement at the price of effort, or misery as the result of neglect.

பரீட்சைநிலைமையானது அபாய நிலைமையாயிருக்கிறதுமல்லாமல், தேறுதலடையும் நிலைமையாயும், நம்முடைய தன்மையையும் குணத்தையும் விளக்குவிக்கும் நிலைமையாயுமிருக்கிறது. அறையிலே ஆடி அம்பலத்தில் ஆடவேண்டியது. மனுஷர் உலகமாகிய நாடகசாலையில் ஆடுவது சர்வஞ்ஞான கடவுளானவர் அறியும்பொருட்டல்ல, தன்னைப்போன்ற மனுஷர் அறியும்பொருட்டே. இந்த நாடகசாலையில் மனுஷருடைய தாரதம்மியம் வெளியாகும், குணகுணங்கள் விளங்கும்.

6. Probation not only implies risks (ch. 4) and aids improvement (ch. 5), but it seems also intended for a *third* purpose,—it is a theatre for the manifestation of character.

1. This manifestation may refer only to this life; but it may refer also to the next: God intending to show what men are, in order to make it clearer on what principles He deals with them.

இந்த நாடகசாலையில் மனுஷருடைய தாரதம்மியமும் குணகுணங்களும் விளங்குவது இம்மைக்கடுத்ததாயிருந்தாலும், இது மறுமைக்கும் உதவும். இதினால் கடவுளுடைய உண்மையும் உத்தமமும் அவர் மனுஷர்களுக்கு அளிக்கும் பலனும் தண்டனையும் இன்னதென்று விளங்கும்.

2. Certainly in this life such manifestation is a means of present moral government, and seems essential to it; always improving men, if they act well.

இம்மையில் செய்யும் முயற்சி நமக்கு மறுமையில் பலிக்கும் என்றும், இம்மைக்குரிய சிட்சைரட்சை நம்மை மறுமைக்குரியவர்களாக்கும் என்றும் உலகநியலில் தோன்றும் கடவுளுடைய தர்மஆளுகையினால் விளங்கும்.*



Whence is moral evil? What is sin?

* பிரமாண விரோதமே பாவம். அது மனுஷஜென்மத்துக்கும் சாபத்துக்குமுரிய ஆதிவியாதி— "இச்சையானது கர்ப்பந்தரித்து பாவத்தைப் பிறப்பிக்கும்; பாவம் பூரணமாகும்போது மரணத்தைப் பிறப்பிக்கும். (யாக்கோபு, 1. 15). இதற்கு இசைவாய்:

பேதமை யென்னும்வித்தில் பிறந்துபின் வினைகளென்னும்
வேதனை மரக்கள்நாறி வேட்கைவேர் வீழ்த்து முற்றிக்
காதலும் களிப்புமென்னும் கவடுவிட் டவலம்பூத்து
மாதுய ரிடும்பைகாய்த்து மரணமே கனிந்துநிற்கும்"

என்று சிந்தாமணியில் சொல்லியிருக்கிறது.

"பாவத்தின் சம்பளம் மரணம்." ரோ. 6. 23. ரோ. 8. 20, 21. காண்க.

பாவம் வந்தவழி என்னவென்று கேட்பவர்கள், மனுஷன் சுயாதீனனாய் உண்டாக்கப்பட்டிருக்க வேண்டியதென்னவென்று கேட்கவேண்டும். சுயாதீனமுள்ள மனுஷன் விதிவிலக்குகளுக்கு உட்பட்ட உத்தரவாதியானாலும், சுயசித்தத்தினால் நன்மைதீமை இவ்விரண்டையும் செய்ய ஏதுவுள்ளவனாயிருக்கிறதுமல்லாமல், தீமையை ஒழித்து நன்மையைச் செய்யவும் ஏதுவுள்ளவனாயிருக்கிறான்; இதுதான் பரீட்சைநிலைமையென்னப்படும். கடவுளானவர் இந்தப் பரீட்சைநிலைமையைத் தம்பொருட்டு அல்ல, மற்ற யாவருக்கும் நம்முடைய குணகுணங்கள் விளங்கும்பொருட்டே நியமித்திருக்கிறார். பரீட்சைநிலைமையாகிய இந்த அக்கினியானது களிம்பைப் பட்சித்து ஆத்துமசுத்தியை உண்டுபண்ணும். இருள் இல்லாவிடில் ஒளி இராது, வியாதி இல்லாவிடில் சுகம் இராது, தீமை இல்லாவிடில் நன்மை இராது, பாவம் இல்லாவிடில் புண்ணியம் இராது. பாவமாகிய இந்த விஷத்துக்கு மாற்றும் இந்த வியாதிக்கு மருந்தும் அருள்வேதத்தில் உண்டு.

# CHAPTER VI.

*Of the opinion of Necessity (Fate), considered as influencing practice.*

# 6-ம் அதிகாரம்.

## விதியையும் முயற்சியையும் பற்றிச் சொல்லியது.*

The credulity given to the general doctrine of religion is not weakened by the opinion of Necessitarians or Fatalists.

மனுஷர் இம்மையில் செய்யும் நன்மைதீமைக்குத் தக்க பலாபலன்களை மறுமையில் அடைவார்களென்று முந்தின அதிகாரங்களில் சொன்ன நியாயங்களை விதிவசமானது சகலத்தையும் ஆண்டு நடத்துகிறதென்று சாதிக்கிற விதிவாதிகள் ஆட்சேபிப்பார்கள். அவர்களில் சிலர் தெய்வமுமில்லை தர்மமுமில்லையென்றும், சிலர் விதியே தெய்வம்; மனுஷருக்குச் சம்பவிக்கிற காரியங்களெல்லாம் விதியினால் ஆவதொழிய அவர்களுடைய மதியினாலும் முயற்சியினாலும் ஆவது ஒன்றுமில்லையென்றும் சாதிப்பார்கள். இந்தக் கொள்கை மறுமை உண்டென்பதற்கும், மனுஷர் சுயாதீனரென்பதற்கும், அவர்கள் தங்கள் செய்கைகளுக்கு உத்தரவாதிகளென்பதற்கும், முந்தின அதிகாரங்களில் நாம் சொன்ன நியாயங்களை நிராகரிக்கமாட்டாது. விதியானது உலகஇயலோடு சம்பந்தப்பட்டிருக்குமானால் அதின் உண்மை ஒப்புமைநியாயத்தினால் விளங்கி, அது வேதஅருளோடும் சம்பந்தப்பட்டிருக்கிறதாக விளங்கும். விதியானது உலகஇயலோடும் வேதஅருளோடும் சம்பந்தப்பட்டிராதபடியால் அதின் உண்மை ஒப்புமைநியாயத்தால் விளங்காது.

* Necessity என்னும் சொல் அவசியம் கட்டாயம் நிச்சயம் என்னும் மூன்று அர்த்தங்கொடுக்கும். மேலும் அது கட்டாயம் உற்சாகம் ஆகிய இவ்விரண்டையுங் குறிக்கிறதுமன்றி, கடவுளுடைய அநாதி தீர்மானங்களையும் அவருடைய பிரமாணங்களாகிய விதிவிலக்குகளையும் குறிக்கும். Fate என்னும் சொல் விதி, ஊழ், தெய்வம், நியதி, அதிர்ஷ்டம், கதி, கர்மவசம் முதலிய அர்த்தங்களைக் கொடுக்கும்.

றென்று நாட்டுகிறான். புத்தியும் சித்தமும் அதற்குரிய முயற்சியும் விளங்கும் இடத்தில் விதிக்கு இடமில்லை. கிரியா சக்தியும் ஊக்கமும் முயற்சியும் நோக்கமும் பிரயோஜனமும் விளங்கும் உலகவிஷயங்களில் அவைகளை நாட்டினவர் புத்தியும் சித்தமும் உள்ளவர் என்று விளங்கும். அவரே வேத விதியை விதித்தவரும், மனுஷருக்குள் சுயாதீனத்தை நாட்டினவருமாமே.

B. Does necessity, supposed reconcilable with Nature, destroy the belief that we are under moral government. No; for,

விதி உண்டென்றால், அதை விதித்தவர் உண்டாயிருக்கவேண்டுமென்றோம். எல்லாம் விதிவசத்தால் நடந்தேறுகிறது என்று சிலர் கொண்டிருக்கும் கொள்கை தர்மசெயலையும் புண்ணிய நிலையையும் குலைக்கமாட்டாது.

I. In practical matters (therefore religion included) necessity is as if it were false—e. g. *a*, Let a child act upon it, and he will find that it is either not true, or not acted upon as true.

விதிவாதி ஒருவன் ஒரு பிள்ளையைச் சிறு வயதுமுதல் தன் கொள்கையில் வளர்த்துப் படிப்பிப்பானானால், அந்தப் பிள்ளை பெரியவனாகும்போது, தன் செய்கையெல்லாம் விதியினால் செய்யப்படுகிறதென்று தீர்மானித்து, தான் நன்மையாவது தீமையாவது செய்வதினால் புகழுமில்லை பழியுமில்லை, பலனுமில்லை தண்டனையுமில்லையென்று சொல்லி, அந்தக் கொள்கைக்கடுத்த குணமும் செயலும் உடையவனாயிருந்து, தனக்கும் பிறருக்கும் விரோதமாய்த் தீமைசெய்து நடப்பானானால், புத்தியுள்ள உலகத்தார் அவனுடைய கொள்கைக்கும் நடக்கைக்கும் சம்மதிப்பார்களா? அவனைப் பயித்தியகாரன் என்றாவது, துஷ்டன் என்றாவது தீர்மானித்து, தண்டித்து, அவனுக்குப் புத்திபடிப்பிப்பார்கள் அல்லவா? இப்படிப்பட்டவன் புத்திமான்களால் இம்மையில் தண்டிக்கப்படுவானானால், உலகஇயலுக்குக் காரணகர்த்தாவாகிய கடவுளால் மறுமையில் தண்டிக்கப்படாமலிருப்பானா? யாதாமொருவன் விதிப்படி நடப்பது அநுபவத்திற்கு ஒத்துவராமல் தண்டனைக்குரியவனாகிறதைக் கண்டு உணரும்போது தான் விதிவசத்துக்கு உட்பட்டவனல்ல, தான் சுயா

தீனன், தன் செய்கைகளுக்குக் கணக்கு ஒப்புவிக்கவேண்டிய உத்தரவாதி, ஆகையால் விதி உண்டென்னும் கொள்கை உதவாது, முற்றிலும் கெடுத்துப்போடும்; புத்தியைக் கையாடி அநுபவத்தை நாடி நடப்பதே உத்தமம் என்று அறிந்து உணர்வதுமல்லாமல், உலகத்தில் நடந்தேறுகிற தெய்வச்செயலையும் உணர்ந்து, கடவுளும் மறுமையும் உண்டு என்று ஒத்துக்கொண்டு, தர்மத்தை நாடுவானல்லவா?

(b) Or let a man act upon it in common life. Hence, probably, men are free.

விதிவசம் உண்டென்கிற கொள்கை சாதாரண காரியங்களிலும் உதவாது. வியாதியுள்ள விதிவாதியானவன் பிடிவாதமாய் விதிவசத்தின்படி எல்லாம் ஆகும்; நான் சாகவேண்டியபோது சாவேனே ஒழிய அதற்குமுன் சாகவேமாட்டேன், மருந்தும் பத்தியமும் எனக்கு வேண்டியதில்லையென்று சொல்வானானால், ஜனங்கள் அவனைப் புத்திமான் என்று மதிப்பார்களா? ஒருவன் திருடினதற்காக தண்டிக்கப்படும்போது, இது என் விதி என்பானானால், அவனை தண்டிக்கிறவனும் இந்த தண்டனையும் உன் விதியென்று சொல்லி அவனை தண்டிப்பானல்லவா? விதிவசத்துக்கும் சாதாரண அநுபவத்துக்கும் சம்பந்தமில்லை. உலக இயலும் நம்முடைய சுயாதீனமும் ஒத்திருக்கிறது. நாம் சுயாதீனரானபடியால் சுயாதீனராக எண்ணப்பட்டு பிறரால் நடத்தப்பட்டுவருகிறோம். விதி உண்டென்னும் அநியாயமான கொள்கைக்கு பெருமையும் அகந்தையும் ஆதாரமாயிருக்கிறபடியால் இந்தக் கொள்கையை நாடிச் சாதிக்கிறவர்கள் வஞ்சிக்கப்பட்டு இகபர நன்மைகளை இழந்து மோசம் போவார்கள்.

(c) Nor let it be surmised that upon the opinion of necessity being true, we act upon it as false, and thence blame our reason; for God has given us practical principles, which we follow instead of reason, and to object to these is mere conceit.

2. Man, as well as God, is possessed of

மனுஷர் மனம்-புத்தி-சித்தம்-அகங்காரமுள்ளவர்களாயும், அதனால் விளங்கும் குணகுணங்களுடையவர்களாயுமிருக்கிறார்கள். இவைக

ரென்று நாட்டுகிறான். புத்தியும் சித்தமும் அதற்குரிய முயற்சியும் விளங்கும் இடத்தில் விதிக்கு இடமில்லை. கிரியா சக்தியும் ஊக்கமும் முயற்சியும் நோக்கமும் பிரயோஜனமும் விளங்கும் உலகவிஷயங்களில் அவைகளை நாட்டினவர் புத்தியும் சித்தமும் உள்ளவர் என்று விளங்கும். அவரே வேத விதியை விதித்தவரும், மனுஷருக்குள் சுயாதீனத்தை நாட்டினவருமாமே.

B. Does necessity, supposed reconcilable with Nature, destroy the belief that we are under moral government. No; for,

விதி உண்டென்றால், அதை விதித்தவர் உண்டாயிருக்கவேண்டுமென்றோம். எல்லாம் விதிவசத்தால் நடந்தேறுகிறது என்று சிலர் கொண்டிருக்கும் கொள்கை தர்மசெயலையும் புண்ணிய நிலையையும் குலைக்கமாட்டாது.

I. In practical matters (therefore religion included) necessity is as if it were false—e. g. *a*, Let a child act upon it, and he will find that it is either not true, or not acted upon as true.

விதிவாதி ஒருவன் ஒரு பிள்ளையைச் சிறு வயதுமுதல் தன் கொள்கையில் வளர்த்துப் படிப்பிப்பானானால், அந்தப் பிள்ளை பெரியவனானபோது, தன் செய்கையெல்லாம் விதியினால் செய்யப்படுகிறதென்று தீர்மானித்து, தான் நன்மையாவது தீமையாவது செய்வதினால் புகழுமில்லை பழியுமில்லை, பலனுமில்லை தண்டனையுமில்லையென்று சொல்லி, அந்தக் கொள்கைக்கடுத்த குணமும் செயலும் உடையவனாயிருந்து, தனக்கும் பிறருக்கும் விரோதமாய்த் தீமைசெய்து நடப்பானானால், புத்தியுள்ள உலகத்தார் அவனுடைய கொள்கைக்கும் நடக்கைக்கும் சம்மதிப்பார்களா? அவனைப் பயித்தியகாரன் என்றாவது, துஷ்டன் என்றாவது தீர்மானித்து, தண்டித்து, அவனுக்குப் புத்திபடிப்பிப்பார்கள் அல்லவா? இப்படிப்பட்டவன் புத்திமான்களால் இம்மையில் தண்டிக்கப்படுவானானால், உலகஇயலுக்குக் காரணகர்த்தாவாகிய கடவுளால் மறுமையில் தண்டிக்கப்படாமலிருப்பானா? யாதாமொருவன் விதிப்படி நடப்பது அநுபவத்திற்கு ஒத்துவராமல் தண்டனைக்குரியவனாகிறதைக் கண்டு உணரும்போது தான் விதிவசத்துக்கு உட்பட்டவனல்ல, தான் சுயா

தீனன், தன் செய்கைகளுக்குக் கணக்கு ஒப்புவிக்கவேண்டிய உத்தரவாதி, ஆகையால் விதி உண்டென்னும் கொள்கை உதவாது, முற்றிலும் கெடுத்துப்போடும்; புத்தியைக் கையாடி அநுபவத்தை நாடி நடப்பதே உத்தமம் என்று அறிந்து உணர்வதுமல்லாமல், உலகத்தில் நடந்தேறுகிற தெய்வச்செயலையும் உணர்ந்து, கடவுளும் மறுமையும் உண்டு என்று ஒத்துக்கொண்டு, தர்மத்தை நாடுவானல்லவா?

(b) Or let a man act upon it in common life. Hence, probably, men are free.

விதிவசம் உண்டென்கிற கொள்கை சாதாரண காரியங்களிலும் உதவாது. வியாதியுள்ள விதிவாதியானவன் பிடிவாதமாய் விதிவசத்தின்படி எல்லாம் ஆகும்; நான் சாக வேண்டியபோது சாவேனே ஒழிய அதற்குமுன் சாகவேமாட்டேன், மருந்தும் பத்தியமும் எனக்கு வேண்டியதில்லையென்று சொல்வானானால், ஜனங்கள் அவனைப் புத்திமான் என்று மதிப்பார்களா? ஒருவன் திருடினதற்காக தண்டிக்கப்படும்போது, இது என் விதி என்பானானால், அவனை தண்டிக்கிறவனும் இந்த தண்டனையும் உன் விதியென்று சொல்லி அவனை தண்டிப்பானல்லவா? விதிவசத்துக்கும் சாதாரண அநுபவத்துக்கும் சம்பந்தமில்லை. உலக இயலும் நம்முடைய சுயாதீனமும் ஒத்திருக்கிறது. நாம் சுயாதீனரானபடியால் சுயாதீனராக எண்ணப்பட்டு பிறரால் நடத்தப்பட்டுவருகிறோம். விதி உண்டென்னும் அநியாயமான கொள்கைக்கு பெருமையும் அகந்தையும் ஆதாரமாயிருக்கிறபடியால் இந்தக் கொள்கையை நாடிச் சாதிக்கிறவர்கள் வஞ்சிக்கப்பட்டு இகபர நன்மைகளை இழந்து மோசம் போவார்கள்.

(c) Nor let it be surmised that upon the opinion of necessity being true, we act upon it as false, and thence blame our reason; for God has given us practical principles, which we follow instead of reason, and to object to these is mere conceit.

மனுஷர் மனம்-புத்தி-சித்தம்-அகங்காரமுள்ளவர்களாயும், அதனால் விளங்கும் குணகுணங்களுடையவர்களாயுமிருக்கிறார்கள். இவைக

2. Man, as well as God, is possessed of

a moral character, the foundation of veracity, benevolence, and justice, both in us and in God. (*a*) That he possesses such a character is shown by his natural character, and by final causes.

(*b*) Necessity is reconcilable with *some* kind of character in us; for it hinders neither truth nor falsehood.

ளெல்லாம் விதியினால் உண்டாகிறதென் போமானால், உலகஇயலுக்குக் காரண கர்த்தாவாயிருக்கிற கடவுளுடைய தத்துவங்களும் குணங்களும் விதியினால் உண்டாயிருக்கிறதென்று சொல்லவேண்டியதாகும். அப்படிச் சொல்லக்கூடாதே. கடவுள் சத்தியம் நீதி அன்பு என்னும் குணங்களை உடையவராயிருக்கிறது போல, மனுஷர்களும் இக்குணங்களை உடையவர்களாயிருக்கிறார்கள். இவைகள் தர்மத்துக்கு ஆதாரங்கள்; இக்குணங்களுக்கு நாம் விரோதமாய் நடவாமல் இவைகளுக்கு ஒத்துநடப்பதே இயல்பு. இவைகளுக்கு ஒத்துநடக்கிறதினால் பலனும், இவைகளை விரோதித்துநடக்கிறதினால் தண்டனையும் உண்டு. விதிவசத்தினால் நாம் பொய்சொல்லி அநியாயஞ்செய்யக்கூடாது, செய்தால் அதர்மமாகும், அதனால் தண்டனைக்குரியவர்களாவோம்.

Nothing happens by necessity or chance in the world. All things must be attributed to the wise and righteous ruler of the world.

நம்முடைய சுகதுக்கங்கள் விதியினால் அல்ல, நம்முடைய நடக்கையினால் உண்டாகிறது. தகப்பன் தன் பிள்ளைகளை ஆண்டு நடத்துகிறதுபோலவும், தேசாதிபதி தன் குடிகளை ஆண்டு நடத்துகிறதுபோலவும் கடவுள் சத்தியத்தையும் நீதியையும் கையாடி உலகத்தை ஆண்டு நடத்துகிறாரென்பதற்குச் சந்தேகமில்லை.

C. Necessity does not destroy the obligations and proofs of religion, such as the following:—

விதிவசம் இல்லையென்று அநுபவத்தினால் விளங்கினாலும், மனுஷருக்குத் தற்செயலாயும் இடையூறாயும் சம்பவிக்கிற சுகதுக்கங்களைக் கொண்டு சிலர் விதிவசம் உண்டென்று சாதிப்பார்கள். உலகத்தில் சம்பவிக்கிற காரியங்களுக்கு காரணங்கள் இன்னவைகளென்று சிற்றறிவாளராகிய நமக்கு விளங்காது, உலகத்தை ஆண்டு நடத்தும் பூரணஞானமும் நீதியுமுள்ள கர்த்தருக்கே விளங்கும்.

உலகஇயலில் தோன்றுகிற ஞானத்திலும் நோக்கத்திலும் உலகத்தைப் படைத்து ஆண்டு நடத்துகிறவர் ஒருவர் உண்டென்று விளங்குகிறபடியால், விதியென்பது உள்ளகாரியமானால் அதை விதித்தவர் ஒருவர் உண்டென்றும், அவருடைய திருவுளத்தின்படி எல்லாம் நடந்தேறுகிறதென்றும் விளங்கும். அவர் உலகத்தாருக்கு நன்மை தீமையைப் பகுத்தறியும் மனதைக்கொடுத்து அவர்களுடைய குணத்தின்படியும் செய்கைகளின்படியும் அவர்களுக்கு இம்மைமறுமையில் பலனளித்தும் தண்டித்தும் வருகிறாரென்றும் விளங்குகிறது.

1. The proof, from final causes, of an intelligent Creator.

2. The proof, from present government, of a future government.

உலகஇயல் இப்படி ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறபடியால், நாம் விதிவசத்தின்படியல்ல (fate), கடவுளுடைய விதிப்பிரமாணத்தின்படியே (law) நடக்கவேண்டுமென்று விளங்குகிறது. இந்தப் பிரமாணத்தின்படி நடவாமற்போனால் நம்முடைய மனமே நம்மைக் கண்டிக்கும், நமக்கு தண்டனையும் நேரிடும். கடவுள் இட்டதே நமக்குச் சட்டம், அந்தச் சட்டத்தின்படி நடப்பதே நம்முடைய கடமை. இம்மையில் நாம் உணரும் நன்மைதீமைகளும் அவற்றிற்குரிய பலாபலன்களும் மறுமையில் நாம் அநுபவிக்கப்போகிறவைகளுக்குக் குறிப்புகளாயிருக்கிறதென்றும், உலகத்தில் தர்மமும் பக்தியும் உண்டென்றும், அவைகள் மறுமையில் பயன்படுமென்றும் விளங்கும்.

3. The proof, from our moral faculty of the final reward of virtue: Our moral faculty is a rule, having authority, and enforcing its decisions with sanctions. But in this rule, the sanctions are expressed in the very sense of good or ill desert connected with it, and the dread of future punishment.

விதிவாதம் தர்மநிலையை நிராகரிக்கமாட்டாது. நம்முடைய செய்கைகளுக்கு நம்முடைய மனமே சாட்சியென்பது பிரத்தியட்சமான காரியமாகையால், இந்த இயல்பு மனுஷருடைய யுக்தியினை

Nor does any objection of necessity lie against this faculty or its conclusions; the existence of the faculty being a fact, and the con-

clusion being drawn immediately from it.

4. This reasoning is confirmed by various facts, such as the tendencies of virtue and vice, rewards and punishments.

லல்ல, திருவுளத்தினுடைய நியமத்தினால் உண்டாயிருக்கிறது. நல்வினை தீவினைக்கு உண்டாயிருக்கிற பலனும் தண்டனையாலும் தர்மமுண்டென்னும் உண்மை விளங்கும்.

5. The external evidence of natural religion, as,

மேலும் இயல்வேதத்தால் விளங்கும் தர்மத்துக்கு வேறு புறம்பான அத்தாட்சிகளுமுண்டு; அந்த அத்தாட்சிகளை விதிவாதம் நிராகரிக்க மாட்டாது. அதென்னவென்றால், மனுஷர் யாவருக்கும் அவரவர் செய்கைகளின்படி பலனளித்து தண்டிக்கிற ஆதிகாரண கடவுளாகிய நீதியுள்ள நியாயாதிபதி ஒருவர் உண்டென்பதைப் புத்தியினாலும் அநுபவத்தினாலும் விவேகிகள் அறிந்துகொள்ளுகிறார்கள். கடவுளும் தர்மமும் உண்டென்கிற இந்தக் கொள்கையை அறிந்துகொள்ளுகிறவர்கள், இது உலகத்தில் உண்டான விதம் இன்னதென்றும், இது உலகத்தில் நாட்டப்பட்ட காலம் இன்னதென்றும், உலகத்தின் மக்கள் பெரும்பாலும் இந்தக் கொள்கையை அநுசரித்து வருகிறார்களா இல்லையா என்றும் விசாரணை செய்வார்கள். அப்படி விசாரிக்குமிடத்து என்ன விளங்குமென்றால்:

1. The general consent of all ages and countries. In all times and in all places some part of this natural religion had been received.

2. The early belief in religion, which implies either the naturalness of religion, or the Divine origin of it; which latter is probable on various grounds:

It is said to be directly revealed by God to man.

முதலாவது, கடவுளும் தர்மமும் உண்டென்னும் இந்தக் கொள்கை எக்காலத்திலும் எவ்விடங்களிலும் ஏறக்குறைய ஒரேவிதமாய் அநுசரிக்கப்பட்டு வந்ததென்று விளங்கும். இரண்டாவது, பூர்வத்தில் தொன்றுதொட்டு எவ்விடங்களிலும் அநுசரிக்கப்பட்டுவந்த இந்தக் கொள்கை இயல்பாய் உண்டாயிருக்கவேண்டுமென்றாவது, அல்லது கடவுளுடைய சித்தத்தினால் உண்டாயிருக்கவேண்டுமென்றாவது விளங்கும். மூன்றாவது, தொன்றுதொட்டுப் பரம்பரையாய்த் தேர

ன்றுகிறபடியே இந்தக் கொள்கை உலக இயலினாலும் இயற்கை அறிவினாலு மல்ல, அருளினாலும் செயற்கை அறிவினாலும் உண்டாகி, வரிவேதத்தின் வழியாய்க் கடவுளால் அநுக்கிரகிக்கப்பட்டதென்று விளங்கும்.

**9. Ancient tradition of a revelation which has force irrespective of the claims of any particular book, or the present purity of any religious system.**

இப்பொழுது சொன்ன மூன்று நியாயங்களிலும், முதலாவது நியாயம் மனுஷருடைய சுபாவ அறிவுக்கு ஒத்திருக்கிறது. இரண்டாவது நியாயம் மனுஷர் ஆதியில் கொண்டிருந்த கொள்கை பிற்காலத்தில் உண்டான வீண்பத்தியும் விபரீதங்களுமிராத சுத்தமான கொள்கையாயிருந்ததென்றும், அது தேவனால் அருளப்பட்டதென்றும் திருஷ்டாந்தப்படுத்தும். மூன்றாவது நியாயம், வேதமானது ஆதியில் ஒலிவடிவாகவும் பின்பு வரிவடிவாகவும் அருளப்பட்டதினால் அது சுருதியென்றும் ஸ்மிருதியென்றும் சொல்லப்படும். தர்மம் முந்தியும் வேதம் பிந்தியும் என்றே சொல்லவேண்டும். முன்பு திருவாக்காயிருந்தது பின்பு வேதாட்சரமாகி, வேதாகமமாய் விளங்கினது.*

*(a)* The force of general consent shows that religion was conformable to the general sense of mankind.

*(b)* The force of its reception in the earliest ages shows that it was revealed expressly by God.

*(c)* The force of tradition shows that it was first taught orally and then committed to writing. Religion prior to the *Veda.*

காரியம் இப்படியிருக்கிறபடியால் இவ்வித விஷயங்களையும் உபதேசங்களையும் நாம் விசாரணைசெய்யும்போது நம்முடைய மனம் விகாரப்பட்டு மோசம் போகாதபடி நாம் எச்சரிக்கையாயிருந்து, புத்தியைக் கையாடி, வீணான வழக்கங்களையும் கட்டுப்பாடுகளையும் தள்ளி, தர்மத்தைத் தழுவி பக்திவிநயமாய் நடந்துகொள்ளவேண்டும்.

Note carefully, that in studying all such doctrines our faculties are peculiarly liable to err; so that, though we are not to neglect them, we must be on our guard.

* வெள்ளிருபா இருப்பதால் ஈயருபாயிருக்க இடமாகிறதுபோல, மெய்வேதம் இருப்பதால் பொய்வேதங்களிருக்க இடமாயிற்று.

தர்மத்தை ஸ்தாபிக்கும்படி மேலே சொல்லிய நியாயங்கள் பலமான நியாயங்களாயிருந்தாலும், விரோதிகள்: இந்த நியாயங்களுக்கு எதிரிடையான நியாயங்களுண்டு என்றும்; இது தர்மவாதிகளுடைய அபிப்பிராயம், இது அபத்தமாயிருக்கலாமென்றும்; தர்ம கொள்கையின்படி மனுஷர் சுயாதீன ரென்றும், அவர்களுடைய நடக்கைக்கு அவர்கள் உத்தரவாதிகளென்றும், அவர்கள் இம்மையில் செய்யும் செய்கைக்குத் தக்கபலனையும் தண்டனையையும் மறுமையில் அடைவார்கள் என்றும் தர்மவாதிகள் சொல்லுகிறார்கள். அப்படி நடக்கும் என்று யார் அறிவார்; அதின் நிச்சயம் யாருக்குத் தெரியும்; நம்முடைய சித்தத்தின்படி நாம் ஒன்றும் செய்யக்கூடாது; நாம் சுயாதீனரல்ல, நம்முடைய செய்கைக்கு நாம் தண்டிக்கப்படலாகாது என்று விதிவாதிகள் ஆட்சேபிப்பார்கள். இதற்கு உத்தரவு என்னவென்றால்,

D. After all, the objector may say, I cannot confute this argument, or answer these proofs; nor need I. We are not free, whatever we think, and so are not to be punished; and any system that affirms we are must be rejected. But answer, experience shows

உலகஇயலும் நடையும் தெய்வச்செயலும் அருளுமாகிய இவைகளைக் கவனிக்கும்போது, விதிவாதிகளுடைய ஆட்சேபனைகளும் நியாயங்களும் ஒன்றிற்கும் உதவாது. விதியினால் கட்டப்பட்டிருக்கிறவர்கள் நன்மைசெய்து பலனடைவதும், தீமைசெய்து தண்டிக்கப்படுவதும் அபத்தம் என்று விதிவாதிகள் சொல்லுவார்களானால், இது சரியல்ல. கடவுள் தர்மமாய் உலகத்தை ஆளுகிறார் என்பதும், இம்மையில் மனுஷர் சிட்சைரட்சைக்குரியவர்களாயிருக்கிறார்கள் என்பதும் யாவருக்கும் பிரத்தியட்சமாய் விளங்குங் காரியங்கள். மனுஷர் விதிவசத்தினால் அல்ல, தங்கள் சுயமதி முயற்சியினால் நடக்கிறார்கள்; தங்கள் மனோவாக்குக்காயங்களில் செய்யும் செய்கைகளுக்குக் கணக்கு ஒப்புவிக்கவேண்டிய உத்தரவாதிகளாயிருக்கிறார்கள். இப்படியிருக்க, விதியினால் ஆவதென்ன, ஒன்றுமில்லையே.

The conclusion is false wherever the fallacy lies. Either we are free and so punished; or, being necessary agents we are punished still,—now and in the life to come.

From the whole gather a double conclusion:

1. Necessity, supposed consistent with the present constitution of things, does in no sort prove that we shall not be rewarded eternally according to our deserts; nor does it affect the proof that we shall. It leaves untouched all religion, natural and revealed.

இப்பொழுது விசாரித்த காரியங்களினால் விளங்குகிறதென்னவென்றால், விதியென்பது உண்மையாயிருந்தாலும் உண்மையாயிராமற்போனாலும், இந்தக் கொள்கை மனுஷர் தாங்கள் செய்யும் நன்மைதீமைக்குத்தக்க பலனை அடைவார்களென்பதை நிராகரிக்கமாட்டாது; இயலினாலும் அருளினாலும் விளங்கும் தர்மத்தையும் இந்தக் கொள்கை நிராகரிக்கமாட்டாது.

2. Hence the only senses in which necessity, if taught in religion, can be said to destroy religion:

(a) Practically, by leading atheists to encourage themselves in vice:

என்றாலும் விதிவசம் உண்டென்னும் கொள்கையானது தீவினையில் நாஸ்திகர் அகங்கரித்து, மற்றவர்கள் தர்மத்தை அசட்டைசெய்து விரோதித்து தீமைசெய்வதற்கு ஏதுவாகும்.

(b) Really, by contradicting the course of nature and our experience that we are free, and so overturning everything.

மேலும், இந்தக் கொள்கை உலகஇயலுக்கும், நாம் சுயாதீனமாயிருக்கிறோம் என்னும் நம்முடைய அநுபவத்துக்கும் விரோதமாயிருக்கிறபடியால் உள்ளகாரியங்களைப் புரட்டி விபரீதங்களை உண்டுபண்ணும்.

(c) But if it were supposed that it is reconcilable with nature and experience, it would be reconcilable with religion also.

என்றாலும், இந்தக் கொள்கை இயலுக்கும் அநுபவத்துக்கும் சம்பந்தப்பட்டிருக்கிறதென்றும், திருவுள விதிவிலக்குகளுக்குரியதென்றும் கருதுவோமாகில் இது தர்மத்தோடும் சம்பந்தப்பட்டிருக்குமென்றே கருதவேண்டியதாகும்.

---

*Appendix.*—If necessity, according to the Hindu notion, be the result of former births (transmigrations), and innate dispositions, then it is against man's consciousness and conscience.

[மனுஷர்கள் யாவரும் பழவினையாகிய விதியினால் நடத்தப்படுகிறார்களென்பதும், நல்வினை தீவினைசெய்ய ஜென்மகுணத்தினால் தூண்டிவிடப்படுகிறார்களென்பதும் இந்துக்களுடைய கொள்கையாயிருக்கிறது.

"எழுதியவாறு மென்றிரா மடநெஞ்சே
கருதியவாறுமோ கருமம்—கருதிப்போய்க்
கற்பகத்தைச் சேர்ந்தோர்க்குக் காஞ்சிரங்கா யீந்ததேன்
முற்பவத்திற் செய்த வினை."

விதிப்படி நடக்குமென்று அறியாத மடநெஞ்சே, நீ நினைத்தபடியாகுமோ? நல்ல பிரயோஜனத்தைப் பெறலாமென்று நினைத்துப்போய்க் கற்பகத்தருவைச் சேர்ந்தோர்க்கு அது எட்டிக்காயைக் கொடுத்ததேயானால், அதற்குக் காரணம் முன்பிறப்பில் செய்த தீவினையே என்றும்,

"விதியால் வருவதல்லால் வேதத்தோர் தங்கள்
மதியினா லாவதொன்றில்லை—பதிதோறுஞ்
சங்கரனு மையமேற் றுண்டான் தடங்கடல்சேர்
மங்கையுடன் காடுறைந்தான் மால்."

எல்லாம் விதியினால் உண்டாகிறதொழிய மனுஷருடைய மதியினால் உண்டாகிறதில்லை, சிவனும் ஊர்கள்தோறும் பிச்சைவாங்கி சாப்பிட்டான், விஷ்ணுவும் ராமனாக சீதையுடன் காட்டில் வாசம்பண்ணினானே என்றும் ஔவை பாடியிருக்கிறாள்.

The result of actions is ஊழ் *destiny.* Synonymous terms are *nature, vicissitude, necessity, god, divine decree, fate,* all denoting one thing.

ஊழ் என்பது இருவினைப்பயன்கள்; பால், முறை, உண்மை, தெய்வம், நியதி, விதி என்னப்படும் சொற்களெல்லாம் ஒருபொருட் சொற்களென்று குறளுரையில் சொல்லியிருக்கிறது.

இந்தக் கொள்கையின்படி விதியென்பது மனுஷர் முன் செய்த பாவபுண்ணிய பலனை இப்பொழுது அநுபவிக்கிற ஊழ்வினையென்றும்,

That men (all creatures) are born according to the result

பிறவிக்குணங்களாகிய சாத்துவீகம், ராசதம் தாமதமாகிய முக்குணங்களின் பயனென்றும் சொல்லப்படுமாகில், இது மனுஷர்தன்மைக்கும் அறிவுக்கும் உணர்வுக்கும் அநுபவத்திற்கும் விரோதமாயிருக்கிறது. நன்மைதீமை இன்னதென்று பகுத்தறிந்து, தீமையை ஒழித்து நன்மையைச்செய்யத் திராணியுள்ள தன்னறிவுக்கும் மனச்சாட்சிக்கும் இது விரோதமாயிருக்கிறது. எல்லாம் விதிவசத்தினால் உண்டாகிறதென்று சொல்வது வீணும் வியர்த்தமுமே. மனுஷன் சூத்திரக்கயிற்றினால் ஆட்டப்பட்ட பொம்மையாயிராமல் தன் இஷ்டத்தின்படி நடந்து நல்வினை தீவினைசெய்யத் திராணியுள்ள சுயாதீனனாயிருக்கிறான் என்பதற்குச் சந்தேகமில்லை. மனோற்சாகமாய்த் தீமைசெய்யக் கூடியவன், தீமைசெய்வது அதர்மமென்று உணர்ந்து, மனோற்சாகமாய் நன்மைசெய்வானானால், அதுவே தர்மமாகும், அதனால் புண்ணியம் பலிக்கும். ஊழ்வினையும் ஜெந்மகுணமும் மனுஷனை ஆளுமானால் சுயாதீனமில்லை, தெளிந்து தேறுதலில்லை, பழியும் பாவமுமில்லை, புகழும் புண்ணியமுமில்லை, உத்தரவாதமும் தண்டனையுமில்லை, பலனும் பிரயோஜனமுமில்லை. மேலும் ஊழ்வினையும் பிறவிக்குணமும் நன்மைதீமைகளுக்கும் சுகதுக்கங்களுக்கும் காரணமென்பது நியாயத்துக்கு விரோதமாயிருக்கிறது. எப்படியெனில், (1) அது மனுஷஜெந்மத்தை எழுவகைத்தோற்றங்களோடே சேர்த்துக்கலந்து ஒவ்வாத சங்கரத்தை (கலப்பை) உண்டுபண்ணும். (2) மனுஷர் பூர்வஜெந்மத்தில் செய்த கர்மங்களை இந்த ஜெந்மத்

of their actions in a previous birth, with the three *gunas* (properties, principles, characteristics) viz. *satwa*, goodness or virtue, *raja*, passion or foulness, *tama*, darkness or ignorance, by which they are influenced from birth to birth.

This is opposed to man's true moral nature, to his reason, and to his experience—Man is not a puppet, but a rational responsible being.

Real virtue consists in the willing obedience of one that can do wrong but prefers to do right.

Arguments against transmigration: 1. If confuses the various classes of beings by subjecting them to seven kinds of births.

2. Human recollection is opposed to it, no memory of

past condition or deeds, and therefore no confession, no repentance.

தில் மறந்துபோனபடியால், தாங்கள் அறிந்து உணராத குற்றத்தை அறிக்கைவிட்டு உத்தம மனஸ்தாபப்பட்டுக் குணப்படுகிறதற்கு ஏதுவில்லை.

3. It is a system of injustice as it punishes one for another's fault.

(3) முன் ஜென்மத்தில் வேறொருவனாயிருந்தவன் செய்த குற்றத்திற்காக இந்த ஜென்மத்தில் பிறந்தவன் தண்டிக்கப்படுவது அநியாயமாயிருக்கும்.

4. Life is not a probation and discipline, but punishment or reward over and over in a world of sin.

(4) பாவமுள்ள இவ்வுலகத்தில் செய்த குற்றத்திற்காக பாவமுள்ள இந்த உலகத்தில் மறுபடியும் அவதரித்து உத்தரிக்கும்படி செய்கிறதினால் பயனில்லை. இந்தக் கொள்கை தேவநீதிக்கும் அருளுக்கும் அடுத்ததல்ல.

Transmigration does not account for the origin of evil.

இந்தக் கொள்கை உலகத்திலுள்ள நன்மைதீமைக்குக் காரணத்தைக் காட்டத்துணிந்தாலும், பாவஉற்பத்திக்குக் காரணம் இன்னதென்று இதனால் விளங்காது.

Hindu sages have written against it:

மனுஷருடைய பகுத்தறிவும் விவேகமும் ஞானமும் இந்தக் கொள்கையை ஒத்துக்கொள்ளாது. "ஆள்வினையுடைமையாகிய முயற்சி விதியை வெல்லும்" என்று புத்திமான்கள் யாவரும் ஒத்துக்கொள்ளுவார்கள்.

Effort is stronger than fate.

"தெய்வத்தா னாகாதெனினு முயற்சி தன்
மெய்வருத்தக் கூலி தரும்."

அதாவது, விதியினாலாகாதகாரியமும் முயற்சியினாலாகுமென்றும்,

Fate will go behind, or flee, when effort goes before.

"ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர்."

அதாவது, ஊக்கமுடன் முயற்சிசெய்கிறவர்கள் விதியை அப்புறப்படுத்துவார்களென்றும் குறளிலும்,

A man's fate is in his own hands.

"நன்னிலைக் கட்டன்னை நிறுப்பானுந் தன்னை
நிலைகலக்கிக் கீழிடுவானு நிலையினு
மேன்மே லுயர்த்து நிறுப்பானுந் தன்னைத்
தலையாகச் செய்வானுந் தான்."

அதாவது, நல்லநிலையில் தன்னை நிறுத்துவானும், தன்னை அந்நிலையைக் கலக்கிக் கீழ்மையிலிடுவானும், அந்நிலைமையிலே மேலாக உயர்ந்துநிற்பானும், தன்னைத் தலையாகச் செய்வானும் தான் என்றும் நாலடியாரிலும் சொல்லியிருக்கிறது.

ஊழ்வினை அல்லது பழவினையென்பது தெய்வத்திருவுளத்தில் தோன்றும் ஆதித்தீர்மானத்தைக் குறிக்குமானால் அதை ஒருவாறு ஒத்துக்கொள்ளவேண்டியதே. திருவள்ளுவரும் ஊழ்என்னும் அதிகாரத்தில்

"வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது."

"Those who have accumulated millions can enjoy nothing but what the apportioner has apportioned to them. i. e. God is the disposer of all things."

அதாவது, தன் முயற்சியினால் கோடி திரவியத்தைச் சேர்த்தாலும் வகுத்தான் (தெய்வம்=கடவுள்) வகுத்த வகையானல்லாது நுகர்தல் (அநுபவித்தல்) உண்டாகாதென்றும், "ஊழ்" என்னும் அஃறிணைப்பெயரை "வகுத்தான்" என்னும் உயர்திணைப் பெயராக்கி எல்லாம் தெய்வச்செயலால் நடத்தப்படுகிறதென்றும் கூறினார். இது இம்மையில் இந்தஜென்மத்திலேயே மனுஷரிடத்தில் நிறைவேறும் தெய்வச்செயலைக் குறிக்கும். விதியிருந்தால் விதித்தவர் இருக்கவேண்டும்; அவர் விதிக்கும் விதி வழுவாத நீதிக்கேற்ற தர்மவிதியாயிருக்கும். அந்த விதி தலையெழுத்தல்ல, அது தேவதிருவுளத்திலும் மனுஷர் உள்ளத்திலும் சத்தியவேதத்திலும் பதிந்திருக்கிற எழுத்து. ஊழ்வினையென்பது ஆதித்தாய்தகப்பன்மாரால் உண்டாகி நம்மைத் தூண்டிவிடும் ஜென்மபாவத்தையும், கர்மவினையென்பது நாம்செய்யும் பாவம் பழி இரண்டையுங் குறிக்கும்படி வியாக்கியானம் பண்ணலாம்.* ]

Divine decrees are not written on men's heads, but in the Scriptures.

* புனர்ஜென்மம் உண்டென்னும் கொள்கையை ஒப்புமைநியாயத்தினால் ஸ்தாபிக்க வேண்டுமானால் ஸ்தாபிக்கலாம், ஆனால் அது ஒருவாறு நியாயத்துக்கு ஒத்துவந்தாலும் அநுபவத்துக்கு ஒத்துவராது. பிறவிக்குருடனாகிய ஒரு மனுஷனைக்கண்டு, இயேசுநாதருடைய சீஷர்கள் அவரைநோக்கி: குருவே, "இவன் குருடனாய்ப் பிறந்தது யார்செய்தபாவம், இவன் செய்தபாவமோ இவனைப் பெற்றவர்கள்செய்தபாவமோ என்று கேட்டதற்கு, அவர்: அது இவன்செய்த பாவமுமல்ல, இவனைப் பெற்றவர்கள் செய்த பாவமுமல்ல, தேவனுடைய கிரியைகள் இவனிடத்தில் வெளிப்படும்பொருட்டு இப்படி பிறந்தான் என்று திருவுளம்பற்றினார். (யோ. 9. 2.) இதனால் புனர்ஜென்ம உபதேசத்தை இவர் கண்டித்து நிராகரிக்காமற்போனாலும். தாம் இந்த உபதேசத்தைப் படிப்பித்து தமது வேதத்தில் நாட்டாமல், தாம் மரித்து மரித்தோரிடத்திலிருந்து உயிரோடே எழுந்து பரத்துக்கு ஆரோகணமானதினால் மறுமைக்குரிய ஜீவனையும் அழியாமையையும் வெளிப்படுத்தி உயிர்த்தெழுதலின் உபதேசத்தைக் கிறிஸ்துமார்க்கத்தின் சிறந்த உபதேசமாக ஸ்தாபித்தார்.

## CHAPTER VII.

*On the Government of God, considered as a scheme or constitution, imperfectly comprehended.*

## 7–ம் அதிகாரம்.

### கடவுள் உலகத்தை ஆண்டுநடத்துகிற முறைமையானது சிற்றறிவாளராகிய நமக்கு முற்றிலும் விளங்காமல் குறைவாய் விளங்கும் முறைமையென்பது.*

Objections against the *fact* of moral government have been considered. There are others against its moral character: Is it wise and good, and can objections to its wisdom and goodness (founded on the existence of evil) be answered? They may *indirectly*, thus:

*உலகஇயலினால் தர்மநிலையாகிய கடவுளுடைய ஆளுகை உண்டென்று ரூபகாரப்படுத்தப்பட்டாலும், பாவம் உலகத்திலிருக்கிறபடியால் அந்தத் தர்மநிலையில் தேவஞானமும் நீதியும் தயவும் விளங்கவில்லையென்னும் ஆட்சேபனைக்கு நேரான உத்தரவு எளிதில் சொல்லமுடியாது. தேவ ஆளுகையானது சம்பந்தமில்லாத வெவ்வேறான காரியங்களைப்பற்றினதாயிராமல் ஏக முறைமையில் சம்பந்தப்பட்ட காரியமாயிருக்கிறபடியால், நம்முடைய சிற்றறிவினாலே இதை முற்றிலும் நேராய் அறியக்கூடாதாயினும் ஒப்புமைநியாயத்தினாலே குறுக்கடியாய்க் கூடியமட்டும் அறிந்துகொள்ளலாம்.*

A. God's moral and natural governments are so analogous, that the moral

*கடவுள் உலகத்தை ஆண்டுநடத்தும் ஆளுகையின் முறைமையை ஆதியோடந்தமாய் நாம் முற்றிலும் அறியக்கூடாதிருக்கிறபடியே, அவருடைய தர்மஆளுகையையும் நாம் முற்*

---

* இந்த ஏழாம் அதிகாரம் இந்த நூலுக்கு முகவுரையாய் வைக்கப்பட்டிருக்கவேண்டுமென்று சில வித்துவான்கள் சொல்லுவார்கள்.

றிலும் அறிந்துகொள்ள இயலாது; இவ்விரண்டும் நம்முடைய புத்திக்கெட்டாத காரியமாயிருக்கிறது. நம்முடைய புத்திக்கெட்டாத காரியத்தை நாம் பகுத்தறிந்து மற்றவர்களுக்கு எவ்வாறு எடுத்துரைக்கக்கூடும்? இப்படியிருக்கிறபடியால் தேவஆளுகையில் நமக்கு விகற்பமாய்த் தோன்றும் காரியங்களை அறிந்துகொண்டு அவைகளுக்குத் தகுந்த நியாயஞ்சொல்ல நம்மால் கூடாது. உலகஇயலைக்குறித்துச் சொல்லப்படும் ஆட்சேபனைகள் தர்மஇயலையும் பற்றும்; ஒன்றைக்குறித்துச் சொல்லப்படும் உத்தரவு மற்றொன்றையும் பற்றும்.

government, is like the natural, an incomprehensible scheme. And this general fact may answer particular objections, 1, 2:

கடவுள் உலகத்தை ஆண்டு நடத்தும் முறைமை நம்முடைய மனோவாக்குக்கு எட்டாதது. கடவுள் உலகத்தை ஆண்டுநடத்தும் முறைமை இந்தப் பூவுலகைமாத்திரமல்ல, அகண்டஸ்தலத்திலுள்ள அண்டாண்டங்களையும் காலாகாலங்களையும் சராசரமனைத்தையும் பற்றும். இவற்றில் சம்பவிக்கும் காரியங்களெல்லாம் ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்டு ஏதோ ஒரு கருத்தையும் நோக்கத்தையும் நிறைவேற்றக் குறிக்கப்பட்டிருக்கிறது. சர்வலோகத்தையும் பற்றின முறைமையானது ஆத்துமகோடிகளுக்கும் ஜீவராசிகளுக்கும் பற்பல வஸ்துக்களுக்கும் சொற்பகாரியங்களிலும் மகத்தானகாரியங்களிலும் நாம் காண்பதிலும் காணாததிலும் ஒன்றுக்கொன்று இசைந்திருந்து உதவச் சம்பந்தப்பட்டிருக்கிறது.

1. God's natural government is an incomprehensible scheme.

(a) A scheme, 1, with parts and correspondences; 2, relations between different events and actions throughout all space; and 3, through all time.

உலகஇயலில் ஒரு காரியம் மற்றொரு காரியத்தை விரோதிக்கிறதாக நமக்குத் தோன்றி, அவைகளின் உட்பொருள் நமக்கு விளங்காமற்போய், சக்கரத்துக்குள் சக்கரம்போல், நமக்கு பிரமை உண்டாக மலைவாய்த் தோன்றினும்,

(b) An incomprehensible scheme; so that we can, 1, give no account of things in all their connections; nor can we, 2, say that any thing, however insignificant, is not a neces-

sary condition of something most important.

அவைகளையெல்லாம் காட்டி நடத்தும் அகண்டாகண்டராகிய கடவுளால் நடத்தப்பட்டு, அவருடைய திருவுளத்துக்குப் பிரத்தியட்சமாய் விளங்கும்.

2. God's moral government is also an incomprehensible scheme;

உலகஇயலிலும் அதின் ஆளுகையிலும் தோன்றுகிறபடியே, தர்மஇயலிலும் அதின் ஆளுகையிலும் மனோவாக்குக்கெட்டாத அநேகங் காரியங்களுண்டு. உலகஇயலும் தர்மஇயலும் சம்பந்தப்பட்டு அடுத்திருந்து ஒரே கட்டுப்பாட்டில் அடங்கினதாயிருந்தாலும், உலகஇயல் தர்மஇயலுக்கு அடங்கியே விளங்கும்.

A scheme, as appears from

1. The connection between the two governments;

2. The subservience of the natural to the moral; and,

3. The analogy between the two.

தாபரசங்கங்கள் மிருகங்களையும், மிருகங்கள் மனுஷர்களையும் நாடியிருக்கிறதுபோலவே, உலகத்தில் அங்கங்கே ஒரு மூலையில் விளங்கும் நீதி தயவு முதலியவற்றை விளக்கும் திருவுளச்செயல்கள் அந்தந்த இடங்களில்மாத்திரம் அடங்கிப்போகாமல், வெகுதூரம் பரவி முழுவதையும் தழுவிப் பயன்படும்; திரிகால வித்தியாசமில்லாமல் எல்லாவற்றையும் முற்றிலும் அறியும் கடவுள் எல்லாவற்றையும் சீர்தூக்கி நிர்ணயித்துத் தீர்மானித்து நடத்துகிறார். தர்மத்தினால் உண்டாகும் சிட்சைரட்சை விளங்கும் இடமும் காலமும் வழியும் வகையும் இன்னதென்றும், அதர்மத்துக்கு இடங்கொடுக்கப்பட்டுத் தீவினை விளைந்தோங்குவதற்கு முகாந்தரமின்னதென்றும், நீதிவழுவாமல் சகலமும் பூரணப்பட்டு விளங்கும் காலம் இன்னதென்றும், இவைகளுக்குரிய காரணகாரியங்கள் இன்னவைகளென்றும் நமக்கு விளங்காமற்போனாலும், அவைகளெல்லாம் ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டிருந்து, அவைகளை வகுத்து நியமித்தவருடைய

(b) And so incomprehensible. Hence no objections against parts of this scheme can be insisted upon by reasonable men.

3. Our ignorance (though often overlooked) is a satisfactory answer to objections against the

அனந்தஞானத்தை எற்றகாலத்தில் விளங்கப்பண்ணுமென்பதற்குச் சந்தேகமில்லை. தெய்வச்செயல்களில் ஆயிரத்தில் ஒரு பாகத்தையும் அறியாதிருக்கிற சிற்றறிவாளராகிய நாம் அவருடைய செயல்களை முற்றுமுணர்ந்தவர்கள்போல் குற்றம் பாராட்டத் தகுமோ? லௌகிக விஷயங்களைப்பற்றி நேராய் நிதானித்து அறிந்துகொள்ளுகிறவர்கள் தர்மவிஷயங்களைப்பற்றி விகாரமாய் நிதானிக்கிறதுண்டு. புத்திசாலிகளான உத்தமர்கள் முதலாய் இந்த நியாயத்தைத் தகுந்தபடி கவனித்து அங்கிகரிக்கிறதில்லை. திருஷ்டாந்தமாக: உலகத்தில் பாவம் உற்பவித்து இருக்கவேண்டிய முகாந்தரமென்ன? தீமை தோன்றினவுடனே அதை அடக்கிப்போடாதிருக்குங் காரணமென்ன? உலகத்தைக் கடவுள் ஆண்டுநடத்துகிறது மெய்யானால் அப்போதைக்கப்போது நேரிடும் நல்வினை தீவினைகளுக்கு உடனே பலனளித்து தண்டித்துப்போடாமல் பொறுத்து நீதிசெய்வானேன் என்று சிலர் ஆட்சேபிப்பார்கள்.

wisdom and goodness of the whole arrangement, as will further appear.

(a) From the weakness of the assertions on which the objections rest: in some way (by repeated interpositions, or by making all acts single and unrelated), things might be better which is saying but little; and is, after all, only arbitrary assertion without proof.

இப்படி ஆட்சேபிப்பது எளிதே. ஆனாலும் நம்முடைய அறிவீனம் குறுக்கே நிற்கிறபடியால் நம்முடைய மனதுக்கு எட்டாத காரியத்தை நாம் பகுத்தறிவதெப்படி? நம்முடைய கண்ணுக்குப் பிரத்தியட்சமாய்த் தோன்றுகிற விஷயங்களிலும் நமக்கு விளங்காத காரியங்கள் அநேகம் உண்டு. இப்படியிருக்கிறபடியால் தேவநீதி தேவதயவு முதலிய திருவுளச்செயல்களைக்குறித்து ஆட்சேபனை சொல்லுகிறது வீணாகும். ஒரு பங்கைமாத்திரம் பார்த்து அறிந்தவன் முழுமையையும்பற்றி நியாயஞ்சொல்லக்கூடுமா? தனித்துப் பிரத்தியேகமாய் விளங்கும் தெய்வச்செயலை நாம்

(b) From the nature of our ignorance, which includes the very closely related parts to which existing works belong. Did we see the related parts, our objections might at once cease.

அறிந்துகொள்ளக்கூடும், மற்ற காரியங்களோடு சம்பந்தப்பட்டிருக்குஞ் செயலை இடம் பொருள் ஏவல் காலம் அறியாமல் தீர்மானிக்கக்கூடாது.

B. Some particular analogies between the two governments further show the weakness of these objections.

1. In both, means are connected with ends; and,

(*a*) In natural government undesirable means are connected with desirable ends; and so,

(*b*) May it be in moral government.

II. அன்றியும் உலகஇயலில் காரியங்கள் நிறைவேறக் கருவிகளும் பிரயத்தனங்களும் வேண்டியிருக்கிறது. சிலவேளைகளில் தகுந்த சாத்தியமான காரியங்கள் நிறைவேறும்பொருட்டு விபரீதமாய்த் தோன்றுகிற சாதனங்களான கருவிகள் பிரயோகிக்க வேண்டியிருக்கிறது; அப்படியே தர்ம இயலிலும் நமக்கு விபரீதமாய்த் தோன்றுகிற - கருவிகளாகிய சாதனங்களினாலே தகுதியான காரியங்களான சாத்தியங்கள் நிறைவேறுகிறதுமுண்டு. சில சமயங்களில் துஷ்டர்கள் கொடுமையாய் ஆளுகைசெய்கிறார்கள், தீமை பலன் கொள்ளுகிறது; என்றாலும் இவ்வித விகாரங்களிலும் விபரீதங்களிலும் தேவாதீனமாய் நன்மை உண்டாகிறதற்கு ஏதுவுண்டு.

*Obj.* And though an absurd conclusion is thence derived that evil is better than good, yet this may be answered; for to permit evil may be better than forcibly to prevent it; yet the noncommission of it may be better still, as health is better than disease, and yet some diseases are remedies for others which are worse.

ஆனாலும் இந்த நியாயத்தை எச்சரிக்கையோடு கையாடவேண்டும்; ஏனென்றால் தகாததும் விபரீதமுள்ளதுமாய்த் தோன்றுகிற சாதனங்களினாலே தகுதியும் நியாயமுமாய்த் தோன்றுகிற சாத்தியங்கள் உண்டாகுமானால், தீமையினால் நன்மை பிறக்குமென்று சொல்லலாமே; அப்படியானால் தீமையை நன்மையென்று சொல்லலாமே என்று சிலர் ஆட்சேபிப்பார்கள். இது விபரீதமான ஆட்சேபனை. தீமை ஒருபோதும் நன்மையாகாது; தீமையைக் கையாடுகிறவனுக்கு நன்மை உண்டாகாமல் தீமையே உண்டாகும். என்றாலும் சிலவேளைகளில் உலகத்திலே சம்பவிக்கிற தீமைகளினால் பொதுப்பட்ட ஜனங்களுக்கு நன்மை

உண்டாகிறதுமுண்டு. எப்படியெனில், உலகஇயலில் சாதாரணமாய் நடக்கிறபடியே கரப்பான், சூலை, காய்ச்சல் முதலான சில வியாதிகள் காண்கிறதினால்; சரீரத்தின் சத்த தாதுக்களில் அடங்கியிருக்கிற பித்தம் சிலேஷ்மம் வாயு முதலான தோஷங்கள் நிவிர்த்தியாக ஏதுவுண்டு. கிணறு ஊருவாருகிறதுபோலவே சில வியாதிகள் காயசுத்திசெய்து மற்ற வியாதிகளை நீக்கி "தலைமட்டாக வந்ததை முடிமட்டாகப் போகும்படி" செய்கிறதுண்டு. இப்படியிருந்தால் சுகம் அநுபவிப்பதைப்பார்க்கிலும் கரப்பான், சூலை, காய்ச்சல் முதலான வியாதிகளை அநுபவிப்பது நலமென்று சொல்லத் துணிவது தகுதியல்லவே.*

உலகஇயலானது பொதுவிதிகளினால் நடத்தப்பட்டுவருகிறது; இப்படி அது நடத்தப்படுகிறதற்குத் தகுந்த நியாயங்களுமுண்டு. இப்பொதுவிதிகள் இருக்கிறபடியினால் நாம் இடம் பொருள் ஏவல் காலம் ஆகிய நான்கையும் அறிந்து நம்முடைய காரியங்களை நடத்துகிறோம். இவ்விதமான பொதுவிதிகள் இருக்கிறபடியினால் நடுவாந்தரத்தில் சம்பவிக்கிற அநேககாரியங்களைத் தடுக்க ஏதுவில்லை; நடுவாந்தரத்தில் சம்பவிக்கிற காரியங்களை நாம் அடிக்கடி தடுத்தால் அதனால் நன்மையல்ல தீமை உண்டாக ஏதுவாகும். மனுஷன் பாடுபட்டுச் சம்பாதித்து அநுபவிக்கவேண்டிய விதிகளிருக்க, அவன் கைகட்டிக்கொண்டு சும்மா இருந்தால் அவன் பசி தீராது; கோடைகாலம் மாரிகாலம் பொதுவிதிகளின்படி வராமற்போனால் பயிர்த்தொழில் நடந்தேறாது, காற்றுகள் வீசவேண்டிய காலக்கிரமத்தின்படி வீசாமலும் சமுத்திர ஜலத்தின் ஏற்றவற்றம் கிரமப்படி நடவாமலும்போனால் கப்பல் யாத்திரை நடக்க ஏதுவிராது.

2. In both, government is carried on by general laws.

(a) God's natural government is; and those laws are wisest, because general, though not preventing (so far as we at present see) great irregularity.

* சரீரத்திலுள்ள முறிந்தரத்தம் விஷநீர் முதலானவை உபத்திரவஞ்செய்து மரணத்துக்கேதுவான கொடிய வியாதியை உண்டுபண்ணும்போது அகோர காய்ச்சல்கண்டால் சரீரத்திற்கு அநுகூலமுண்டு; அப்படியே தர்மவிஷயத்திலும் பட்டபாடும் கெட்டகேடும் முற்றுமுணர்ந்து பாவத்தை வெறுத்துக் குணப்பட்டுத் தேறின பெரும்பாவியே உத்தமபுருஷனவான்.

*Obj.* 1. It may be said that this irregularity might be prevented by direct interposition; but such interposition would have other and bad effects (in promoting negligence, for ex).

உலகத்தில் சம்பவிக்கிற காரியங்களைப் பொதுவிதிகளினால் நேராய் உடனே தடுக்கக்கூடாதா என்று சிலர் கேட்பார்கள். இது செய்யப்படக்கூடியதானால் செய்யப்படும் என்பதற்குச் சந்தேகமில்லை. தேசப்பிரமாணங்கள் எல்லாம் பலவித சொற்பகாரியங்களைக் குறித்துச் சொல்லாமல், பொதுவான காரியங்களைக்குறித்துமாத்திரம் சொல்லும், ஆதலால் தேசத்தில் சம்பவிக்கிற எல்லா விகாரங்களையும் விகற்பங்களையும் பொதுவிதிகள் எட்டமாட்டாது.

2. And if it be said that these bad effects might be prevented by further interposition, this is mere random talk.

இப்படியிருக்க, சம்பவிக்கிற விகாரங்களைக் கடவுள்தாமே குறுக்கிட்டு உடனே தடுக்கக்கூடாதா என்று கேட்டால், அப்படிச் செய்வதினால் நன்மை உண்டாகுமென்று நிச்சயமாய்ச் சொல்லக்கூடாது.

(*b*) So God's moral government may be: the general laws wise and good, but admitting of irregularity, and forbidding interposition.

தெய்வம் குறுக்கிட்டுத் தடுக்கும் என்று நாம் நிச்சயமாய் அறிந்திருந்தால் நம்முடைய முயற்சிக்கும் ஜாக்கிரதைக்கும் இடமிராது; நடக்கிறது நடக்கட்டும், தெய்வம் குறுக்கிட்டுத் தடுக்கும் என்று நாம் அசதியாயிருப்போம். மேலும் ஒவ்வொரு காரியத்திலும் தெய்வம் குறுக்கிட்டுத் தடுக்குமானால் அந்தக் காரியம் அதனோடு சம்பந்தப்பட்டிருக்கிற தூரத்திலுள்ள மற்ற விஷயங்களோடு இசையாமல் பின்னமுண்டாகுமென்று நினைக்கவேண்டியதாகும்.

(*c*) *Obj.* To the whole of this argument. We must judge of God's government from what we know, not from what we do not know. At any rate such answers (founded on igno-

மேற்சொல்லிய நியாயங்கள் இருக்க, அசாத்தியமாக எண்ணப்படுகிற இந்தக் காரியங்கள் நம்முடைய புத்திக்கு எட்டாதவைகளாயிருக்கிறபடியால், மற்ற விஷயங்களைப்பற்றி நாம் அறிந்திருக்கிற காரியங்களைக்கொண்டு அறியாத காரியங்களைத் தீர்மானம் பண்ணுகிறதுபோலவே, தர்மகாரியங்க

ளைப்பற்றியும் தீர்மானம் பண்ணக்கூடா தா என்று சொல்லி ஆட்சேபிப்பாருமுண்டு. நம்முடைய அறியாமையை நியாயத்துக்கு ஆதாரமாக வைத்து அநுவயிப்போமானால் அந்த அறியாமையை முன்னிட்டே தர்மத்தை நாட்டவும் தர்மத்தை அழிக்கவுங்கூடும்; ஆகையால் அறிவீனத்தை முன்னிட்டு ஒரு நியாயத்தையும் ஸ்தாபிக்கக்கூடாது.

rance), to objections against God's government are answers to the proofs of it. To which, reply.

ஒரு விஷயத்தைப்பற்றி நாம் முற்றிலும் அறியாமையுள்ளவர்களாயிருப்போமானால் அந்த அறியாமையினால் அந்த விஷயத்தை நாட்டக்கூடாது. ஆனாலும் அந்த விஷயத்தைப் பற்றி நமக்குக் கொஞ்சநஞ்சம் அநுபவமிருக்குமானால் அந்த அநுபவத்தைக் கொண்டு அந்த விஷயத்தைக் கூடியமட்டும் நாட்டலாம். ஒரு மனுஷனுடைய குணத்தையும் சக்தியையும் அறிந்திருப்போமானால், அவன் செய்யத்தொடங்குகிற காரியங்களின் வழிவகைகளை நாம் அறிந்துகொள்ளக்கூடாதிருந்தாலும், அவன் தொடங்குங் காரியங்கள் அவனுடைய குணத்துக்கும் சக்திக்கும்தக்கதாய் நிறைவேறும் என்று தீர்மானிக்கிறோம்: ஒரு காரியத்தை நிறைவேற்றும்படி அவன் கையாடும் பிரயத்தனங்கள் தகுந்ததோ தகாததோ என்று நமக்கு விளங்காமற்போனாலும், காரியசித்திக்காக அவன் கொண்டிருக்கும் நோக்கம் நிறைவேறும் என்பதற்கு நம்முடைய அறியாமை தடையாகுமா? அப்படியே தர்மநிலையின் நிச்சயமானது கடவுளுக்குரிய தர்மகுணத்தினாலும், அவரவர் செய்கைக்குத்தக்கதாய்ப் பலனளித்து ஆண்டு நடத்துகிற அவருடைய செயலினாலும் உறுதிப்படும். ஆனாலும் கடவுள் தம்முடைய நோக்கத்தை நிறைவேற்றும்படி கையாடுகிற வழிவகைகள் இன்னதென்று நமக்குத் தெரியாதிருக்கிறபடியால், அவருடைய ஆளுகையில் சிற்றறிவாளராகிய நமக்கு விபரீதமாய்த் தோன்றுகிறவைகளைக்கொண்டு தெய்வச்செயலைக் குற்றம்பாராட்டக்கூடாது.

1. *Total* ignorance precludes both objections and proof; but partial does not. We may know, e. g, the character of an agent, and the ends he will pursue, but not the means he will use. So here we have distinct proofs of God's character and of His ends: how best to attain those ends we may not know.

நமக்கு விளங்காத சம்பவங்கள் தர்மநிலையை நிராகரிக்கும் என்று நாம் ஒருபட்சத்தில் ஒத்துக்கொண்டாலும், நாம் செய்யவேண்டிய தர்ம நியமங்களை நாம் செய்துமுடித்து நம்முடைய கடமையை நிறைவேற்றக் கடனாளிகளாயிருக்கிறோமென்பதை நாம் ஒத்துக்கொள்ளவேண்டியதே. ஏனென்றால், நாம் செய்யவேண்டிய தர்ம கடமைகள் இயல்பாய் நம்முடைய உள்ளத்தில் தோன்றுகிறது. அவைகளைச் செய்வதினால் இன்பத்தையும் செய்யாமையினால் துன்பத்தையும் அநுபவிக்கிறோம்; நமக்குள்ளேயே சாட்சியும் ஆக்கினையும் விளங்கக்காண்கிறோம். இம்மையில் செய்யும் நன்மைதீமைக்கு அடுத்த பலாபலன் மறுமையில் விளங்கும் என்பது சந்தேகப்படத்தக்க காரியமாயிருந்தாலும், தர்ம உபதேசம் அதை நாட்டுகிறபடியினால் தீமையை ஒழித்து நன்மையைச் செய்வதே நம்முடைய கடமை.

2. Even if our ignorance invalidated the proofs of God's moral government, moral obligations would remain, because They rise from our nature which we cannot neglect without self-condemnation; and, as the possibility of moral government is established, prudence leads us to obey them.

தர்ம ஆளுகைக்கு விரோதமாய்ச் சொல்லப்படும் நம்முடைய அறிவீனத்துக்குரிய ஆட்சேபனைகளுக்கு மேலே சொன்ன உத்தரவுகள் தர்ம ஆளுகை இல்லையென்று நிராகரிக்காது. ஏனென்றால், கடவுள் உலகத்தை தர்மமாய் ஆண்டு நடத்திவருகிறபடியால், அவர் நடத்துகிற வழிவகை நம்முடைய புத்திக்கு எட்டாததாயிருக்கிறதென்று ஒப்புமைநியாயத்தினால் அறிந்துகொள்ளுகிறோம். உலகஇயலில் சம்பவிக்கும் சில காரியங்கள் விகற்பமாயும் விபரீதமாயும் தோன்றினாலும், அவைகள் முழுவிஷயத்தையுங் குறிக்காமல் அவ்விஷயத்தில் ஒரு பங்கைமாத்திரம் குறிக்குமானால், அந்த ஒரு பங்கைக் கொண்டு முழுவதையும் நிதானிக்கக்கூடுமோ? விகாரமாய்த் தோன்றுகிற அந்தப் பங்கு முழுமையோடு பொருந்தும்போது,

3. What answers objections against God's moral government—our ignorance—does not invalidate the proofs of that government.

அதின் விகாரம் அழிந்து அதின் பிரயோஜனம் விளங்கும்.* அப்படியே தர்மவிஷயத்திலும் முழுமையையும் நாம் அறிந்திருப்போமானால், விகாரமாய்த் தோன்றுகிற அதன் பிரிவுகளும் நீதியும் நன்மையுமாய் விளங்கும். ஆகையால் இந்த நியாயம் தர்மஆளுகைக்கு விரோதமாய்ச் செய்யப்படும் ஆட்சேபனைகளைக் கண்டிக்கும்.

தெய்வச்செயலுக்கு விரோதமாய்ச் சொல்லப்படும் மேற்சொல்லிய நியாயங்களுக்குச் சொன்ன உத்தரவுகள் நம்முடைய அறிவீனத்தின் மேல்மாத்திரமல்ல நம்முடைய அறிவீனத்தினால் உண்டாகிற ஏலாமையின்மேலும் நாட்டப்பட்டிருக்கிறது. உலகஇயலில் சம்பவிக்கிற காரியங்களையும் அவைகளின் சம்பந்தங்களையும் நாம் அறியக்கூடாதிருக்கிறபடியால், புத்தி பேதலித்துத் தகாத அநுவயங்கள் செய்து, விபரீதமாய் நிதானிக்கிறதற்கு ஏதுவுண்டு. "எல்லாம் அறிந்தவனுமில்லை ஒன்றும் அறியாதவனுமில்லை." மனுஷரெல்லாரும் அறிவில் குறைவுள்ளவர்கள்; ஆகையால் நம்முடைய புத்திக்கு எட்டாத காரியங்களை நாம் பகுத்தறியக்கூடாது. நம்முடைய புத்திக்கு எட்டினதையும் நம்முடைய அநுபவத்துக்குப் பட்டதையுமாத்திரம் நாம் நிதானித்துப் பகுத்தறியக்கூடும். நம்முடைய அறியாமையை அறிவதும் ஒத்துக்கொள்வதும் அறிக்கையிடுவதும் உயர்ந்த ஞானத்தின் லட்சணமெனத்தகும்.

4. The answers above given are founded not upon our ignorance, however, but upon our incompetency through ignorance; a very different thing. Our incompetency is taught by experience, and is really knowledge.

நரஜீவன்கள் சஞ்சரிக்கும் இந்தச் சிறிய உலகமாகிய வையமானது வேறே பெரிய உலகமாகிய வானகத்தோடே சம்பந்தப்பட்டிருக்கிறதென்பதே மேற்சொல்லிய நியாயங்களின் முடிவு. நம்மைச் சூழ்ந்திருக்கும் விஷயங்களைக் கவனிக்கும்போது, அவைகள் திரிகாலங்களையுந் தழுவி விர்த்தியும் தொடர்ச்சியுமுள்ள

Conclusion.

* உருவாக்கப்பட்ட பொன்நகையை நெருப்பில் போட்டு உருக்குகிறவன், நகையை உருவழித்தாலும்; பொன்னை அழிக்காமல் அதை உருக்கிச் சுத்திசெய்து, வேறொரு சிறந்த நகையை உண்டுபண்ணுகிறான்.

உயர்ந்த நிலையாகிய பரகதியையே நாடுகிறது என்று விளங்கும். முன் இருந்ததும் இப்பொழுது இருக்கிறதும் இனி இருப்பதுமாகிய விஷயங்களெல்லாம் நம்முடைய மனோவாக்குக்கு எட்டாத பரமரகசியங்களாயிருக்கிறது. சராசரம் அனைத்தும் அடங்கிய இவ்வுலகம் பூரணஞானமும் சர்வவல்லமையுமுள்ள ஒரு காரணக்கர்த்தாவால் உண்டாக்கப்பட்டதென்றும், அவரால் இந்த உலகம் தர்மமாய் ஆண்டு நடத்தப்படுகிறதென்றும் விளங்குகிறது. இந்த உண்மையை மறுத்தால் உலகம் உண்டாயிருக்கிறதற்கும், அது நடத்தப்படுகிறதற்கும் வேறு தகுந்த நியாயமில்லை.

Summary of the first part of the Analogy.

இவ்வுலகத்தை உண்டாக்கி ஆண்டு நடத்திவருகிற ஒரு காரணக்கடவுள் உண்டென்கிற உண்மையை நாட்டி அவர் நமக்குள் அமைத்திருக்கிற புத்தி சித்தத்தினுலும் பற்பல குணங்களினுலும், அவர் சகல நற்குணங்களும் பொருந்திய தர்மசொரூபியாயிருக்கிருரென்றும், அவரே இவ்வுலகத்துக்குரிய காரியங்களையெல்லாம் ஆண்டு நடத்துகிருரென்றும் திருஷ்டாந்தப்படும். இப்படியிருக்க, இவ்வுலகத்திலுள்ள புத்திசித்தமுள்ள நரஜீவிகளாகிய நம்முடைய கதியென்ன? நாம் எங்கே இருந்துவந்தோம், எங்கே போகிருேம், நம்முடைய செய்கைகளுக்குரிய பலனும் பயனும் என்ன என்பதை இந்த நூலில் கவனித்தோம்.

Ch. I. Mankind are destined not only for the present but for a future state.

உலகத்தில் விளங்கும் பல ஒப்புமைநியாயங்களினுலே, மனுஷர்கள் இம்மைக்குமாத்திரமல்ல மறுமைக்குமுரியவர்களாய் உண்டாக்கப்பட்டிருக்கிருர்களென்றும், சரீரம் அழிந்தாலும் ஆத்துமா அழியாத வஸ்துவாகையால், மனுஷர்கள் செத்தாலும் பிழைப்பார்களென்றும் விளங்குந் திருஷ்டாந்தங்களை முதலாம் அதிகாரத்தில் கவனித்தோம்.

Ch. II. Our interest depends ulti-

மறுமை உண்டென்பது மெய்யானுல் அதற்குரிய நிலைமையும் குணமும் செயலும் நமக்கு அவசியமாயிருக்கவேண்டியதென்றும், இம்மை

யில் நாம் நம்முடைய குணத்துக்கும் செயலுக்கும் ஏற்றபடியே சுகதுக்கங்களை அநுபவிக்கிறபடியால் மறுமையிலும் நன்மைக்குப் பலனும் தீமைக்கு தண்டனையும் விதிக்கப்படுமென்றும் இரண்டாம் அதிகாரத்தில் கவனித்தோம்.

mately on our behaviour; some actions are rewarded, others punished.

இதை உறுதிப்படுத்தும்படி உலகத்தின் இயற்கையான சுபாவ ஆளுகையோடே செயற்கையான தர்மஆளுகையும் விதிக்கப்பட்டிருக்கிறதென்றும், இம்மையில் நன்மைக்குப் பலனும் தீமைக்கு தண்டனையும் ஒருவாறு நடக்கிறதினால் மறுமையில் நீதி பூரணமாய் விளங்கும்போது, பலனும் தண்டனையும் பூரணமாய் விளங்குமென்றும் மூன்றும் அதிகாரத்தில் கவனித்தோம்.

Ch. III. Men are placed under a moral government or law, in which virtue is rewarded and vice punished.

இம்மையில் நடந்துவருகிற தெய்வஆளுகை குறைவாய்த் தோன்றினாலும் மறுமையில் நிறைவாய் விளங்குமென்றும், இம்மையில் நாம் நடக்கிற நடக்கைக்குத்தக்கதாய் மறுமையில் நமக்குப் பலனுண்டென்றும், இம்மையிலுள்ள நம்முடைய நிலைமை பல தடைகளும் விக்கினங்களுமுள்ள சோதனையான நிலைமையாயிருக்கிறதென்றும் நான்காம் அதிகாரத்தில் கவனித்தோம்.

Ch. IV. Man's present life is a probation, a state of trial, a condition of moral discipline.

இம்மையில் நாம் மறுமைக்குத் தேறும்படி சிட்சைராட்சையான நிலைமையில் வைக்கப்பட்டிருக்கிறோமென்றும், நாம் குணசாலிகளாயிருந்து, அடக்கம் ஒடுக்கமுடையவர்களாய் நடந்து, நல்ல பழக்கங்களை அப்பியாசித்து, மறுமைக்குரியவர்களாகவேண்டியதென்றும் ஐந்தாம் அதிகாரத்தில் கவனித்தோம்.

Ch. V. The present is a state (school) of discipline for improvement to fit us for a future and a higher state of existence.

மனுஷன் விதியினாலல்ல முயற்சியினால் கடைத்தேறவேண்டுமென்பதற்கு அநுபவமே திருஷ்டாந்தமென்று ஆறும் அதிகாரத்தில் கவனித்தோம்.

Ch. VI. Man acts not from necessity (fate) but by voluntary effort and perseverance.

Ch. VII. Incompleteness of man's knowledge, and his limited comprehension (ignorance) is a sufficient answer to all objections against God's moral government.

மனுஷன் பூரண அறிவுடையவனுயிராமல் சிற்றறிவாளனுயிருக்கிறபடியால் உலககைடையில் தோன்றுகிற தெய்வச் செயலைப்பற்றி ஆட்சேபனை செய்ய அவன் தக்கவனல்ல என்று இந்த ஏழாம் அதிகாரத்தில் கவனித்தோம்.

Practical observations: Such considerations should awaken serious thought, and engage us to the practice of virtue and piety.

இவ்விஷயங்களைக் கவனித்தவர்களாகிய நாம் செய்ய வேண்டியது என்னவென்றால், இவ்வுலகத்தில் நாம் நிலையற்றவர்களும் ஆயுசு குறுகினவர்களுமாயிருக்கிறபடியினால், மறுமைக்குரிய காரியங்களை நாடித் தேடி, சிற்றின்பங்களைத் தவிர்த்துப் பேரின்பங்களைப் பற்றிக்கொள்ளவேண்டியது. "தர்மமே ஜெயம்," "தர்மமே தலைகாக்கும்" என்று உணர்ந்து, சிற்றின்ப உல்லாசங்களை ஒழித்து, பேரின்பபதவியை அடையும்படி செய்யவேண்டிய முயற்சிகளையெல்லாம் சீக்கிரத்தில் செய்யவேண்டியது.

And all this is proved from our moral nature, from the witness of conscience, and from our apprehension of God as a righteous governor and judge; and all confirmed by life and immortality being brought to light by the Gospel.

தர்மத்துக்கேதுவாயிருக்கிற நியாயங்கள் புறத்திலிருந்து அல்ல நம்முடைய அகத்திலிருந்தே உண்டாகும். நன்மைதீமை இன்னதென்று நமக்கு உணர்த்துகிற மனச்சாட்சி நமக்கு உண்டு. உலகஇயலும் மனச்சாட்சியும் உலகத்தில் நடக்கும் தெய்வச்செயலையும் நீதியையும் யதார்த்தமான காரியங்களென்றே சாட்சியிடுகிறதுமன்றி, "ஜீவனும் அழியாமையும் சுவிசேஷத்தினால் வெளிப்பட்டதென்றும்; சத்தியத்தை அநியாயத்தினாலே அடக்கிவைக்கிற மனுஷருடைய எல்லாவித அவபக்திக்கும் அநியாயத்துக்கும் விரோதமாய் தேவகோபம் வானத்திலிருந்து வெளிப்படுத்தப்பட்டிருக்கிறதென்றும்"* வேதம் சாட்சியிடுகிறதென்பதை அறிந்து உணர்ந்துகொள்ளவேண்டும்.

* 2 தீமோ. 1. 10. ரோ. 1. 18.

இந்த முதலாம் பங்கில் இயல்வேதத்துக்குரிய விஷயங்களை விசாரித்தோம்; இரண்டாம் பங்கில் அருள்வேதத்துக்குரிய விஷயங்களை விசாரிப்போமாக.

முதலாம் பங்கு முற்றிற்று.

---

## அநுபந்தம்.

இந்த நூலை எழுதின மகா ஞானியாகிய பட்லர் என்பவர் இந்த அதிகாரத்தில் சொல்லிய மனுஷனுடைய அறியாமையைப்பற்றி அருமையான ஒரு பிரசங்கம் எழுதியிருக்கிறார். அதை இவ்விடத்தில் சுருக்கமாய் எடுத்துக் காண்பிப்போம்.

Appendix—Epitome of Bishop Butler's Sermon upon the Ignorance of man.

Text. Eccl. 8. 16, 17. The wise and experienced Solomon acknowledges the ignorance of man.

"நான் ஞானத்தை அறியவும், மனுஷன் இரவும் பகலும் கண்ணுறக்கமில்லாமல் பூமியிலே செய்யும் வேலைகளைப் பார்க்கவும் என் மனதைச் செலுத்தினபோது,—தேவன் செய்யும் சகல கிரியைகளையும் நான் கவனித்துப்பார்த்து, சூரியனுக்குக் கீழே செய்யப்படும் கிரியையை மனுஷன் கண்டுபிடிக்கக்கூடாதென்று கண்டேன். அதை அறியும்படி மனுஷன் பிரயாசப்பட்டாலும் அறியமாட்டான்; அதை அறியலாம் என்று ஞானி எண்ணினாலும் அவனும் அதை அறிந்துகொள்ளமாட்டான்" என்று பிரசங்கியின் ஆகமம் எட்டாம் அதிகாரம், பதினாறும் பதினேழாம் வசனங்களில், மகா ஞானியும் அநுபவசாலியுமாகிய சாலொமோனே சொல்லியிருக்கிறார். இது மனுஷருடைய அறிவீனம் இன்னதென்று விளக்கும். சாலொமோனே இப்படிச் சொல்வாரானால் மற்ற சாதாரண மனுஷர்கள் தங்கள் அறிவையும் ஞானத்தையும் பற்றிப் பெருமைபாராட்ட இடமெங்கே.

I. இந்த வசனத்தினால் மனுஷனுடைய அறியாமை விளங்குகிறது; மனுஷருக்குள் மகா புத்திசாலிகளாகிய ஞானவான்கள் முதலாய் உலகத்தில் விளங்குகிற தெய்வச்செயல்களையும், தேவன் உலகத்தை நடத்தும் வழிவகைகளையும் அறிந்துகொள்ளமுடியாது.

I. The wisest and most knowing cannot comprehend the ways and works of God.

II. The just consequences of the observation and knowledge of our ignorance.

II. மனுஷருடைய அறியாமை இப்படியிருக்க, அவர்கள் இவ்விஷயத்தைப் பற்றி நினைத்துச் செய்யவேண்டியதென்னவென்று விசாரித்து அறியவேண்டும்.

I. இந்த வசனத்தினால், ஹு:

Creation and government of the world beyond the comprehension of man.

சிருஷ்டியானது மனுஷருடைய மனோவாக்குக்கெட்டாத காரியம். காரணகாரியத்தினால் உலகம் கடவுளால் உண்டாக்கப்பட்டிருக்கிறதென்று விளங்கினாலும், அது உண்டாக்கப்பட்ட வழிவகைகளை அறியோம். காரியங்கள் தோன்றுகிறதே ஒழிய காரணங்கள் தோன்றுகிறதில்லை. சத்து சித்துப் பொருள்களின் தத்துவங்கள் குணங்கள் இன்னவையென்று நமக்குத் தெரியாது. நம்மையே நாம் அறியோம். ஆத்தும—சரீரசம்பந்தம் இன்னதென்று நமக்கு விளங்காது. "நான் பிரமிக்கத்தக்க அதிசயமாய் உண்டாக்கப்பட்டபடியால், உம்மைத் துதிப்பேன்; உமது கிரியைகள் அதிசயமானவைகள், அது என் ஆத்துமாவுக்கு நன்றாய்த் தெரியும்" என்று தாவீது சொல்லியிருக்கிறார்.*

"அவர் சகலத்தையும் அதினதின் காலத்திலே நேர்த்தியாகச் செய்திருக்கிறார்; உலகத்தையும் அவர்கள் உள்ளத்திலே வைத்திருக்கிறார்; ஆதலால் தேவன் ஆதிமுதல் அந்தம்வரைக்கும் செய்துவரும் கிரியையை மனுஷன் கண்டுபிடியான்" என்று சாலொமோனும்; "ஆ! தேவனுடைய ஐசுவரியம், ஞானம், அறிவு என்பவைகளின் ஆழம் எவ்வளவாயிருக்கிறது! அவருடைய நியாயத்தீர்ப்புகள் அளவிடப்படாதவைகள்; அவருடைய வழிகள் ஆராயப்படாதவைகள்" என்று அப்போஸ்தலனாகிய பவுலும் சொல்லியிருக்கிறார்கள்.†

---

* சங். 139. 14. † பிர. 3. 11. ரோ. 11. 13.

["கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கிற் பிணிபல" என்றும்,
"வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை
யுடையம் யாமென்னுஞ் செருக்கு" என்றும்,
"முற்று முணர்ந்தவ ரில்லை முழுவதூஉங்
கற்றன மென்று களியற்க" என்றும்
புலவர்கள் சொல்லியிருக்கிறார்கள்.]

சிருஷ்டிகர்த்தாவானவர் நம்முடைய கண்ணுக்கு மறைந்திருக்கிறதுமல்லாமல் சிருஷ்டிப்பில் விளங்கிய அநேக காரணகாரியங்கள் நம்முடைய கண்ணுக்கு மறைந்திருக்கிறது; எண்ணிறந்த விஷயங்கள் மனோவாக்குக்கெட்டாதிருக்கிறது. சிற்றறிவாளராகிய நாம் இம்மையில் கற்றுத்தேர்ந்து மறுமையில் பேரறிவாளராகவே உண்டாக்கப்பட்டிருக்கிறோம். பூரணபக்குவம் மறுமைக்கே உரியது. நடக்கமாத்திரம் திராணியுள்ளவர்கள் பறக்கவும் வேண்டுமென்று அங்கலாய்ப்பது வியர்த்தமே. சூரியசந்திர ஒளியில்லாதபட்சத்தில் விளக்கொளியைக்கொண்டு பார்த்தறிகிறதே உத்தமம். "காணாதிருந்தும் விசுவாசிக்கிறவன் பாக்கியவான்"* என்று ரட்சகர் திருவுளம்பற்றியிருக்கிறார்.

II. மனுஷருடைய அறியாமை ஹு.

1. மனுஷர் அநேக விஷயங்களைப்பற்றி அறியாமையுள்ளவர்களாயிருக்கிறபடியால் "கற்கக் கற்கக் கசடறும்" என்று பொறுமையோடு ஆராய்ச்சிசெய்து, போதுமான நியாயங்களோடு விளங்கும் காரியங்களை அங்கீகரித்து, விளங்காத காரியங்களில் வீணாய்த் தலையிடாமல், இப்பொழுது விளங்காத காரியங்கள் இனி விளங்குமென்று கருதவேண்டும்.

1. We must expect to find difficulties and mysteries in religion.

2. வேதவிஷயங்களையும் தர்மவிஷயங்களையும் பற்றி மனுஷர் சொல்லும் அநேக ஆட்சேபனைகளுக்கு நாம் சிற்றறிவும் அறியாமையுமுள்ளவர்களாயிருக்கிறோமென்பதே தகுந்த உத்தரவு. விபரீதமான காரியங்களில் தலையிட்டு அவைகளுக்கு இடங்கொடுக்கிறதினால் பயனும் பிரயோஜனமுமில்லை.

2. Our ignorance is the proper answer to many of the objections against religion.

* யோ. 20. 29.

3. கல்விப்பெருமை மனுஷனைக் கெடுக்கும். நம்மை நாம் அறிவது ஞானத்துக்கு லட்சணமாகையால், நம்முடைய அறியாமையை நாம் அறிந்து, இந்த அறிவே சிறந்த ஞானமென்று உணர்ந்து, இயற்கைவாசனை செயற்கைவாசனை இரண்டையும் கையாடி, அவசியம் அறியவேண்டியதை அறிந்து, அதற்கேற்றபடி நடப்பதே உத்தமம். "மறைவானவைகள் நம்முடைய தேவனாகிய கர்த்தருக்கே உரியவைகள்; வெளிப்படுத்தப்பட்டவைகளோ, இந்த நியாயப்பிரமாணத்தின் வார்த்தைகளின்படியெல்லாம் செய்யும்படிக்கு, நமக்கும் நம்முடைய பிள்ளைகளுக்கும் என்றென்றைக்கும் உரியவைகள்" என்று மோசேயும்; "தேவனுடைய அந்தரங்கஞானத்தை நீர் ஆராய்ந்து, சர்வவல்லவருடைய சம்பூரணத்தை நீர் அறியக்கூடுமோ? அது வானபரியந்தம் உயர்ந்தது, உம்மால் என்ன ஆகும்? அது பாதாளத்திலும் ஆழமானது, நீர் அறியக்கூடியதென்ன" என்றும், "ஆண்டவருக்குப் பயப்படுவதே ஞானம், பொல்லாப்பை விட்டு விலகுவதே புத்தி" என்றும் யோபும் சொல்லியிருக்கிறார்கள். *

3. We must rest satisfied with our ignorance, and endeavour to know what is plain and revealed, and adore the infinite power and wisdom of God.

"காரியத்தின் கடைத்தொகையைக் கேட்போமாக, தேவனுக்குப் பயந்து அவர் கற்பனைகளைக் கைக்கொள்; எல்லா மனுஷர்மேலும் விழுந்தகடமை இதுவே." என்று சாலொமோனே சொல்லியிருக்கிறார். †

இப்படியிருக்கிறபடியால் "சர்வவல்லமையுள்ள தேவனாகிய கர்த்தாவே, தேவரீருடைய கிரியைகள் மகத்துவமும் ஆச்சரியமுமானவைகள்; பரிசுத்தவான்களின் ராஜாவே, தேவரீருடைய வழிகள் நீதியும் சத்தியமுமானவைகள்" என்று நாமும் சொல்லவேண்டும். ‡

---

* உபா. 29. 29. யோபு. 11. 7: 28. 28. † வெளி 15. 3. ‡ பிரசங்கி. 12. 13.

# PART II.

## OF REVEALED RELIGION.

### CHAPTER I.

*On the Importance of Christianity.*

# இரண்டாம் பங்கு.

## அருள்வேதம்.

### 1–ம் அதிகாரம்.

**கிறிஸ்துமார்க்கமாகிய வேதத்தைக் கடவுள் அநுக்கிர கித்திருப்பது மனுஷருடைய இகபரசுகத்துக் குரிய அவ்சியமான நன்மையும் முக்கியமான அருளுமாயிருக்கிறதென்பது.**

*இயல்வேதம் மனுஷருடைய இம்மைமறுமைக்குரிய சுகத்துக்கும் வாழ்வுக்கும் போதுமானதென்றும், அருள்வேதம் அவசியமல்லவென்றும் சிலர் சொல்லுவார்கள். இயல்வேதம் மனுஷருக்குப் போதுமானதாயிருக்குமானால் அருள்வேதம் அவசியமில்லைதான். ஆனாலும் இயல்வேதம் போதுமானதல்லவென்பதற்கு அநேக திருஷ்டாந்தங்கள் உண்டு: அவையாவன,* (1) *அருள்வேதம் அநுக்கிரகிக்கப்படுமுன் இயல்வேதத்தைக் கையாடின மனுஷருடைய விக்கிரகாராதனைமுதலான அஞ்ஞானச்செய்கைகள் பிரத்தியட்சமாயிருக்கிறது. ரோமர் முதலாம் அதிகாரத்தில் இந்தத் திருஷ்டாந்தத்துக்கு விபரங்காணலாம்.*

*Introduction*—A Revelation not unnecessary or unimportant. To two classes the importance of Revelation is *not* obvious:

*(a)* Some *reject* it as incredible or superfluous, and they are answered (1) by the state of the heathen world before Revelation. Rom. ch. I.

(2) Its present state in those places which have borrowed no light from it.

(2) அருள்வேதத்தின் ஒளி இன்னும் வீசாமையால் இருளும் மருளும் நிறைந்த தேசங்களின் நிலைமை பரிதாபமான நிலைமையென்பது பிரத்தியட்சமாயிருக்கிறது.

(3) The doubtfulness of some of the greatest men among the heathen concerning things of the utmost importance.

[ (3) "சின்னஞ் சிறியோர்கள் செய்த மணற் சோற்றைபொக்கும்
மன்னுங் கலைஞான மார்க்கம்பராபரமே"
என்றும்,

"ஏதுந்தெரியா தெனைமறைத்த வல்லிருளை
தாந்நீக்கவொரு ஞானவிளக்கில்லையோ" என்றும்

ஆத்தும ஞானவிஷயங்களை விசாரணைசெய்த உலகஞானிகள் சொல்லியிருப்பதையும், உலகத்தாருடைய பற்பல விபரீதகொள்கைகளையும், வீண்பக்தியையும் கவனிக்கும்போது சத்தியவேதம் அவசியமல்லவென்று யார்சொல்லக்கூடும்?]

(4) The natural inattention and ignorance of men in spiritual things.

(4) ஆத்துமகாரியங்களாகிய ஞானவிஷயங்களைப்பற்றி மனுஷருக்கு இயல்பாயுண்டாயிருக்கிற அறியாமையையும் அசட்டையையும் நீக்கி, அவர்களைத் தூண்டிவிட்டு சீர்ப்படுத்த இயல்வேதம் போதாதென்பதற்குச் சந்தேகமில்லை.

(5) Impossible to hold natural religion in its genuine simplicity, clear of superstition.

(5) துஷ்டர்கள் தங்கள் மனம்போன போக்கே நடந்து வீணை அபிப்பிராயங்களுக்கும் தகாத நடக்கைகளுக்கும் இடங்கொடுத்து, இதுதான் தங்களுக்கு ஏற்றஇயல்வேதம், வேறுவேதம் வேண்டியதில்லையென்று சாதிக்கத் துணிவார்கள். சிலர் ஒரேதேவன் உண்டு, அவனை பூஜிக்கவேண்டும் என்பார்கள்; சிலர் பலதேவர்கள் உண்டு, அவர்களை பூஜிக்கலாம் என்பார்கள். சிலர் ஒரு புருஷனுக்கு ஒரே மனைவி இருக்கவேண்டுமென்றும், சிலர் ஒரு புருஷன் பல ஸ்திரீகளை ஆளலாமென்றும், சிலர் ஒரு ஸ்திரீ பல புருஷருக்கு மனைவியாயிருக்கலாமென்றும் பலவிதமாய்க் கூறி, இவையெல்லாம் இயல் என்பார்கள். ஆகையால் இயலை நம்பி வீண்பக்திக்கும் துர்நடக்கைக்கும் இடங்கொடுக்கும்.

இயல்வேதமே மனுஷருடைய கொள்கைக்கும் நடக்கைக்கும் ஆதாரமாயிருந்தால் அநேகருடைய மனதில் இயலானது மருளாய் மாறிப் பல விபரீதமான கொள்கைகளுக்கும் நடக்கைகளுக்கும் இடமாகும்.

(6) இடம்-குணம்-பாஷை-ஜாதி முதலானவை மனுஷர்களைப் பிரித்து அவர்களுக்குள் விபரீதத்தையும் வேற்றுமையையும் உண்டாக்குகிறபடியால், இயல்வேதத்தினால் உடன்பாடும் ஒற்றுமையும் உண்டாக ஏதுவிராது.

(6) It has a tendency to separate rather than unite mankind.

(7) ஒரு காரியத்தை ஸ்திரப்படுத்த ஒரு சாட்சி போதாது, இரண்டு சாட்சிகள் வேண்டும். இயல்வேதம் அகச்சாட்சியும், அருள்வேதம் புறச்சாட்சியுமாயிருக்கிறபடியால் சம்பந்தாசம்பந்தம் விளங்கிக் காரியசித்தி உண்டாகும்.

(7) Two independent witnesses confirm and establish each other's statements.

(8) இயல்வேதம் இருந்தாலும் மனுஷர் யாவரும் அறிவீனரும் பலவீனருமானபடியால் அவர்களுக்கு உதவிசெய்து அவர்களைத் தேற்றிக் கரையேற்ற இயல்வேதம் போதாது, அருள்வேதம் அவசியம் வேண்டியதே.

(8) As men are generally ignorant and weak they need supernatural instruction and assistance.

(9) இயலும் ஒரு பட்சத்தில் கடவுளால் அநுக்கிரகிக்கப்பட்ட அருளென்றே சொல்லவேண்டும். இப்படியிருக்க, சிலர் அருள்வேதத்திலிருந்து தங்களுக்கடுத்த சில தர்மங்களைத் தெரிந்தெடுத்து, சத்தியவேதமாகிய திருவிளக்கில் தங்கள் திரிகளைக் கொளுத்தி வீண் வெளிச்சம் போட்டு, இதுவே தங்கள் வேதமென்று சொல்லுவார்கள்.

(9) Some repudiate Revelation, and still borrow from it without acknowledgment. The source of the Natural and the Revealed is the same, there is only one true light which enlighteneth all.

["எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு."]

ஆதலால் இயல்வேதம் போதும், அருள்வேதம் அவசியமல்லவென்று சொல்வது விபரீதமே.

(b) Others neglect it (even when they admit its truth), supposing that it is only the teaching of Nature in another form.

வேறுசிலர் அருள்வேதம் இருந்தாலும் அது இயல்வேதம் உணர்த்துவதையே உணர்த்துவதால், இயல்வேதத்தைக் கைக்கொண்டு புத்தியும் பத்தியுமாய் நடந்தால்போதும், அருள்வேதத்தைக் கைக்கொண்டு நடக்கவேண்டிய அவசியமில்லையென்று சாதித்து, தீமையை ஒழித்து நன்மையைச் செய்தால் போதும், மற்றவையெல்லாம் விபரீதம் என்று சொல்லத்துணிவார்கள்.* இதன் உண்மையை அறிந்து அதை அங்கிகரிக்கும்படி அருள்வேதத்தின் மாட்சிமையையும், அது மன்னுயிர்க்கு அவசியம் தேவையென்பதையும் கவனித்தறியவேண்டும்.

(c) As a fact, however, God has given it, and it may thence be presumed to be important.

கடவுள் தம்முடைய திருவுளத்தை அருள்வேதத்தின் வழியாய் நமக்கு வெளிப்படுத்தியிருந்தால் அதை நாம் வேண்டாமென்று தள்ளிப்போடக்கூடாது; அது நமக்கு அடுத்ததல்ல என்று சொல்லத் துணியலாகாது; சிற்றறிவாளராகிய நமக்கு அருளப்பட்டிருக்கிற திருவுளத்தின் அநுக்கிரகம் வேண்டியதில்லையென்று பெருமைபாராட்டல் தகாது. மனுஷர்களில் முற்றுமறிந்தவர்களில்லையென்று முன்னமே திருஷ்டாந்தப்படுத்தினோம். தன்னை அறிந்து தன் பாவத்தை உணர்ந்தவன் அருள்வேதம் வேண்டியதில்லையென்று சொல்லத் துணியமாட்டான்.

This Revelation is one not many: Christianity.

"கடவுளோன் ஒருவனுண்டே வேதம் ஒன்றே" என்பது நியாயத்துக்கும் புத்திக்கும் ஒத்திருக்கிறபடியால், கிறிஸ்துமார்க்கம் இயல்வேதத்தோடு ஒத்திருந்து மனுஷருடைய இகபரசுகத்துக்கும் உரியதாயிருந்து, உலகத்திலுள்ள எல்லா மார்க்கங்களிலும் சிறந்த மார்க்கமாய் விளங்கிக் கடவுள் அநுக்கிரகித்த வேதம் என்று திருஷ்டாந்தப்படுத்தப்படும். கிறிஸ்து

Christianity may be shown to be important by considering it in two views.

---

* இயலால் வரும் சுகம் போதும், அருளால் வரும் சுகம் வேண்டியதில்லையென்பது எப்படியிருக்கிறதென்றால், அப்பன் கோவணம் கட்டினால் மகன் சோமன் கட்டக்கூடாதென்றும், அப்பன் கூழ்குடித்தால் மகன் சாதம் சாப்பிடக்கூடாதென்றும், அப்பன் படிப்பில்லாத மூடனாயிருந்தால் மகன் படித்து அறிவாளியாகக்கூடாதென்றும், அப்பன் கூலிவேலைசெய்தால் மகன் உத்தியோகம் பண்ணக்கூடாதென்றும் சொல்வதுபோலிருக்கும்.

மார்க்கத்தின் மாட்சிமையும் அவசியமும் விளங்கும்பொருட்டு முதலாவது, அது எல்லாருடைய அகத்திலும் விளங்கும் பக்திக்கும் ஒழுக்கத்துக்குமுரிய இயல்பான தர்மத்தை வெளிப்படுத்தி விளங்கப்பண்ணும் புறம்பான நியமமென்றும்; இரண்டாவது, அது சிற்றறிவாளராகிய நம்முடைய புத்திக்கெட்டாத காரியங்களைப் போதுமானமட்டும் நமக்கு அறிவித்து, நாம் விசுவாசித்துக் கைக்கொண்டு நடக்கவேண்டிய பரம சத்தியங்களை நமக்குத் தெரிவித்து வெளிப்படுத்துகிறதென்றும் கவனிக்கவேண்டும். இயல்வேதம் அருள்வேதத்துக்கு மூலாதாரமாயிருந்தாலும், இயல்வேதம் அருள்வேதத்தில் ஒரு பங்காயிருக்கிறது. இயல்வேதம் அருள்வேதத்தினால் பூரணப்படவேண்டியதாகையால் அருள்விளங்கிய கிறிஸ்துமார்க்கமே பூரண சத்தியவேதமென்று ஒத்துக்கொள்ளவேண்டும்.

I. கிறிஸ்துமார்க்கம் இயல்வேதத்தைக் குறைவறப் பூரணப்படுத்திப் பிரசித்தப்படுத்தி யாவருக்கும் விளங்கப்பண்ணும். அது மனுஷர் கைக்கொண்டு நடக்கவேண்டிய உலகஇயலுக்குரிய தர்மத்தைத் தெளிவாய் நாட்டி, இந்த இயலுக்கும் தர்மத்துக்கும் கடவுளே காரணரென்றும், அவர் உலகத்தை நீதியாய் ஆண்டு நடத்துகிறாரென்றும், தர்மமே அவருடைய பிரமாணமென்றும், மனுஷர் இம்மையில் செய்யும் நன்மைதீமைக்குத்தக்கதாய் மறுமையில் பலன் அடைவார்களென்றும் விளங்கப்பண்ணும்.

I. Christianity as a republication of Natural religion. (God, His government, laws, &c.)

(a) மேலும், அது இயல்வேதத்தைப் பற்றியிருக்கிற வீண் பக்தியையும் தகாத கொள்கைகளையும் வழக்கங்களையும் விலக்கி அதை யதார்த்தமும் சுத்தமுமாய் விளங்கப்பண்ணும்.

(a) In its genuine simplicity:

(b) மேலும், அது இதற்குமுன் இயல்வேதத்துக்கு இராத திருஷ்டாந்தத்தோடும் அதிகாரத்தோடும் அதின் உண்மையை நாட்டி, அற்புதங்கள் தீர்க்கதரிசனங்கள் முதலான அத்தாட்சிகளினால் அதின் உண்மையை

(b) With authoritativeness—i, e, with new proofs, as miracles and prophecy. These latter *add*

விளங்கப்பண்ணும். சத்தியவேதத்தில் கண்டிருக்கிற அற்புதங்களும் தீர்க்கதரிசனங்களும் ஜகத்குருவாகிய உலகரட்சகருடைய உண்மைக்கு அத்தாட்சிகளாயினும், அவைகள் அருள்வேதத்துக்குமாத்திரமல்ல இயல்வேதத்துக்கும் தெய்வ திருவுளத்துக்கும் தெய்வச்செயலுக்கும் சாட்சியிடுகிறது.

1. To the evidence of natural religion, inasmuch as natural religion is part of revealed, and they confirm both—They also give authoritative or new *proofs*; and hence Christianity is an *authoritative republication* of *Natural Religion.*

மனுஷர் தங்கள் குயுக்தியினால் அற்புதம் முதலான அத்தாட்சிகளைப்பற்றி ஆட்சேபனை செய்தாலும், பொதுவாய் மனுஷர் யாவரும் இவ்வித அத்தாட்சிகளையே நாடுகிறார்கள். கிறிஸ்துவானவர் செய்த அற்புதங்களைக் கண்டவர்கள் அவர் பரத்திலிருந்து வந்த ஜகத்குருவென்று ஒத்துக்கொண்டார்கள். தேவானுக்கிரகமாகிய இயலும் அருளும் சம்பந்தப்பட்டிருக்கிறதுபோலவே, வேதாகமமாகிய பழைய ஏற்பாடும் புதிய ஏற்பாடும் சம்பந்தப்பட்டிருந்து ஒன்றுக்கொன்று சாட்சிகொடுத்து சத்தியத்தை விளங்கப்பண்ணும்.

2. Though nature is in a sense a miracle, and so has its own miraculous evidences; yet, practically, the miracles of Scripture are more authoritative, as is seen in two cases:—a teacher working miracles among an ignorant people, and an intelligent inquirer who has learnt all that Nature can teach, and is waiting to have his doubts removed.

இயலும் ஒருவாறு அற்புதந்தான். அது தனக்குத்தானே அத்தாட்சி கொடுக்கும். அருள்வேதத்தில் கண்டிருக்கிற அற்புதங்கள் சிற்றறிவாளரான ஜனங்களுக்கு ஏற்றது. தர்மத்தை நாட்டவந்த சற்குருவானவர் அறிவீன ஜனங்களுக்கு தர்மத்தைப் போதிக்கிறது போதாது; தன் உபதேசம் உண்மையென்று பிரத்தியட்சமாய் அவர்களுக்கு விளங்கப்பண்ணவேண்டும். எப்படியெனில், தன் உபதேசத்தைக் கேட்கவந்தவர்களின் பசியையும் பிணியையும் தம்முடைய அற்புதசக்தியினால் தீர்த்தால் ஏழை ஜனங்கள் அந்த குருவினுடைய உபதேசத்துக்கு இணங்கி அவருக்குச் சீஷராவார்கள். புத்திசாலிகளும் இயலினால் கருதலாய் அறிந்துகொண்ட விஷ

யுங்களை அருளினால் தெளிவாய் அறிந்துகொண்டு, காதாலே உபதேசத்தைக் கேட்டுக் கண்ணாலே அற்புதத்தைக் கண்டு, சந்தேகங்கள் நிவிர்த்தியான்பின்பு தேறுதலடைகிறதற்கு இடமுண்டு.

மேலும் ஜீவனும் அழியாமையும் சுவிசேஷத்தினால் வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது; மறுமைக்குரிய இந்த சத்தியமும், நல்வினை தீவினையினால் உண்டாகிற இம்மை மறுமைக்குரிய பலாபலனும் கிறிஸ்துமார்க்கத்தினால் தெளிவாய் அறிவிக்கப்பட்டிருக்கிறது. பாவத்தை உணர்ந்து உத்தம மனஸ்தாபப்பட்டு விசுவாசிக்கிறதற்கும், அதனால் உண்டாகிற பாவவிமோசனத்துக்கும் இருக்கிற சம்பந்தமும் அருள்வேதத்தினால் தெளிவாய் விளங்கும். இவ்விஷயங்களில் இயல்வேதத்துக்கும் அருள்வேதத்துக்கும் இருக்கிற சம்பந்தம் வெளிச்சத்துக்கும் சாயைக்கும் இருக்கிற சம்பந்தம் போன்றதென்று சொல்லலாம். ஒளி எவ்வளவு பிரகாசமாயிருக்கிறதோ, அவ்வளவும் அதனால் உண்டாகிற சாயை இருண்டிருக்கும்.*

c. With *new light*, especially on a future state, repentance, &c.,

ஆரம்பத்தில் அற்புதத்தினால் நாட்டப்பட்ட கிறிஸ்துமார்க்க சத்தியம் உலகத்தில் பிரத்தியட்சமாய் நாட்டப்பட்டிருக்கிற திருச்சபையினால் காக்கப்பட்டு வளர்ந்தோங்கிவருகிறது. இந்தத் திருச்சபையானது உலகத்திலுள்ள சகல ஜனங்களுக்கும் பொதுவாயிருந்து, உபதேசங்களையும் நியமங்களையும் ஆராதனைகளையும் ஆசாரங்களையும் நாட்டி நடத்திக்கொண்டுவருகிறது. இந்தத் திருச்சபை அருள்வேதத்தைக் காத்து, அதற்கும் உலகஇயலுக்கும் இருக்கிற சம்பந்தத்தை விளக்கி, சத்தியசாரத்தை உபதேசமாகப் போதித்து, தர்மத்தை ஸ்தாபனம்பண்ணி, ஆவியாயும்

(*d*) With a *visible Church*, having positive institutes and public worship.

(*d*) The Christian Church, is a teacher of Natural Religion.

1. As a form ever reminding men of the reality;

* மரத்தில் கனி உண்டாகும்போது பூக்கள் உதிர்ந்துபோவதுபோலவும், சூரியன் பிரசன்னமாயிருக்கையில் நட்சத்திரங்கள் மறைந்திருப்பதுபோலவும், விளக்கிருக்கும்போது தீத்தேட வேண்டியது அவசியமில்லாததுபோலவும், அருள்வேதம் இருக்க இயல்வேதம் சிறந்ததல்லாதது.

விளங்கப்பண்ணும். சத்தியவேதத்தில் கண்டிருக்கிற அற்புதங்களும் தீர்க்கதரிசனங்களும் ஜகத்குருவாகிய உலகரட்சகருடைய உண்மைக்கு அத்தாட்சிகளாயினும், அவைகள் அருள்வேதத்துக்குமாத்திரமல்ல இயல்வேதத்துக்கும் தெய்வதிருவுளத்துக்கும் தெய்வச்செயலுக்கும் சாட்சியிடுகிறது.

1. To the evidence of natural religion, inasmuch as natural religion is part of revealed, and they confirm both—They also give authoritative or new *proofs*; and hence Christianity is an *authoritative republication* of *Natural Religion*.

மனுஷர் தங்கள் குயுக்தியினால் அற்புதம் முதலான அத்தாட்சிகளைப்பற்றி ஆட்சேபனை செய்தாலும், பொதுவாய் மனுஷர் யாவரும் இவ்வித அத்தாட்சிகளையே நாடுகிறார்கள். கிறிஸ்துவானவர் செய்த அற்புதங்களைக் கண்டவர்கள் அவர் பரத்திலிருந்து வந்த ஜகத்குருவென்று ஒத்துக்கொண்டார்கள். தேவானுக்கிரகமாகிய இயலும் அருளும் சம்பந்தப்பட்டிருக்கிறதுபோலவே, வேதாகமமாகிய பழைய ஏற்பாடும் புதிய ஏற்பாடும் சம்பந்தப்பட்டிருந்து ஒன்றுக்கொன்று சாட்சிகொடுத்து சத்தியத்தை விளங்கப்பண்ணும்.

2. Though nature is in a sense a miracle, and so has its own miraculous evidences; yet, practically, the miracles of Scripture are more authoritative, as is seen in two cases:—a teacher working miracles among an ignorant people, and an intelligent inquirer who has learnt all that Nature can teach, and is waiting to have his doubts removed.

இயலும் ஒருவாறு அற்புதந்தான். அது தனக்குத்தானே அத்தாட்சி கொடுக்கும். அருள்வேதத்தில் கண்டிருக்கிற அற்புதங்கள் சிற்றறிவாளரான ஜனங்களுக்கு ஏற்றது. தர்மத்தை நாட்டவந்த சற்குருவானவர் அறிவீன ஜனங்களுக்கு தர்மத்தைப் போதிக்கிறது போதாது; தன் உபதேசம் உண்மையென்று பிரத்தியட்சமாய் அவர்களுக்கு விளங்கப்பண்ணவேண்டும். எப்படியெனில், தன் உபதேசத்தைக் கேட்கவந்தவர்களின் பசியையும் பிணியையும் தம்முடைய அற்புதசக்தியினால் தீர்த்தால் ஏழை ஜனங்கள் அந்த குருவினுடைய உபதேசத்துக்கு இணங்கி அவருக்குச் சிஷராவார்கள். புத்திசாலிகளும் இயலினால் கருதலாய் அறிந்துகொண்ட விஷ

யுங்களை அருளினால் தெளிவாய் அறிந்துகொண்டு, காதாலே உபதேசத்தைக் கேட்டுக் கண்ணாலே அற்புதத்தைக் கண்டு, சந்தேகங்கள் நிவிர்த்தியான்பின்பு தேறுதலடைகிறதற்கு இடமுண்டு.

மேலும் ஜீவனும் அழியாமையும் சுவிசேஷத்தினால் வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது; மறுமைக்குரிய இந்த சத்தியமும், நல்வினை தீவினையினால் உண்டாகிற இம்மை மறுமைக்குரிய பலாபலனும் கிறிஸ்துமார்க்கத்தினால் தெளிவாய் அறிவிக்கப்பட்டிருக்கிறது. பாவத்தை உணர்ந்து உத்தம மனஸ்தாபப்பட்டு விசுவாசிக்கிறதற்கும், அதனால் உண்டாகிற பாவவிமோசனத்துக்கும் இருக்கிற சம்பந்தமும் அருள்வேதத்தினால் தெளிவாய் விளங்கும். இவ்விஷயங்களில் இயல்வேதத்துக்கும் அருள்வேதத்துக்கும் இருக்கிற சம்பந்தம் வெளிச்சத்துக்கும் சாயைக்கும் இருக்கிற சம்பந்தம் போன்றதென்று சொல்லலாம். ஒளி எவ்வளவு பிரகாசமாயிருக்கிறதோ, அவ்வளவும் அதனால் உண்டாகிற சாயை இருண்டிருக்கும்.*

c. With *new light*, especially on a future state, repentance, &c.,

ஆரம்பத்தில் அற்புதத்தினால் நாட்டப்பட்ட கிறிஸ்துமார்க்க சத்தியம் உலகத்தில் பிரத்தியட்சமாய் நாட்டப்பட்டிருக்கிற திருச்சபையினால் காக்கப்பட்டு வளர்ந்தோங்கிவருகிறது. இந்தத் திருச்சபையானது உலகத்திலுள்ள சகல ஜனங்களுக்கும் பொதுவாயிருந்து, உபதேசங்களையும் நியமங்களையும் ஆராதனைகளையும் ஆசாரங்களையும் நாட்டி நடத்திக்கொண்டுவருகிறது. இந்தத் திருச்சபை அருள்வேதத்தைக் காத்து, அதற்கும் உலகஇயலுக்கும் இருக்கிற சம்பந்தத்தை விளக்கி, சத்தியசாரத்தை உபதேசமாகப் போதித்து, தர்மத்தை ஸ்தாபனம்பண்ணி, ஆவியாயும்

(d) With a *visible Church*, having positive institutes and public worship.

(d) The Christian Church, is a teacher of Natural Religion.

1. As a form ever reminding men of the reality;

* மரத்தில் கனி உண்டாகும்போது பூக்கள் உதிர்ந்துபோவதுபோலவும், சூரியன் பிரகாசிக்கையில் நட்சத்திரங்கள் மறைந்திருப்பதுபோலவும், விளக்கிருக்கும்போது தீத்தேடவேண்டியது அவசியமில்லாததுபோலவும், அருள்வேதம் இருக்க இயல்வேதம் சிறந்துவிளங்காது.

ஞானசொரூபியாயுமிருக்கிற கடவுளை ஆவியிலும் ஞானத்திலும் கண்டு ஆராதிக்கும்படி போதிக்கிறதுமன்றி, அருள்வேதமாகிய ப்ரமசத்தியம் உலகமெங்கும் பரவும்படி செய்யவேண்டிய பிரயத்தனங்களையெல்லாம் செய்து, மனுமக்கள் யாவரும் அறத்திலும் பக்தியிலும் தேறி மறுமைக்குரிய பரமானந்தத்துக்கு அவர்களை உரியவர்களாக்குகிறது.

2. Instructing and reproving them; both tending to perpetuate and diffuse the truth, as may be seen

திருச்சபை என்னப்பட்ட கிறிஸ்துவின் சரீரமாகிய அங்கமானது விசுவாசிகளின் கூட்டமாகிய சங்கமாயிருக்கிறது. இந்த அங்கமாகிய சங்கம் நிலைபெற்றோங்குவதற்கு மனுஷர் செய்யவேண்டிய கடமைகளுக்குரிய இயற்கைவிதியாகிய நியாயப்பிரமாணத்தைமாத்திரமல்ல, ஆசாரங்களுக்குரிய செய்ற்கை விதியாகிய நியமப்பிரமாணங்களையும் கட்டளையிட்டு நயமும் பயமுமாய் சிட்சைரட்சை செய்துவரவேண்டுவது அவசியம்.

3. If we compare the state of the world *before* and *since* Revelation was given. It may indeed be said,

இதன் உண்மை இயல்வேதத்தின் ஒளியினால் நடக்கிற ஜனங்களுடைய சீரையும், அருள்வேதத்தின் ஒளியினால் நடக்கிற ஜனங்களுடைய் சீரையும் ஒத்திட்டுப்பார்ப்பதால் எது சிறந்ததென்று எளிதில் விளங்கும்.

4. That Christianity in this visible Church has been perverted and uninfluential, and so is unimportant. But answer,

மேற்சொன்ன நியாயங்களின்பேரில் சிலர் ஆட்சேபனை செய்து, கிறிஸ்துமார்க்கம் உற்பத்தியானபோது சுத்தமானமார்க்கமாய் இருந்தாலும், இப்பொழுது அது விகாரப்பட்டுப் பற்பல வீண் சடங்காசாரங்களினால் மாறி அதின் சக்தி குறைந்து சீர்கெட்டிருக்கிறபடியினாலே அதைக் கைக்கொள்வதில் பிரயோஜனமில்லையென்பார்கள்.

(*a*) Such reasoning sets aside all religion, for natural has also been perverted, and

இப்படிச் சொல்வது நிரீசுரவாதமாகிய நாஸ்திகக் கொள்கைக்கே துவாரமாகும்; ஏனென்றால் இந்த ஆட்சேபனை அருள்வேதத்தைமாத்திரமல்ல,

இயல்வேதத்தையும் எல்லா மதசம்பிரதாயத்தையும் பற்றும். அருளை விகாரப்படுத்துகிறவர்கள் இயலை விகாரப்படுத்துகிறது அரிதா? கிறிஸ்து மார்க்கத்தினால் உலகத்துக்கு உண்டான பிரயோஜனம் கொஞ்சமல்ல. கிறிஸ்தவர்கள் என்னும் பேர்பெற்றவர்கள் செய்கிற துர்க்கிரியைகள் அவர்களுடைய துர்க்குணத்தினால் உண்டாகிறதொழிய கிறிஸ்துமார்க்கத்தினால் உண்டாகிறதல்ல. பாவநாசரும் புண்ணியதாதருமாகிய சற்குருவின் உபதேசத்தைக் கைக்கொண்டு அவருடைய திருவடிகளைப் பின்பற்றுகிறதினால் இவ்விகாரங்கள் உண்டாகாமல், அவருடைய உபதேசத்தைக் கைவிட்டு அவருடைய நடக்கையைப் பின்பற்றாதபடியினாலேயே உண்டாகிறது.*

*(b)* The good effects of Christianity are not small, while its bad effects are not effects of it at all.

மற்ற சமயத்தார்கள் செய்யும் துர்க்கிரியைகளைப்பார்க்கிலும் கிறிஸ்தவர்கள் செய்யும் துர்க்கிரியைகள் அதிகமாய்ப் பாராட்டப்பட்டுத் தூற்றப்படுகிறதுமுண்டு. அன்றியும், இயல்வேதத்தையாவது அருள்வேதத்தையாவது கைக்கொள்ளுகிறவர்களுடைய நடக்கைகளையும் அவரவர்கள் கொள்கைகளையும் நோக்கங்களையும் கவனித்து அறியவேண்டும். தற்பொழிவை நாடும் சில மாய்மாலக்காரர் செய்யும் விபரீதங்களினால் அவர்களுடைய மார்க்கத்தை நிந்தித்துப் பழிப்பது நியாயமல்லவே. "அநியாயஞ்செய்கிறவன் இன்னும் அநியாயம் செய்யட்டும், பரிசுத்தமுள்ளவன் இன்னும் பரிசுத்தமாகட்டும்"† என்பது வேதக்கொள்கை

*(c)* These effects, moreover, are exaggerated, or are charged to Christianity as a pretence; and

*(d)* In all dispensations we must judge them by their tendencies if men did their part, and not by their perversion.

* "அரசனெவ்வழி அவ்வழி குடிகள், ஆசானெவ்வழி அவ்வழி சீஷன்" என்பது மெய்யே. உத்தம சீஷனுக்கும் மாய்மாலக்காரனாகிய வஞ்சகனுக்கும் வெகு வித்தியாசமுண்டு. கிறிஸ்தவருக்குள்ளிருக்கிற குறைவு மார்க்கத்தின்படி நடக்காத அவபக்தியினால் உண்டாகிறது; புறமதஸ்தருக்குள் விளங்குகிற குறைவு தங்கள் மதத்தின்படி நடக்கிற பக்தியினால் உண்டாகிறது. மரத்தை அதின் கனியினால் அறிகிறதுபோல, உத்தமனை அவன் கைக்கொண்டு நடக்கிற தர்மத்தினால் அறிகிறோம்.

† Rev. 22. 11.

யாயிருக்கிறது. இயற்கை அறிவாவது செயற்கை அருளாவது தனக்குள் அடங்கும்படி நம்மைக் கட்டாயப்படுத்துகிற தில்லை. இன்னதைச் செய், இன்னதைத் தவிர் என்று உணர்த்தி, அதற்குரிய பலாபலனை எடுத்துக்காட்டி, நாம் நம்முடைய இஷ்டத்தின்படி நடக்க இடங்கொடுத்து, கடைசி நியாயத்தீர்ப்பில் எல்லாம் விளங்கும் என்று தீர்மானிப்பதே வேதசித்தாந்தம்; இது நம்முடைய புத்திக்கும் அநுபவத்துக்கும் சரியென்று தோன்றும்.

e. With express commands to all Christians to preserve and transmit it.

கிறிஸ்துமார்க்கம் உலகஇயலை அதிகாரத்தோடு உறுதிப்படுத்தி எங்கும் பரம்பச்செய்கிறதுமல்லாமல், அது மனுஷர் இயலுக்கு உரியதாயும், அவர்களுக்கு வேண்டிய இகபரநன்மைகளை அருளத்தக்கதாயும் இருக்கிறபடியினால், அதை ஏற்றுக்கொண்டு அதின் பயனை அறிந்துணர்ந்த யாவரும், மற்றவர்களும் அதை ஏற்றுக்கொண்டு அதின் விதிப்படி நடக்கவேண்டுமென்று விரும்பி, அது மற்றவர்களுக்கும் எட்டும்படி பிரயாசப்பட்டு, யாவரும் அதற்குட்பட்டு சுகமடையும்படி முயற்சிசெய்யக் கடனாளிகளாயிருக்கிறார்கள் என்று வேதம் திருவுளம்பற்றுகிறது.*

இயல்வேதம் எப்படி சகலருக்கும் பொதுவோ, அப்படியே அருள்வேதமும் சகலருக்கும் பொது. கிறிஸ்துமார்க்கம் ஒரு ஜாதியாருக்கும் ஒரு தேசத்தாருக்குமாத்திரமல்ல, சகலருக்கும் அடுத்தது; இதனாலும் அதன் மேன்மையும் அவசியமும் விளங்குகிறபடியால் அதை அசட்டைசெய்து வேண்டியதில்லையென்று தள்ளுவது தகுதியல்ல, யுக்தியுமல்ல, அதனால் நமக்கு இகபரநஷ்டமே உண்டாகும்.

II. Christianity is a Revelation of a distinct *dispensation;* with new truths and duties, not discoverable by reason.

II. மேலும் கிறிஸ்துமார்க்கம் மனுஷருடைய புத்திக்கெட்டாத விஷயங்களை வெளிப்படுத்தி, சில நூதனமான கட்டளைகளையும் நியமங்களையும் விதிக்கிறமார்க்கமாயிருக்கிறது. கிறிஸ்துமார்க்கம் கடவுள் உலகத்தை நடத்துகிற பொதுவான ஆளுகைக்கடுத்த

* மத். 28. 19, 20.

இயல்வேதத்துக்குரிய விஷயங்களை வெளிப்படுத்துகிறதுமல்லாமல், பாவத்தினால் கெட்டுப்போன மனுஷர் புண்ணியகாதராகிய தெய்வசுதனாலும், அருள் அளிக்கும் பரிசுத்த ஆவியினாலும் சீரடைந்து ரட்சிக்கப்படும்படியான திருவுளத்தையும் வெளிப்படுத்துகிற மார்க்கமாயுமிருக்கிறது.

(a) New truths: redemption by the Son and Spirit; and

இந்த நூதன மார்க்கத்தின்படியே நாம் பிதாவின் நாமத்தில் ஞானஸ்நானம் பெறுகிறதுமல்லாமல், குமாரனுடைய நாமத்திலும் பரிசுத்த ஆவியினுடைய நாமத்திலும் ஞானஸ்நானம் பெற்றுத் திரியேகதேவனைத் தொழுதுகொள்ளக் கடமையுள்ளவர்களாயிருக்கிறோம். திரியேகராகிய பிதா குமாரன் பரிசுத்தஆவியானவருடைய தத்துவங்களையும் தொழில்களையும் கவனித்து திரியேகருக்கும் நமக்கும் உண்டாயிருக்கிற சம்பந்தங்களையும் முன்னிட்டு வேதவிதியின்படியே நாம் அவருக்குச் செலுத்தத்தகும் கடமைகளைச் செலுத்தவேண்டும். பிதாவாகிய தேவனுக்கும் நமக்கும் உண்டாயிருக்கிற சம்பந்தத்தையும், நாம் அவருக்குச் செய்யவேண்டிய கடமைகளையும் புத்தியினாலும் இயலினாலும் அறிந்துகொள்ளுகிறோம். குமாரனாகிய தேவனுக்கும், பரிசுத்த ஆவியாகிய தேவனுக்கும் உண்டாயிருக்கிற சம்பந்தத்தையும் நாம் அவ்விருவருக்கும் செய்யவேண்டிய கடமைகளையும் சுயபுத்தியினாலும் இயலினாலுமல்ல, வேதவிதியினாலும் தெய்வஅருளினாலும் அறிந்துகொள்ளுகிறோம். புத்தியின் அத்தாட்சியினால் தேவன் உலகத்தை ஆண்டு நடத்துகிறாரென்று அறிந்துகொள்ளுகிறோம். கிறிஸ்துவானவர் தேவனுக்கும் மனுஷருக்கும் நடுநிற்கும் மத்தியஸ்தராகிய ரட்சகர் என்றும், பரிசுத்த ஆவியானவர் மனுஷரைத் தர்மநிலையில் நடத்திப் பரிசுத்தம்பண்ணுகிறவரென்றும் வேத அத்தாட்சியினால் அறிந்துகொள்ளுகிறோம். வேதகட்டளைகளைக் கைக்கொள்ளவேண்டியது அவசியமாகையால், நாம் பிதா குமாரன்

(b) New duties to the Son and the Spirit; which duties spring from our relations to each, as our duty to God springs from our relation to Him; more particularly these duties are internal or external (Baptism, &c.)

பரிசுத்த ஆவியின் நாமத்தில் ஞானஸ்நானம்பெற்று மற்ற வேத நியமங்களையும் கைக்கொண்டு நடக்கக் கடமையுள்ளவர்களாயிருக்கிறோம்.

Religion considered *as internal and external.*

வேதமானது இயல்வேதம் அருள்வேதம் என்று இருவகைப்படும்; இவ்விரண்டும் மனுஷனுக்கும் அவனுக்குரிய தர்மத்துக்கும் அகத்தியமாய் வேண்டியது. இயல்வேதம் என்பது சர்வவல்லமையுள்ள பிதாவாகிய தேவனையும், அவருக்குச் செலுத்தவேண்டிய வணக்கத்தையும் பற்றியது. அருள்வேதம் என்பது தேவசுதனாகிய இயேசுவையும், தேற்றரவாளனாகிய பரிசுத்தஆவியையும், அவர்களுக்குச் செலுத்தவேண்டிய வணக்கத்தையும் பற்றியது. பிதா குமாரன் பரிசுத்தஆவியாகிய திரியேகருக்கும், ஆவி ஆத்மா சரீரமாகிய திரித்துவமுள்ள மனுஷனுக்கும் உண்டாயிருக்கிற சம்பந்தமானது இயல்வேதம் அருள்வேதமாகிய இவ்விரண்டினாலும் விளங்கும். பிதா சிருஷ்டித்துக் காப்பாற்றுகிறார், குமாரன் மீட்டு ரட்சிக்கிறார், பரிசுத்தஆவி போதித்து சுத்திகரிக்கிறார். இயலும் அருளும் திரியேகருக்குச் சாட்சிகொடுக்கிறபடியால் திரியேகரை நாம் வணங்கிப்போற்றித் திருவாக்கை உறுதியாய் நம்பி பயபக்தியோடே நன்றியறிதல் பாராட்டி அவரில் அன்புகூரவேண்டியது அவசியம்.*

1. *Internal: natural* religion refers to the internal acts or states of the heart in relation to God; *revealed,* to internal acts or states in relation to the Son and the Spirit. These duties arise out of our relations; nor is it important *how* we come to know them (by reason or by revelation): and *external;* expressions, that is, of internal states, according to revealed command: whether as to the Father, the Son, or the Spirit. These duties also arise out of relations, and are many of them

கிறிஸ்துமார்க்கத்தைப்பற்றி நாம் சொன்ன நியாயம் யதார்த்தமானால் அது முக்கியமானகாரியம் என்றும், அதை அசட்டைபண்ணுவது மோசமானகாரியம் என்றும் விளங்கும். கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் தொழிலும் செயலும் நமக்கு அறி

2. Moral; i. e.

*(a)* The obligations we owe the Son are as moral as the

* இந்த அதிகாரத்தின் கடைசியிலுள்ள திரித்துவத்தைப்பற்றிய அநுபந்தத்தைக் காண்க.

விக்கப்பட்டு அவருக்கும் நமக்கும் இருக்கிற சம்பந்தம் விளங்கும்போது, அவைப்பற்றி நாம் செய்யவேண்டிய கடமையும் விளங்குகிறது. கிறிஸ்துமார்க்கம் மனுஷருடைய நிலைமையையும், தர்ம ஆளுகையையும், கர்த்தாவுக்கும் நமக்கும் இருக்கும் சம்பந்தத்தையும், பிறருக்கும் நமக்கும் இருக்கும் சம்பந்தத்தையும், தேவனுக்கும் மனுஷருக்கும் நாம் செய்யவேண்டிய கடமைகளையும் எடுத்துக் காண்பிக்கிறது; அருள் வேதம் இல்லாவிடில் இவ்விஷயங்களை நாம் அறிந்துகொள்ள இசையாது.

obligation of charity: they spring out of the nature of the case:

இவைகள் கடவுளால் வேதத்தில் தெளிவாய் நமக்கு அறிவிக்கப்பட்டிருக்கிறபடியால், இவைகளை நாம் அங்கிகரிக்கக் கடனாளிகளாயிருக்கிறோம். இவைகளை அறிந்தும் இவைகளின் உண்மையை ஒத்துக்கொண்டும் அங்கிகரிக்காதவர்கள் குற்றவாளிகளாவார்கள். இவ்விஷயத்தை அறிந்துகொள்ள ஏதுவில்லையென்று வீண் சாக்குப்போக்கு சொல்வது சரியன்று; ஏனென்றால், இவைகள் அறிந்துகொள்ளக் கூடிய விஷயங்களே.

(b) While the violation of them has evil consequences, and is as inexcusable in the case of revelation as in the case of reason, a truth applied to the Son, and to the Spirit.

கிறிஸ்துவானவர் தேவனுக்கும் மனுஷனுக்கும் மத்தியஸ்தராயிருப்பதும், அவரே நம்முடைய ஆண்டவரும் ரட்சகருமாயிருப்பதும் மெய்யானால்,—இது தவறாத வேதசத்தியமாயிருக்குமானால்,—இருதயகடினத்தினாலும் அவிசுவாசத்தினாலும் அஜாக்கிரதையினாலும் அவரை அங்கிகரிக்காமல் புறக்கணித்து அலட்சியம்பண்ணுவது பெரிய மோசத்துக்கு ஏதுவாகும். குருதுரோகம் பஞ்சமாபாதகத்தில் ஒன்றுதலால், அவரை மனமறிந்து புறக்கணிக்கிறவர்கள் குற்றவாளிகளாவார்கள். "ஒருவன் ஜலத்தினாலும் ஆவியினாலும் பிறவாவிட்டால் தேவனுடைய ராஜ்யத்தில் பிரவேசிக்கமாட்டான்" என்று வேதத்தில் ரட்சகர் திருவுளம்பற்றியிருக்கிறார்.*

* Cur. 3. 5.

இதனால் மனுஷர் ஜன்மத்தின்படியும் கர்மத்தின்படியும் புண்ணியமற்ற பாவிகளும் பரத்துக்குத் தகாதவர்களுமாயிருக்கிறார்களென்றும், அவர்கள் தேவ ஆவியின் அருளினால் மறுஜநநமடைந்து பரத்துக்குரியவர்களாகவேண்டியவர்களாயிருக்கிறார்களென்றும் விளங்குகிறது. அதற்கென்று வேதத்தில் அருளப்பட்டிருக்கிற தேவயத்தனத்தை அலட்சியம்பண்ணுகிறது வேதவிதியை மீறுகிற தேவதுரோகமாகும். நாம் செய்யவேண்டிய முயற்சிகளையும் பிரயத்தனங்களையும் தேவ உதவியில்லாமல் செய்யத் துணியலாகாது. சுயசக்தியினால் காரியசித்தியாகாது, ஒரு நன்மையும் வாய்க்காது. இயல்வேதத்தினால் நமக்குத் தோன்றாத ஞானகாரியங்களை அருள்வேதத்தினால் அறிந்து அருளினால் பெறத்தக்க ஞானநன்மைகளை அடைந்துகொள்வதே நமக்குத் தகுதி. நாம் அறியவேண்டிய காரியங்களை இயற்கை அறிவினாலும் அதற்கடுத்த அநுபவத்தினாலும் அறியவேண்டும்; பாவிகள் ரட்சிக்கப்பட்டுக் கரையேறும் வழி இயற்கை அறிவினாலும் அநுபவத்தினாலும் விளங்காதபடியால், அதை நாம் வேத அறிவினாலும் தேவ அருளினாலுமே அறிந்துகொள்ளவேண்டும்.

**14. Conclusion.**

கிறிஸ்துமார்க்கம் சத்தியமாயும், நம்மால் நம்பப்படத்தக்கதாயும் இருக்குமானால் அதை நாம் அற்பமாய் எண்ணுவது ஆத்தும நஷ்டத்துக்குரிய பெருந்துணிவாயிருக்கும். அதின் அத்தாட்சிகளைக் கவனிக்கும்போது அது சத்தியம் என்று ரூபகாரப்படுமானால் அதை அங்கிகரிப்பதே நம்முடைய கடமை.

**B. Mark the distinction between moral and positive in religion.**

ஆத்தும ஞானவிஷயங்களைப்பற்றி நாம் தெளிந்த அறிவுள்ளவர்களாயிருக்கும்பொருட்டு நியாயப்பிரமாணத்துக்கும் நியமப்பிரமாணத்துக்கும் இருக்கிற வித்தியாசத்தைப் பகுத்தறியவேண்டும். நியாயப்பிரமாணமானது நம்முடைய புத்திக்கு இயல்பாய்த் தோன்றுகிற பிரமாணம்; அதற்குக் கட்டளை அவசியமல்ல. நியமப்பிரமாணமானது நம்முடைய புத்

(a) In *moral* duties (precepts) we see

திக்கு இயல்பாய்த் தோன்றாத பிரமாணம்; அதற்குக் கட்டளை அவசியம்.

the reason for them; in positive we do not.

ஒன்று அகத்தில் தோன்றும் இயற்கைப்பிரமாணம், மற்றொன்று புறத்தில் தோன்றும் செயற்கைப்பிரமாணம்; இவ்விரண்டும் ஒருவாறு வெவ்வேறாயிருந்தும் சம்பந்தப்பட்டிருக்கிறது. ஒரு காரியத்தை யாவரும் சரியென்று இயல்பாய் ஒத்துக்கொள்ளுகிறது நியாயப்பிரமாணம்; ஒரு காரியம் சரியாயிருக்கிறபடியால் அதை நாம் கைக்கொள்ளும்படி விதிக்கப்பட்டிருக்கிறதே நியமப்பிரமாணம். ஒரு யூதன் தன் தாய்தகப்பன்மாரை கனம்பண்ணவேண்டுமென்பது நியாயப்பிரமாணம்; அந்த யூதன் எருசலேமிலுள்ள தேவாலயத்தில் தொழுதுகொள்ளவேண்டுமென்பது நியமப்பிரமாணம். தேவனைத் தொழுதுகொள்வது நியாயமான காரியமாகையால் அது வேதத்தில் விதிக்கப்பட்டிருக்கிறது; எருசலேமில் தொழுதுகொள்வது வேதத்தில் விதிக்கப்பட்டிருக்கிறபடியால் அது நியாயமானகாரியமாயிருக்கிறது. கொலை களவு பொய் முதலானவைகளைப்பற்றிய விதிவிலக்குகள் நியாயப்பிரமாணம்; சடங்காசாரம் முதலானவைகளைப்பற்றிய விதிவிலக்குகள் நியமப்பிரமாணம்.

*(b)* Moral duties arise out of the nature of the case (relations), positive from external command.

*(c)* தீதொழிய நன்மைசெயலும் தேவவணக்கமும் நல்லொழுக்கமும் நியாயப்பிரமாணம். பிதா குமாரன் பரிசுத்தஆவியின் நாமத்தில் ஞானஸ்நானம் பெறுவது நியமப்பிரமாணம். இவ்விரண்டும் வேதத்தில் விதிக்கப்பட்ட தேவகட்டளையாயிருக்கிறபடியால் இவைகளை நாம் கைக்கொண்டு நடக்கக் கடமையுள்ளவர்களாயிருக்கிறோம்.

*(c) How* we come to know relations and duties is a question that does nothing in deciding what duties are positive and what moral: external obligations due to God and Christ are positive; though the relation of the Father to us is taught by reason, the relation of the Son, by Scripture &c.

நம்மைப் படைத்துக் காத்து ரட்சித்து, நாம் அநுபவிக்கிற சகல நன்மைகளுக்கும் காரணராயிருக்கிற பிதாவினிடத்தில் நாம் அன்பு

*(d)* Positive institutions (though always fixed by exter-

nal command) are founded either on natural religion or on revealed.

கூருகிறது நமக்கு இயல்பும் கடமையு மாயிருக்கிறது; அப்படியே அன்பைப் பெருக்கி நமது ஆருயிரைக் காக்கவந்த தேவசுதனுகிய ரட்சகரிடத்திலும் நாம் அன்புகூர்ந்து நன்றி யறிந்திருப்பது நமக்கு இயல்பும் கடமையுமாயிருக்கிறதென்று வேதமே திருவுளம்பற்றுகிறது.

2. Mark, that from this distinction we gather the ground of the preference given in Scripture to moral over positive duties.

நியமப்பிரமாணத்தைப்பார்க்கிலும் நியாயப்பிரமாணமே வேதத்தில் சிறந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. நியமப்பிரமாணம் நியாயப்பிரமாணத்துக்கு விரோதமாயிருந்து நியமப் பிரமாணத்தின் பொருளும் பயனும் நமக்கு விளங்காதிருக்குமானால் நியமப்பிரமாணத்தைப்பார்க்கிலும் நியாயப்பிரமாணத்தைக் கைக்கொள்வதே நம்முடைய கடமையாகும்.

(a) Carefully note, however, that positive duties, as a whole, (though not any particular modes) are generally binding; and the two must not be contrasted further than as they differ.

வேதத்தில் விதிக்கப்பட்ட தேவாராதனையாகிய கடவுள் வணக்கம் யாவருக்கும் பொதுவான தர்மப்பிரமாணம். அவரவர் மனதுக்குத் தோன்றினபடி பலவிதமாய்ச் செய்யப்படும் விகாரமான ஆராதனையோ தர்மப்பிரமாணமல்ல. இவ்விரண்டு பிரமாணங்களும் ஒன்றையொன்று விரோதித்தால் புத்திக்கேற்ற நியாயப்பிரமாணத்தையே அங்கிகரிக்கவேண்டியது.

(b) If they interfere, fulfil the moral, because, 1. the moral law has always a reason in its favour, and 2. It is in itself an end, while positive duties are only means.

நியாயப்பிரமாணம் காரணத்தையும் நியமப்பிரமாணம் காரியத்தையும் குறிக்கிறபடியால் பொருளையும் பயனையும் நோக்கி நியமத்தைப்பார்க்கிலும் நியாயத்தையே தழுவவேண்டும்.

(c) Popularly speaking, both are commanded, and so both are binding, yet still the moral are also written in our

நியாயப்பிரமாணம் நியமப்பிரமாணம் இரண்டும் வேதத்தில் விதிக்கப்பட்ட பிரமாணங்களாயிருக்கிறபடியால் இரண்டும் ஒருவாறு சமானதர்மங்களென்றே சொல்லத்தகும். என்றாலும் நியமப்பிரமாணம் வேதத்தில்மாத்

திரம் எழுதியிருக்கும்; நியாயப்பிரமாணமோ வேதத்திலும் நம்முடைய உள்ளத்திலும் எழுதியிருக்கும். இரண்டும் விகாரப்படும்போது, நியாயப்பிரமாணமே சிறந்ததென்று மதிக்கவேண்டும்.

hearts, and so are to be preferred.

வேதமே இந்த வித்தியாசத்தை நமக்குத் தெளிவாய் எடுத்துக்காட்டுகிறபடியால் நியமத்திலும் நியாயமே சிறந்ததென்று விளங்கும்.

(*d.*) The question, moreover, is settled for us. The moral is decided to have peculiar claims.—

"பரிசுத்தமில்லாமல் தேவனைத் தரிசிக்கக்கூடாதென்று" சத்தியவேதத்தில் சொல்லியிருக்கிறபடியால் அறநெறியே சிறந்ததர்மம்.*

1. Nothing can be acceptable to God without holiness (moral virtue.)

மனுஷர் நாடிச்செய்யும் வெளிவேஷத்துக்குரிய நியமநிஷ்டைகளும் சடங்காசாரங்களும் தர்மமாகாது. நியாயம் நியமம் இரண்டையும் விதித்த கர்த்தரே இந்த விஷயத்தை நன்றாய் விளங்கப்பண்ணியிருக்கிறார்: எப்படியெனில், ஆயக்காரரோடும் பாவிகளோடும் புசிக்கிறதைப்பற்றியும், சீஷர்கள் ஓய்வுநாளில் கதிர்களைக்கொய்து தின்றதினால் ஓய்வுநாளை ஆசரிக்கிறதைப்பற்றியும், யூதர்கள் ரட்சகரிடத்தில் தர்க்கம்பண்ணினபோது நியமமல்ல நியாயமே சிறந்ததென்று வெளிப்படுத்தி, "கர்த்தர் பலியையல்ல, இரக்கத்தையே விரும்புகிறார்" என்னும் பொதுவிதியை நாட்டினார். இதனால் தர்மமானது மதாசாரங்களையும் நியமநிஷ்டைகளையும் அல்ல, பக்தியையும் நல்லொழுக்கத்தையும் பற்றியிருக்கிறதென்று வெளிப்படுத்தினார்.†

2. Scripture lays stress ever on the moral, and tells us of our Lord's declarations (Matt. 9: 13. &c,) which are general and decisive.

என்றாலும் இவ்விரண்டு பிரமாணங்களையும் ஒத்திட்டுப்பார்த்து இவற்றில்

(*e*) Guard, however, against the mistake of supposing

---

* "மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன் ஆகுல நீர பிற" என்று குறளில் சொல்லியிருக்கிறது.

† Hosea. 6. மத். 9. 13: 12. 7.

that because positive are *less* important than moral duties, therefore they are of no importance. Positive Divine commands lay us under a moral obligation to obey them.

சிறந்ததாகிய நியாயப்பிரமாணத்தையே கைக்கொண்டு, நியமப்பிரமாணத்தைக் கைவிடலாமென்று வீண்துணிவு கொள்ளலாகாது. வேதத்தில் விதிக்கப்பட்ட தேவகட்டளைகளையெல்லாம் நாம் கைக்கொள்ளக் கடனாளிகளாயிருக்கிறோம். திருவுளம் விதித்ததை காடிநிற்பதே தர்மத்துக்கும் பக்திக்கும் லட்சணம்.

C. Another deduction or inference (afterwards expanded, ch. iii.) is, that as Christianity is not discoverable by reason, its scheme must be sought *in Scripture*; nor is it an objection to any interpretation of Scripture that it discloses a doctrine or a precept, not contrary to reason and natural religion, but above them, that is neither discoverable through their teaching nor made obligatory by their authority.

நியாயம் இப்படியிருக்கிறபடியால், நாம் வேதத்தை ஆராய்ந்துபார்த்து தேவ திருவுளம் இன்னதென்று அறிந்துகொள்வதே நம்முடைய கடமையென்று விளங்குகிறது. நம்முடைய சிற்றறிவை முன்னிட்டு நம்முடைய சொற்பபுத்தியை நம்பி வேதமானது நம்முடைய புத்திக்கும் சித்தத்துக்கும் அபிப்பிராயத்துக்கும் ஏற்றபடியே இருக்கவேண்டுமென்று நாம் தீர்மானிக்கத் துணியாமல், நம்முடைய சிற்றறிவுக்கும் புத்திக்கும் சித்தத்துக்கும் அபிப்பிராயத்துக்கும் மேற்பட்ட காரியங்களுள்ள வேதத்தைப் பிள்ளைபத்தியாய் ஆராய்ந்து அறிந்துகொள்வதே நமக்குரிய கடமையாம்.

Canons of interpretation.

இரண்டு பொதுவிதிகளைக்கொண்டு வேதவாக்கியங்களை வியாக்கியானம்பண்ணவேண்டும்: அவையாவன, (1) இயல்வேதத்திற்கு விரோதமாய்த் தோன்றுகிற காரியம் அருள்வேதத்தில் காணப்படுமானால் அவ்விரோதம் நேரான யதார்த்த விரோதமாயிராமல் விபரீத வீணான விரோதமென்றே பாவிக்கவேண்டும். (2) இயற்கை அறிவினால் விளங்காத உபதேசமும் இயற்கைப்பிரமாணத்தினால் அமையாத நியமமும் அருள்வேதத்தில் காணப்படுமானால் அவைகளை விபரீதமென்று பாவிக்காமல் யதார்த்தமென்றே பாவிக்கவேண்டும். மேலும் இயலும் அருளும் ஒரு

வோறு சம்பந்தப்பட்டிருக்கிறபடியாலும், இயலைப்பார்க்கிலும் அருள் சிறந்ததாயிருக்கிறபடியாலும், இயலைக்கொண்டு அருளை நிதானித்து வியாக்கியானம்பண்ணத் துணியாமல் அருளைக்கொண்டே இயலை நிதானித்து வியாக்கியானம் பண்ணி, இரண்டும் விகாரப்படும் விஷயத்தில் வீண்துணிவு கொண்டு நிதானித்து வியாக்கியானம்பண்ணுமல் அமர்ந்து ஆய்ந்தோய்ந்து விநயத்துடன் நிதானித்து வியாக்கியானம் பண்ணவேண்டும்.*

† அநுபந்தம்.—இந்த அதிகாரத்தில் திரித்துவத்தைப்பற்றி சுருக்கமாய்ச் சொல்லியிருப்பதை இந்த அநுபந்தத்தில் விபரமாய் எடுத்துக்காட்டுகிறோம். கடவுள் உண்டென்பது மனோவாக்குக்கெட்டாத பரமரகசியம். அவர் அற்புதநாதர், அதரிசனமானவர், ஒப்பில்லாதவர். சூரியனைச் சூரியவெளிச்சத்தினால் காண்கிறதுபோலக் கடவுளை அவர் அருளிய வேதத்தினாலும் ஞானக்கண்ணினாலும் கண்டு அறியவேண்டும். சர்வ சிருஷ்டியும் வேதமும் கடவுள் உண்டென்று அவருக்குச் சாட்சியிடுகிறது; அதற்கு இசைவாய் பரமாத்துமாவுக்கு ஜீவாத்துமாவும் சாட்சியிடுகிறது. அவர் எங்கும் நிறைந்த சர்வவல்லமையும் சர்வஞானமுமுள்ள சத்தியசொரூபி; அவர் சிருஷ்டி-திதி-சங்காரகர்த்தராய் விளங்கும் ஜீவசொரூபி; அவர் சர்வஜீவ தயாபரராகிய அன்பின் சொரூபி. அவர் உலக இயலில் ஏகரும் வேதத்தில் திரியேகரு

*Appendix.*—Doctrine of the Trinity: explained by analogies.

God is Truth, Life, Love—Love communicates, reveals. Before creation, in Unity, God is unconditioned. In creation, in Trinity, God is invested with attributes, is *Personal.*

---

* அருள்வேதம் இயல்வேதத்தை உறுதிப்படுத்துகிறதுமல்லாமல், இயல்வேதத்தில் விளங்காத விஷயங்களை அருள்வேதம் விளக்கப்பண்ணி இயற்கையோடு செயற்கையான பற்பல விஷயங்களையும் விளக்கப்பண்ணும். இயல்வேதத்தில் மனுஷருடைய பாவவியாதி இன்னதென்று விளங்கும். அருள்வேதத்தில் அந்த வியாதியை நிவிர்த்திசெய்கிற அவிழ்தம் இன்னதென்று விளங்கும். இயல்வேதத்தால் மனுஷருக்குப் பயமும் சந்தேகமும் உண்டாகும். அருள்வேதத்தால் மனுஷருக்கு தைரியமும் தெளிவுமுண்டாகும். இயல்வேதத்தால் இருளும் மருளுமுண்டாகும், அருள்வேதத்தால் ஒளியும் தெருளும் உண்டாகும். "ஒருவன் நன்மைசெய்ய அறிந்தவனாயிருந்தும் அதைச் செய்யாமற்போனால், அது அவனுக்குப் பாவமாயிருக்கும்" என்று வேதம் சொல்லுகிறது. (யாக். 4. 17.)

† "அன்பிற்கு முண்டோ அடைக்குந்தா ழார்வலர்
புன்கணீர் பூச றரும்." குறள்.

மாய் விளங்குகிருர். அவர் அன்பின் சொரூபியாயிருக்கி றபடியால் அன்பு தன்னிலே அடக்கமாயிராமல் பிறருக்கு விளங்கி உத்தமரிடத்தில் பலுகிப்பெருகும். ஏகத்துவம் பூரணத்தையும் திரித்துவம் பரிபூரணத்தையும் குறிக்கும். கடவுள் சிருஷ்டிக்குமுன் ஏகத்துவமாய் விளங்கினுர், சிருஷ்டிக்குப் பின் திரித்துவமாய் விளங்குகிருர். நான் நீ அவன் என்பதும், முதல் இடைகடை என்பதும் மூவிடத்தையும், இறப்பு நிகழ்வு எதிர்வு என்பது திரிகாலத்தையும் தழுவும். சூரியனிலிருந்து ஒளியும் உயிரும் தோன்றுகிறதுபோல, பிதாவினிடத்திலிருந்து பொருள் விளக்கும் சுதனும் அருள் விளக்கும் ஆவியும் தோன்றுகிருர்கள். கடவுளுக்குச் சச்சிதாநந்தம் என்னும் பேர் உண்டு. அது சத்து, சித்து, ஆநந்தம் என்னும் பொருள்படும். சத்து, உள்ளது, உண்மை, சிருஷ்டிகர்த்தா; சித்து, அறிவு, ஞானம், குருநாதர்; ஆநந்தம், பேரின்பம், அருட்கொடையோன். சச்சிதாநந்தம் என்னும் பெயர் பூவும் அதன் வண்ணமும் அதன் மணமும்போல் சத்தும் சித்தும் ஆநந்தமுமாகி விளங்காநின்ற திரியேகத்தைக் குறிக்கும்.

*Three*, a perfect number. I, Thou, He; Beginning, Middle, End; Past, Present, Future.

*Sach-chid-ânanda*, The Supreme Being: *Sat*, Being, The Creator, The Father. *Chit*, Thought, The Word, The Son, The Saviour. *Ananda*, Joy, The Comforter, The Holy Spirit.

கருணாலயம் என்னும் நாமமும் கடவுளுக்கு இடப்பட்டிருக்கிறது. இந்த நாமத்தின் பொருளும் பயனும் அருள்வேதத்தினுல் விளங்கும். ஒரே தேவன் மூன்று ஆலயங்களில் எழுந்தருளித் தம்முடைய மகிமையை விளங்கப்பண்ணினுர். (1) தேவன் பூர்வத்திலிருந்த மகாத்துமாக்களுக்குக் காட்சியாகித் திருவுளத்தை வேதமாக வெளிப்படுத்தி, எருசலேமில் கையினுல் கட்டப்பட்ட ஆலயத்தில் எழுந்தருளியிருந்தார்; இது முதலாவது கருணாலயம். (2) இரட்சகர் பூலோகத்தில் சத்தியமும்

*Karunâlaya*, The Temple of Grace. The Three Temples of the One Living God, indicative of the Three Dispensations.

கிருபையும் அன்பும் நிறைந்த பரமபுருஷோத்தமனாய் அருள் அவதாரஞ்செய்தபோது அவருடைய திருமேனியாகிய சரீரமே இரண்டாம் கருணாலயமாயிற்று. (3) இரட்சகர் பரத்துக்கு எழுந்தருளி வரமளிக்கும் பரிசுத்தஆவியை அநுக்கிரகித்து அந்தப் பரிசுத்தாவியானவர் கிறிஸ்துவின் சரீரமாகிய திருச்சபையில் எழுந்தருளினபோது கிறிஸ்துவின் அங்கமென்னும் திருச்சபையாகிய சங்கம் மூன்றாம் கருணாலயமாயிற்று.

பிதா வெளிப்படாத காரணப்பொருள்; சுதன் வெளிப்பட்ட காட்சிப்பொருள்; பரிசுத்தஆவி வெளிப்படுத்தும் சாட்சிப்பொருள். இந்தப் பரமரகசியம் திரியேகராகிய பரமாத்துமாவுக்குரியதுமல்லாமல் மனுஷனாகிய ஜீவாத்துமாவுக்குமுரியது. "தன்னை அறிந்தவன் தலைவனை அறிவான்" என்பது மெய். மனுஷன் தேவசாயலில் உண்டாக்கப்பட்டிருக்கிறபடியால், திரித்துவம் அவனுக்குள்ளும் விளங்குகிறது. அவனுக்குச் சரீரம் ஆத்துமா ஆவி இம்மூன்றும் உண்டென்பது வேதசத்தியம். (1 தெச. 5. 23.)

The Father, the unrevealed God. The Son, the revealed God. The Holy Spirit, the revealing God.

Man was made in the image of God. The Tripartite nature of Man,—Body, Soul and Spirit.

சிருஷ்டிகர்த்தாவானவர் திரியேகராயிருக்கிறதினாலும் சிருஷ்டியான மனுஷன் திரித்துவமாயிருக்கிறதினாலும் பயனுண்டு. (1) மனுஷன் அற்பமான அநித்திய பொருளாகையால் அவன் நாடிப் பற்றிக்கொள்ளத்தக்க மகத்தான நித்தியபொருள் ஒன்று இருக்கவேண்டும், அந்தப் பொருளே பரமபிதா. (2) மனுஷன் ஜந்மத்தாலும் கர்மத்தாலும் மனோவாக்குக் காயத்தாலும், ஏழைப் பாவியாயிருக்கிறபடியால் அவனுக்குப் பாவநாசரும் புண்ணியநாதரும் பரமகுருவுமாகிய ரட்சகர் ஒருவர் இருக்கவேண்டும், அவரே தேவசுதன். (3)

The doctrine of the Trinity meets the necessities of man, as a finite dependent being, as a sinful miserable being, as a weak ignorant being,–but having an infinite Almighty Father, an able and loving Saviour, a powerful Guide and Comforter.

மனுஷன் ஆறுதலற்ற பலவீனபாண்டமாயிருக்கிறபடியால் அவன் உள்ளத்தில் வாசம்பண்ணி அவனை ஆற்றித்தேற்றிப் பலப்படுத்திச் சீர்ப்படுத்திப் பேரின்பசுகத்துக்குரிய சற்பாத்திரமாக்க பரமதேற்றரவாளன் ஒருவர் இருக்கவேண்டும், அவரே பரிசுத்தஆவியானவர். ஆதலால் தேவசாயலில் உண்டாக்கப்பட்ட மனுஷன் திரியேகருடைய திருநாமத்தில் பரமதீட்சையாகிய ஞானஸ்நானம் பெற்று, ஆசீர்வதிக்கப்பட்டு, பிதாவுக்குப் பிள்ளையாகி, குருவுக்குச் சீஷனாகி, பரிசுத்தஆவிக்கு ஆலயமாகி, இம்மை மறுமைக்குரிய ஞானநன்மைகளுக்குப் பங்குள்ளவனாகிறான். ஆகையால் ஒப்புமைநியாயத்தினால் இந்தப் பரமரகசியமாகிய சத்தியமும் விளங்கும்.

**Man, by Baptism is made a child of God, a disciple of the Saviour, and the living temple of the Spirit.**



## CHAPTER II.

*Of the supposed presumption against a Revelation, considered as Miraculous.*

## 2–ம் அதிகாரம்.

## அருள்வேதத்தில் அற்புதசெயல் கண்டிருக்கிறதினால் அது இயலுக்கு விரோதம் என்று சொல்லு கிறவர்களின் ஆட்சேபனையைப் பற்றிச் சொல்லியது.

*முந்தின அதிகாரத்தில் கிறிஸ்துமார்க்கமாகிய அருள்வேதம் மனுஷர் கைக்கொள்ளத்தக்க சத்தியமானால், அது இகபர நன்மைக்கு அவசியம் வேண்டியதென்றும்; அதின் விசேஷமும் அதை மனுஷர் கைக்கொள்ள வேண்டிய கடமையும் இன்னதென்றும் முந்தின அதிகாரத்தில் காண்பித்தோம். அருள்வேதத்தில் அற்புதகிரியைகள் நடந்திருக்கிறதாகச் சொல்லியிருக்கிறதினால், அது உலகஇயலுக்கு விரோதம் என்று சிலர் சொல்லும் ஆட்சேபனைக்கு இந்த அதிகாரத்தில் உத்தரவு சொல்லி, கிறிஸ்துமார்க்கத்தில் அடங்கிய விசேஷங்களுக்கு விரோதமாய்ச் சொல்லப்படும் ஆட்சேபனைகளுக்கு உத்தரவு பின்வரும் நான்கு அதிகாரங்களில் சொல்லப்படும். இவ்வித பொதுவான ஆட்சேபனைகளைச் சிக்கறுத்தபின்பு, கிறிஸ்துமார்க்கத்துக்குரிய உறுதியான அத்தாட்சிகளைப்பற்றிச் சொல்லிய ஆட்சேபனைகளுக்குக் கடைசி அதிகாரத்தில் உத்தரவு சொல்லப்படும்.*

Christianity is, as we have seen (Ch.1.) important. Before considering particular objections to it, *revelation in general* is objected to; because, from the very nature of the case, it is above Nature, and so, miraculous. The miraculousness of revelation, and miracles generally, will therefore be first considered. Are objections to revelation on this ground well founded?

நடந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிற அற்புதசெயலாகிய அத்தாட்சியின்பேரில் அருள்வேதம் கட்டப்பட்டிருக்கிறதினால் மற்ற விஷயங்களைக் குறித்துச் சொல்லிய நியாயங்களைப்பார்க்கிலும் அற்புத விஷயத்தைக்குறித்துச் சொல்லிய நியாயங்கள் விசேஷித்திருக்கவேண்டும் என்று சிலர் சொல்லுகிறபடியால், அற்புத விஷயத்தை மெய்ப்பிக்கும் நியாயங்களை எடுத்துரைத்து அவற்றிற்குரிய சந்தேகங்களை நிவிர்த்தி செய்வோம்.

A. The objection lies, not against the general scheme or particular doctrines of Christianity, but against revelation; and that on one of two grounds; either

ஆதிகாரணகடவுளாகிய தேவன் இயேசுகிறிஸ்துவினால் உலகத்தை உண்டாக்கி ஆண்டு நடத்துகிறாரென்பதும், அவரைக்கொண்டே உலகத்தை நீதியாய் நியாயந்தீர்த்து, அவனவன் கிரியைக்குத்தக்கதாய் அவனவனுக்குப் பலன் அளிப்பாரென்பதும், நல்லவர்கள் தேவஆவியின் ஏவுதலினால் நடத்தப்பட்டு நல்வழியில் நடக்கிறார்களென்பதும் அருள்வேதமாகிய கிறிஸ்துமார்க்க உபதேசங்களாயிருக்கிறது. உலகத்தைச் சிருஷ்டிப்பது அற்புதமென்று சொல்வோமானால், வேதத்தை அருளுவதும் அற்புதமென்றே சொல்லவேண்டும். வேத உபதேசங்கள் நம்முடைய புத்திக்கும் அநுபவத்துக்கும் எட்டாதவைகளானபடியால், அவைகள் இயலினால் விளங்காமல் அருளினால் விளங்கவேண்டும். வேதம் அருளப்படுவதே அற்புதமானால், அது அற்புதத்தினாலேயே திருஷ்டாந்தப்படவேண்டியது அவசியம்.*

உலகஇயலினால் வேதத்தை நியாயமாய் அளவறுக்கும்போது யாதொரு விகற்பமும் தோன்றாது. விபரீதத்தினால் அருள்வேதத்தைப்பற்றி யாதொரு விகற்பம் தோன்றுமானால், அந்த விகற்பம் மனுஷருடைய புத்தியையும் அநுபவத்தையும் கடந்துநிற்கிறதென்றாவது, அருள்வேதம் உலகஇயலுக்கு விரோதமாயிருக்கிறதென்றாவது சொல்லவேண்டும். இவ்வி

*அற்புதம் அசாத்தியமான காரியமென்று சாதிப்பவர்கள் அற்புதமாய் உலகத்தை உண்டாக்கி ஆண்டு நடத்துகிற அற்புதமூர்த்தியானவரும் இல்லையென்று சாதிக்கவேண்டியதாகும்.

ரண்டு நியாயங்களையும் ஒப்புமைநியாயத்தினால் ஒத்துப் பார்க்கும்போது விகற்பம் தோன்றாது.

முதலாவது, அருள்வேதத்தினால் விளங்கிய சத்தியவேத உபதேசமானது மனுஷருடைய புத்தியினாலும் அநுபவத்தினாலும் கண்டுபிடிக்கக்கூடாமலிருப்பது வேதத்துக்கு விரோதமான ஆட்சேபனையென்று ஒப்புமை நியாயத்தினால் விளங்காது. எப்படியெனில், அருள்வேதத்தைப்பற்றிக் கேள்விப்பட்டிராத ஒருவன் உலகஇயலுக்கும் சாஸ்திரவிதிகளுக்குமுரிய பல விஷயங்களை ஆராய்ச்சிசெய்து, மகா படிப்பாளியும் புத்திசாலியுமாயிருந்தாலும், அவன் அறிவு குறைவுள்ளதென்றும், உலகத்திலுள்ள பலவிஷயங்கள் தனக்கு விளங்கவில்லையென்றும், திரிகாலத்துக்குமுரிய அநேக காரியங்கள் இன்னும் அறியப்படவில்லையென்றும், அவைகள் மனோவாக்குக்கெட்டாதவைகளானபடியால் அவைகளை இயலினாலல்ல அருளினாலேயே அறியவேண்டுமென்றும் தீர்மானிப்பான். தெய்வச்செயலில் பதினாயிரத்தில் ஒருபங்கும் நமக்கு இயல்பாய் விளங்காது. கடந்துபோன கோடாகோடி காரியங்களும், இனி சம்பவிக்கப்போகிற கோடாகோடி காரியங்களும் மனுஷர் புத்திக்கு எட்டாதவைகள். பிரத்தியட்சமாய் உள்ளவைகள் நமக்கு எட்டாமலும் விளங்காமலும் இருக்கிறதினால், உள்ளதை இல்லையென்று சொல்லத் துணிவோமா? உலகஇயலில் அறியக்கூடாத பல காரியங்கள் இருக்கிறதுபோலவே அருள்வேதத்திலும் அறியக்கூடாத பல காரியங்கள் உண்டென்று யாவரும் ஒத்துக்கொள்ளவேண்டியதே.

1. Because the scheme of religion is not discoverable without revelation. But this is no just objection; because there are in Nature innumerable things not discoverable by our natural faculties, but yet true and real.

இரண்டாவது, அற்புதசெயல்களை நாட்டும் அருள்வேதமானது சாதாரணமாய் நடக்கும் உலகஇயலைப்போலிராமல் விகற்பமாய்த் தோன்றுகிறதென்று சொல்லும் ஆட்சேபனை ஒப்புமைநியாயத்தினால் விளங்காது. (a) உலகஇயலில் சில காரியங்கள் நமக்கு

II. Or, because revelation, as miraculous, is unlike the known course of Nature. But this is no just objection; because

விளங்கும், சில காரியங்கள் நமக்கு விளங்காது; விளங்காத காரியங்களைக்கொண்டு விளங்கும் காரியங்களுக்குத் தோஷஞ்சொல்லலாமா? (b) உலகஇயலில் நாம் கண்டு அறிந்திருக்கிற அநேகங்காரியங்கள் ஒன்றோடொன்று சம்பந்தப்படாமல் விகற்பப்பட்டிருக்கிறபடியால் அநேககாரியங்கள் விகற்பமாய்த் தோன்றுகிறதைக் காண்கிறோம். கண்ணுக்கு விஷயமாகிற காரியங்களும், கண்ணுக்கு விஷயமாகாத காரியங்களும் சம்பந்தப்படாமல் விகாரமாய்த் தோன்றுகிறது சகஜமான காரியம்.

(a) It is not probable that every thing in the unknown course of Nature, is like something in the known.

(b) And, even in the known course of Nature, many things are unlike one another.

(c) மேலும், சிலர் எண்ணுகிறபடி, உலகஇயல் வேதஇயலுக்கு வேறுபட்டிராமல் ஒருமைப்பட்டிருக்கிறதென்று இனி சொல்லப்போகிற நியாயங்களினால் விளங்கும்.

(c) The course of Nature is not so unlike revelation as many suppose, and this will hereafter appear.

கிறிஸ்துநாதர் பரத்திலிருந்துவந்த சற்குரு என்பதற்கு அவரால் விளங்கின அற்புதங்கள் ஒரு அத்தாட்சி. அவர் கன்னிகையின் கர்ப்பத்தில் உற்பவித்துப் பிறந்து மனுஷ அவதாரஞ்செய்தது நமக்கு விளங்காத அற்புதம். மனுஷர் கண்கண்டு அறிந்துணரத்தக்கதாக அவர் செய்த அற்புதங்கள் நமக்கு விளங்கும் அற்புதங்கள். நமக்கு விளங்கும் அற்புதம் நமக்கு விளங்காத அற்புதத்துக்கு அத்தாட்சி. வேதம் அருளப்படுவதே அற்புதம், அந்த வேதம் சத்தியமென்பதற்கு அதில் விளங்கிய அற்புதங்களே அத்தாட்சி. ஆகையால், அற்புதங்கள் நடக்கக்கூடாத காரியங்களென்று உலகஇயலினாலும் ஒப்புமைநியாயத்தினாலும் திருஷ்டாந்தப்படுத்தக்கூடாது.

Whether the above examples include all that is meant by miraculous, may be questioned. But the general idea expressed by the word being clear, note further

B. That against revelation as miraculous, or against miracles as proofs of it, there could be no presumption at the beginning of the world; for

கடவுள் முதல்முதல் உலகத்தை உண்டாக்கினபடியே வேதத்தையும் உண்டாக்கக்கூடும். உலகம் உண்டாகிறதற்குமுன் உலகஇயல் இல்லை. வேதம் ஆதியில் அருளப்பட்டிருக்குமானால் அது அருளப்பட்ட அற்புதம் இயலுக்கு விரோதமல்ல. ஆகையால் வேத அற்புதத்தை ஒப்புமைநியாயத்தினால் நிராகரிக்கக்கூடாது. எப்படியெனில் அற்புதம் என்பது உலகஇயலோடு ஒருவாறு சம்பந்தப்பட்டதாயினும் உலகஇயலுக்கும் அற்புதத்துக்கும் வேற்றுமை உண்டு. உலகம் சிருஷ்டிக்கப்பட்டபின் உலகஇயல் உண்டாயிற்று. உலகஇயலில் ஆதிமுதல் சம்பவிக்கிற சம்பவங்களை அறிந்து ஒத்துக்கொள்ளுகிறதுபோலவே சத்தியவேதத்தை விளங்கப்பண்ணும் அற்புத சம்பவங்களையும் அறிந்து ஒத்துக்கொள்ளவேண்டும். காலாகாலங்களில் நடந்தவைகளைக்கண்டு குறித்திருக்கிற சரித்திரங்களும் பரம்பரையாய் வந்த புராதனங்களுமே இவைகளுக்குப் போதுமான சாட்சிகள். ஆதியில் உலகத்தில் மனுஷர் உண்டாக்கப்பட்டபோது உலகஇயல் இன்னதென்று அவர்களுக்கு விளங்காது; ஆதியில் அறிந்துகொள்ளவேண்டியவைகளை வேதஅருளினால் அறிந்திருக்க வேண்டும், பூமியில் இன்ன இடத்தில் மனுஷன் உண்டாக்கப்பட்டான் என்றும் மனுஷர் முதல்முதல் குடியேறின இடம் இன்னதென்றும் பாரம்பரை வாக்கினாலே அறிந்திருக்க வேண்டும்.*

1. A miracle has reference to the course of Nature, and implies something different from it. But at first no course had been established; and so there is no other objection to miracles at that time than to any other fact.

* இந்த விஷயத்தைப்பற்றி இந்த நூல் பிறக்கிறதற்குப் பின்னுண்டான ஹூம் (Hume) என்னும், நாஸ்திகக்கொள்கையைக் கொண்டிருந்த, சாஸ்திரி ஒருவன் எழுதினதென்னவென்றால், "அற்புதமானது உலகஇயலை மீறுகிற விரோதமானகாரியம்; உலகஇயலுக்குரிய பிரமாணம் விகாரப்படாமல் ஒரே சீராய் நடந்தேறிவருகிறதென்பது நம்முடைய அநுபவத்திற்பட்டகாரியம்; இப்படியிருக்க, அற்புதமானது நம்முடைய அநுபவத்துக்கு விகாரப்பட்டதாயிருக்கிறது. உலகத்தில் நடக்கிற காரியங்களைச் சாட்சிகளுடைய உண்மையினால் உணர்ந்து அறிந்துகொள்ளுகிறோம்; அந்த சாட்சியும் அநுபவமும் விகாரப்படுகிறதுமுண்டு. இப்படியிருக்க விகாரப்படுகிற சாட்சியும் அநுபவமும் விகாரப்படாத சாட்சிக்கும் அநுபவத்துக்கும் அடங்கவேண்டியதாகை

உலகம் சிருஷ்டிக்கப்பட்டு மனுஷன் அதிலே உண்டாக்கப்பட்டபோது மேலானசக்தி விளங்கினது, அந்த சக்தி உலகஇயல் என்று சொல்லக்கூடாது. ஆதிசக்தி காரணமும், இயல் காரியமுமாயிருக்கிறது. ஆதியிலே விளங்கின சக்தி மனுஷன் உண்டாக்கப்பட்டபின்பு நின்றுபோகாமல் இன்னும் விளங்கி மனுஷனுக்கு வேதத்தையும் அநுக்கிரகித்திருக்கிறது. ஆதி சிருஷ்டி அற்புதமானால் வேதமும் அற்புதமென்றே சொல்லலாம். உலகரட்சகர் பூலோகத்தில் அவதரித்தபோது செய்த அற்புதங்கள் அதற்குமுன் அவர் உலகத்தைச் சிருஷ்டித்தபோது செய்த அற்புதங்களுக்குச் சம்பந்தப்பட்டிருக்கலாம். இப்படியிருக்க ஒப்புமைநியாயத்தினால் வேதமானது ஆதியில் மனுஷன் உண்டாக்கப்பட்டபோதே அருளப்பட்டதென்பதற்கு ஆட்சேபனையில்லை.

2. Or the argument may be put thus. The power exerted in creation (whether called miraculous or not) was different from what is exerted in the present course of Nature; and whether that power was exerted so as to give a revelation, is a question that affects the degree, not the kind of power put forth. If this power be called miraculous, then the presumption against the use of such a power to give a revelation, is even less.

மேலும் வைதீக தர்மமானது மனுஷருடைய சுயதோற்றமான புத்தியினால் உண்டாகாமல் வேதத்தினால் மனுஷருக்கு அருளப்பட்டதென்றே சகல தேசத்தாரின் பாரம்பரிய நியாயத்தினால் விளங்குகிறது. ஆதியில் ஓதப்பட்ட வைதீக தர்மம் சுத்தமாயிருந்ததென்று எச்சமயத்தாரும் ஒத்துக்கொள்ளுவார்கள். தர்மத்தை விளக்கும் வேத

3. Add, that from history it seems that religion was not first reasoned out, but revealed,—a fact that confirms natural religion, and may remove prejudices against subsequent communications.

---

*யால், அற்புதங்கள் நம்பப்படத்தக்கவைகள் அல்ல, பிறருடைய சாட்சியும் அதை உறுதிப்படுத்தமாட்டாது" என்று சொல்லியிருக்கிறான். இந்த நியாயத்தில் பல பிழைகளுண்டு. இதை எழுதினவன் உலகம் சிருஷ்டிக்கப்படாமல் மாயத்தோற்றமாயாவது தானாயாவது இருக்கிறதென்று சாதித்தான். அவனுடைய அபிப்பிராயத்தின்படி உலகமும் அதன் இயலும் ஒரு தோற்றமே ஒழிய வேறல்ல. "மீறுதல்" என்கிற பதம் மனதைப் பற்றுமேயல்லாமல் ஜடப்பொருளைப் பற்றாது. மேலும் ஒருவனுடைய அநுபவம் எல்லாருடைய அநுபவம்போலிராது. யாதொரு அற்புதத்தை ஒருபோதுங்காணாத மனுஷனுடைய அநுபவத்துக்கு அற்புதமானது "விரோதம்" என்று சொல்லக்கூடாது. இந்த நாஸ்திகனுடைய நியாயம் சரியானால், ஆதி சிருஷ்டியும் ஜலப்பிரளயமும் அபத்தமாகும். உலகஇயலுக்கும் அற்புதத்துக்கும் பேதமிருந்தாலும் விரோதம் இராது. அற்புதம் நமக்கு விளங்காத மேலானகாரியமாயிருக்கலாம்.*

மானது ஆதியிலே அருளப்பட்டதென்று விளங்குகிறபடியால் இயல்வேதத்தைப்பற்றி இந்த நூலின் முதல்பங்கில் கவனித்தோம். இயல்வேதம் அநுக்கிரகிக்கப்பட்டிருக்குமானால் அருள்வேதமும் அநுக்கிரகிக்கப்பட்டிருக்கலாமே.

C. Nor is there any presumption against miracles, or revelation as miraculous, after the course of Nature has been settled; for

உலகஇயல் ஏற்படுத்தப்பட்டு நடந்தேறிவரும்போது அற்புதங்கள் நடந்தேறிவாராதென்று ஒப்புமைநியாயத்தினால் சொல்லத்துணியலாகாது.

1. Generally, we need a second ruined world, from which to take the analogy; and, even from that case (a single one), our proofs would be precarious; and

ஒப்புமை நியாயத்தைக்கொண்டு ஒரு காரியத்தை ஸ்தாபிக்கவேண்டுமானால், ஒப்பிடுகிறதற்கு வேறொருபொருள் இருக்கவேண்டும். இவ்வுலகத்தைப் போன்ற வேறொரு பாவமுள்ள உலகம் இருந்தால் அந்த உலகத்தைக்கொண்டு இந்த உலகத்தின் இயலை உபமானித்து அறிந்துகொள்ளலாம்; அப்படியில்லாதபடியினால் இவ்வுலகத்தின் இயலை முற்றிலும் நாம் பகுத்தறியக்கூடாது; இருந்தாலும் ஒரு உபமானத்தினாலே மாத்திரம் ஒரு காரியத்தைத் தீர்மானம்பண்ணுகிறது சரியல்ல.

2. Particularly, though there be a presumption against miracles, yet,

(a) As, in common facts, even a small amount of proof in their favour may set aside the presumption against them.

(b) We know so little upon what the course of Nature depends, that we cannot say miracles are more improbable than many general facts.

சாதாரண காரியங்களும் விஷயங்களும் திருஷ்டாந்தப்படுமுன் நம்பப்படத்தக்கவைகளல்ல; திருஷ்டாந்தப்பட்டபின்போ அவைகள் நம்பப்படத்தக்கவைகளாகும். ராமன் என்னும் ஒரு வீரன் இருந்தான் என்பதற்குப்போதுமான அநுமான நியாயங்கள் இருந்தால் வேறே எதிர்நியாயங்கள் அவைகளை நிராகரிக்கமாட்டாது. பல சாட்சிகளினால் உறுதிப்படுகிற காரியம் சில சாட்சிகளினால் நிராகரிக்கப்படமாட்டாது. பலர் கண்டதையுங் கேட்டதையும் யாவரும் ஒத்துக்கொள்ளவேண்டியதே. உலகஇயல் இன்னின்

னகாரியங்களைப்பற்றி நடக்கிறதென்று நமக்குத் தெரியாத படியினால் ஆறாயிரம் வருஷகாலத்தில் பற்பலகாரியங்கள் அற்புதமாய் நடந்திருக்கலாம் என்று சொல்லலாமே.

(c) Looking at the religious interests of the race, we see reasons for them.

மேலும் மனுஷர்களுக்கடுத்த தர்மவிஷயத்தைக் கவனிக்கும்போது அந்த தர்மத்தை உறுதிப்படுத்த இயலுக்கு மேற்பட்ட அருளாகிய அற்புதம் அவசியம் வேண்டியதென்று விளங்கும்.

(d) Comparing them, as we ought, with extraordinary events (as comets, earth-quakes, cyclones &c) the presumption against them seems almost as unfounded as the presumption against these events.

கடைசியாக, அற்புதங்களை உலகத்தில் நடக்கிற மற்ற சாதாரண காரியங்களோடு ஒப்பிட்டுப் பார்க்காமல், உலகத்தில் நடக்கிற விசேஷித்த காரியங்களோடு ஒத்திட்டுப் பார்க்கவேண்டும். அற்புதமானது வால்நட்சத்திரம் பூகம்பம் பெருங்காற்று சண்டமாருதம் கடல்பெருக்கு முதலான விசேஷித்த காரியங்களோடு சம்பந்தப்பட்டிருக்கிறது. காந்தகவர்ச்சி மின்சாரம் புகைகப்பல் புகைவண்டி முதலான விசேஷித்த காரியங்கள் எல்லாருடைய புத்திக்கும் விளங்குங் காரியங்களல்ல, சிலருக்கு அவைகள் அற்புதங்களாய்த் தோன்றும். இவை முதலானவைகளை முற்றிலும் அறியாதவன் இவைகளைப் பற்றி ஆட்சேபிப்பது அற்புதத்தன்மையை அறியாதவன் செய்யும் ஆட்சேபனைக்குச் சமானமாயிருக்கும்.

D. Hence conclude.
1. That there is no such presumption against miracles as renders them incredible.
2. That, on the contrary, as there are reasons for them, there is a presumption in their favour; and
3. That, as compared with the extraor-

மேற்சொல்லிய நியாயங்களினால் முதலாவது, அற்புதங்கள் நம்பப்படத்தக்கதல்லவென்று சொல்லக்கூடாது; இரண்டாவது, அற்புதங்கள் நடக்கலாம் என்பதற்கு நியாயங்கள் இருக்கிறபடியால் அவைகள் நடந்திருக்குமென்றே ஒத்துக் கொள்ளவேண்டியது; மூன்றாவது, அற்புதங்கள் உலகஇயலில் நடக்கிற விசேஷித்த காரியங்களோடு ஒத்துப்பார்க்கும்

போது அவைகளைப்போல அற்புதங்களும் நடக்கலாமென்றே தீர்மானிக்கவேண்டியது என்று விளங்கும்.*

dinary facts of Nature, there is no peculiar presumption against them at all.

---

* அற்புதம் உண்மையாயிருக்குமென்பது அநுபவத்திற்கு விரோதம்; சாட்சி பொய்யாயிருக்குமென்பது அநுபவத்திற்கு விரோதமல்லவென்று ஹூம் சாஸ்திரி சொன்னான். அதாவது அற்புதம் என்பது மெய்யல்ல, மெய்யான அற்புதம் நடந்ததேயில்லையென்று சாதித்தான். இது எப்படியிருக்கிறதென்றால் செல்லாத ஈயப்பணம் அநேகம் வழங்குகிறபடியால் செல்லும் வெள்ளிப்பணம் இல்லவே இல்லையென்பதுபோலவும், சில மனுஷர் பொய்யரானபடியால் எப்படிப்பட்டவர்களாயினும் எல்லாரும் பொய்யரேயென்பதுபோலவும் இருக்கிறது. பூர்வத்திலிருந்த மனுஷர்கள் பூமி தட்டையாயிருந்து அசையாமல் நிற்கிறதென்றும் சூரியன் அதைச் சுற்றி ஓடுகிறதென்றும் நம்பினார்கள். சாஸ்திரிகள் ஆராய்ந்து பகுத்தறிந்து சாட்சியிட்டபோது அதைப் பொய்யென்று தள்ளினார்கள்: நம்முடைய அநுபவத்திற்குப்பட்டதைமாத்திரம் நாம் நம்பவேண்டியதானால் குளிரினால் தண்ணீர் கட்டிப்போகிறதைக் காணாதவன் அதை ஒருபோதும் ஆயிரம்பேர் சொன்னாலும் நம்பக்கூடாது. நம்முடைய மரணத்தை நாம் அநுபவிக்காதபடியினால் நாம் மரணமடைவோமென்பதை நாம் நம்பவேண்டியதில்லையே. சகல வியவகாரங்களும் உற்ற சாட்சிகளின் வாக்கினாலேயே விளங்கி உண்மைபெறும். கர்ப்பத்தில் உற்பத்தியாகிற பிள்ளையும் பிள்ளை பிறந்தபின் தாய்க்குப் பால்சரக்கிறதும் பிள்ளை அந்த முலைப்பாலை உண்கிறதும் ஒருவாறு அற்புதந்தானே. அற்புத சக்தியில்லாமல் கிறிஸ்துமார்க்கம் ஆதியில் பூமியிலே வேரூன்றி நிலைபெற்று ஓங்கியிருக்குமா? அப்போஸ்தலர் கண்டதையும் கேட்டதையும் குறித்துச் சாட்சிபகர்ந்து சத்தியத்தை நாட்டினார்கள். ஒருவனுடைய சாட்சி உத்தமசாட்சியென்பதற்கு நான்கு லட்சணங்கள் இருக்கவேண்டும்: முதலாவது, அவன் தர்மவானும் யதார்த்தவானும் தெளிந்த புத்திமானுமாயிருக்கவேண்டும். இரண்டாவது, அவன் கண்டதையும் கேட்டதையும் பற்றிய உண்மையை அறிந்துணர்ந்து சொல்லவேண்டும். மூன்றாவது, அவன் சொல்லுகிறகாரியத்தினால் அவனுக்கு யாதொரு நயமும் பிரயோஜனமும் உண்டாகாமல் யதார்த்தவாதி உலகவிரோதி என்கிற பழமொழிப்படி தன் சாட்சிக்காக நஷ்டமும் துன்பமும் படவேண்டும். நான்காவது, அவன் கண்டதையும் கேட்டதையும் ஒன்றும் சேர்க்காமலும் குறைக்காமலும் உள்ளபடி விபரமாயும் தெளிவாயும் சொல்லவேண்டும். தீர்க்கதரிசிகள் அப்போஸ்தலர் முதலானவர்கள் இப்படிப்பட்ட சாட்சிகளாயிருந்தார்கள். "நிறைமொழிமாந்தர் பெருமைநிலத்து மறைமொழிகாட்டிவிடும்." தேவன் உண்டென்போர் அற்புதமுண்டென்று ஒத்துக்கொள்ளவேண்டியதே. சர்வவல்லமையும் சர்வஞானமுமுள்ள சிருஷ்டிதிதி சங்கார கர்த்தர் ஒருவர் இருப்பாரானால், "அவரால் கூடாதகாரியம் ஒன்றுமில்லை." தனக்குவமையில்லாத அவரும் அவருடைய ஒப்பற்ற செயல்களும் நம்முடைய மனோவாக்குக்கெட்டாத அற்புதங்களே. தான் அசையாது ஒன்றும் அசையாது. அவர் செய்யும் அற்புதங்கள் தாம் நியமித்த இயலுக்கு விரோதமாயிராமல் சாதாரண இயலுக்கு மேற்பட்ட இயலாகவே இருக்கும். காட்டுமாமரத்தில் நல்லமரத்தின் கிளையை ஒட்டவைத்து அதின் கெட்ட சுபாவத்தை நல்லதாக மாற்றுவதும், வியாதிக்கு அவிழ்தங்கொடுத்து சொஸ்தப்படுத்துவதும் இயலுக்கு விரோதமாயிராமல் இயலுக்கு இசைந்திருப்பதுபோல, கெட்டவன் குணப்பட்டு நல்லவனாகிறதும், பாவஜன்மத்தில் பிறந்தவன் புண்ணியஜன்மத்தில் பிறப்பதும் இயலுக்கு விரோதமாயிராமல் இயலுக்கு இசைந்திருக்கும்.

"It is contrary to experience that a miracle should be true, but not contrary to experience that testimony should be false." Hume.

If so, as there is false leaden coin in circulation, there can be no true silver coin existing; as some men are liars all men are liars.

Some from want of experience could say there is no such thing as ice, and others who have not experienced death that there is no such thing as death.

There are four circumstances which never fail to give credibility to a witness, whether he depose to any thing orally or in writing: .

1. That he is a person of virtuous and sober character.

2. That he was in circumstances certainly to know the truth of what he relates.

3. That he has no interest in making good the story.

4. That his account is circumstantial.

The usual character of human testimony is substantial truth under circumstantial variety.

## CHAPTER III.

*Of our incapacity of judging what were to be expected in a Revelation; and the Credibility, from Analogy, that it must contain things appearing liable to objections.*

## 3-ம் அதிகாரம்.

**அருள்வேதத்தில் இன்னின்னகாரியங்கள் வெளிப்பட்டிருக்கும் என்று நாம் முன்னர் கருதி நிதானிக்கத் திராணியுள்ளவர்கள் அல்லவென்றும், அதில் மனுஷருடைய புத்திக்கெட்டாத அநேக காரியங்கள் வெளிப்பட்டிருக்குமென்றும், அவைகள் சந்தேகத்துக்கும் ஆட்சேபனைக்கும் இடங்கொடுக்கும் என்றும் ஒப்புமைநியாயத்தினால் விளங்குமென்பது.**

The objection to Christianity, as miraculous, has been already considered (ch. ii.). Other objections against its deficiencies, its doctrine of redemption, its want of universality, its evidences, are considered hereafter. In this chapter, objections against Christianity as a scheme (not against its evidence), are shown to be frivolous. It is probable from analogy, that Christianity will contain much that is different *from our expectations* (or anticipations) and therefore *objectionable*.

*கிறிஸ்துமார்க்கத்தின் அத்தாட்சியைப்பற்றிச் சொல்லப்படும் ஆட்சேபனைகளைத்தவிர அதின் தன்மையைப் பற்றியும் அதின் கொள்கைகளைப்பற்றியும் பல ஆட்சேபனைகள் சொல்லப்படும். கிறிஸ்துமார்க்கம் உண்டான வழிவகையையும், அதில் கண்டிருக்கிற பற்பல விஷயங்களையும் பற்றி மாத்திரமல்ல, மனுஷர் யுக்தியின்படி கண்டிருக்கவேண்டிய பலவிஷயங்கள் அதில் கண்டிராததைப் பற்றியும், அதில் கண்டிருக்கிற சில விஷயங்கள் உலக வழக்கங்களுக்கு விரோதமாயிருந்தும் மனிதருக்குப் பயித்தியமாய்த் தோன்றுகிறதைப்பற்றியும், அதிலுள்ள சில விஷயங்கள் மருளையும் வீண்வைராக்கியத்தையும் உண்டுபண்ணி, பல இடையூறுகளுக்கும் துன்பங்களுக்கும் ஏதுவாயிருக்கிற*

தைப்பற்றியும், அது நடுவாந்தரத்திலுண்டாகி எங்கும் யாவருக்கும் ஒரேகாலத்தில் பிரசித்தப்படாதிருப்பதைப்பற்றியும்,* பிரத்தியட்சமாயும் யாவரும் ஒப்புக்கொள்ளத்தக்கவிதமாயும் விளங்காததினால் அதற்குரிய அத்தாட்சிகள் போதுமான பூரண அத்தாட்சிகளாயும் அங்கீகாரத்துக்குரியவைகளாயுமிருக்கவில்லையென்பதைப்பற்றியும் பல ஆட்சேபனைகள் சொல்லப்படுகிறதுண்டு. மேலும் வேதவாக்கியங்கள் இலக்கண இலக்கிய விதிகளுக்கேற்ற சிறந்த செய்யுள்நடையின்படி கட்டுரையாய் எழுதப்படாமல் நாடோடியபாஷையிலும் சாதாரண நடையிலும் எழுதப்பட்டிருப்பதையும் ஒரு குற்றமாகப் பாவித்து ஆட்சேபனையாகச் சொல்லுகிறவர்களுமுண்டு. தீர்க்கதரிசன ஆகமங்களிலுள்ள உருவகமும் பாவனையுமான சில விஷயங்களின் உட்கருத்தையும் பொருளையும் பயனையும் அறியாமல் அந்த வாக்கியங்களைப்பற்றிச் சிலர் ஆட்சேபனை செய்கிறதுமுண்டு. இவ்விதமான ஆட்சேபனைகளைப்பற்றி இனிவரும் அதிகாரங்களில் விபரமாய்க் கவனிப்போம். இந்த அதிகாரத்தில் இவ்விதமான ஆட்சேபனைகளைப்பற்றிப் பொதுவான சிலகாரியங்களைக் கவனிப்போம். அதென்னவென்றால், வேதமானது கடவுளால் மனுஷர்களுக்கு அருளப்படுமானால் அதில் நம்முடைய புத்திக்கெட்டாத சில விஷயங்கள் அடங்கியிருக்குமென்றும், அவைகள் நம்முடைய சொற்பபுத்திக்கு விகாரமாய்த் தோன்றி ஆட்சேபனைகளுக்கு இடங்கொடுக்குமென்றும், அவ்வித ஆட்சேபனைகளை நம்முடைய சயபுத்தியினால் நாம் சிக்கறுக்கத்துணியாமல் உலக இயலில் விளங்கும் ஒப்புமையியாயத்தினால் சிக்கறுத்து அறியவேண்டுமென்றும் இந்த அதிகாரத்தில் கவனிக்கவேண்டியது. கிறிஸ்துமார்க்கம் தேவனால் அருளப்பட்ட மார்க்கம் என்பதைப்பற்றிய அத்தாட்சிகளைக் குறித்துச் சொல்லப்படும் ஆட்சேபனைகள் நியாயமானபடி கவனிக்கப்படத்தக்கவைகளாகிலும், கிறிஸ்துமார்க்கத்தின் பொருளையும் நடையையும்

* 1. Cor. 1. 27.

உபதேசங்களையும் குறித்துச் சொல்லப்படும் ஆட்சேபனைக் களைக் கவனிக்க நாம் தகுதியும் திறமையும் உள்ளவர்களல்ல. கிறிஸ்துமார்க்கம் கடவுளால் அருளப்பட்டதா? அல்லவா? என் பதைக்குறித்து உண்டாயிருக்கிற அத்தாட்சிகளைப் பற்றிச் சொல்லிய ஆட்சேபனைகளை நாம் கவனித்து அறியவேண்டி யது அவசியமே. கிறிஸ்துமார்க்கத்தில் அடங்கிய உபதேசங்க ளையும் கொள்கைகளையும் பற்றிய ஆட்சேபனைகளைக் கவனிப் பது அவசியமல்ல; அது நம்முடைய சிற்றறிவுக்கு மேற்பட்ட தாகையால் அதைப்பற்றி ஆட்சேபிப்பது வீணும் விருதாவுமா யிருக்கும். தேவசாயலில் உண்டாக்கப்பட்டிருக்கிற மனுஷரு டைய புத்தியை அற்பமாய் எண்ணிப் பேசத்துணியோம். புத் தியினாலேயே வேதத்தின் உண்மையைப் பகுத்தறிகிறோம். "எல்லாவற்றையும் சோதித்துப்பார்த்து, நலமானதைப் பிடித் துக்கொள்ளுங்கள்," என்று வேதமே சொல்லுகிறது.* நீதிநெ றிக்கு நேர்விரோதமான காரியங்களும் புத்திக்கு முழுவிகற்ப மான காரியங்களும் யாதொரு வேதத்தில் பிரத்தியட்சமாய்க் காணப்படுமானால் அவைகள் அபத்தமான காரியங்களென்று தீர்மானிக்கப்பட்டு, அந்த வேதம் அங்கிகாரத்துக்குத் தகாததா யிருக்கும். என்றாலும் கிறிஸ்துமார்க்கத்தின் உபதேசங்க ளுக்கு விரோதமாய்ச் சொல்லப்படும் வீணான அற்ப ஆட்சே பனைகளுக்கும், அது தேவனால் அருளப்பட்டது என்று ரூப காரப்படுத்தும் அதன் அத்தாட்சிக்கு விரோதமாய்ச் சொல் லப்படும் ஆட்சேபனைக்கும் வெகு வித்தியாசமுண்டு. நம் முடைய புத்தியினால் வேதஅத்தாட்சிகளின் உண்மையை விசாரித்தறியலாமே ஒழிய வேதஉபதேசத்தின் உண்மையை விசாரித்தறியக்கூடாது. இவை இரண்டையும் பகுத்தறிந்து வேதம் கடவுளால் அருளப்பட்டதென்பதைப் பற்றிய அத்தா ட்சிகளை இந்த அதிகாரத்தில் கவனமாய் விசாரித்தால் அதின் உண்மை விளங்கும்.

---

* 1 தெச. 5: 21.

நம்முடைய புத்திக்கும் அநுபவத்துக்கும் தோன்றுகிறபடி, உலகஇயலில் விளங்குகிற பிரமாணங்களினாலேயே கடவுளானவர் உலகத்தை ஆண்டு நடத்தி, தம்முடைய சிருஷ்டிகளாகிய மனுஷருக்குப் போதித்து வருகிறதுபோலவே, தம்முடைய திருவருளினாலும் உலகத்தை ஆண்டு நடத்தித் தம்முடைய சிருஷ்டிகளாகிய மனுஷருக்குப் போதித்து வருகிறாரென்று வேதம் சாட்சியிடுகிறது. தேவன் தமது ஆளுகையைப்பற்றி உலகஇயலில் விளங்காதகாரியங்களை வேதஅருளினால் விளங்கப்பண்ணி சாதாரணமாய் அறிந்துகொள்ளக் கூடாதகாரியங்களை வேதத்தினால் தெரியப்படுத்தி, எளிதில் அறிந்துகொள்ளக்கூடிய காரியங்களை வேதத்தினாலேயே வெளிப்படுத்தி உறுதிப்படுத்தின காரியங்களின் உண்மையை அற்புதசெயல்களினால் திருஷ்டாந்தப்படுத்தியிருக்கிறார். உலகஇயலும் வேதஅருளும் கடவுளாலே உண்டாயிருந்து, ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டு ஒன்றுக்கொன்று சாட்சியிட்டு, ஒரே தெய்வ ஆளுகை உண்டென்று விளக்கும். உலகஇயலில் விளங்கும் காரியங்களையே முற்றிலும் அறிந்துகொள்ளக்கூடாத நாம், வேதஅருளில் விளங்குங்காரியங்களை முற்றிலும் அறிந்துகொள்ளக்கூடுமோ? போதுமான அறிவும் அநுபவமும் இல்லாதவர்களுக்கு உலகஇயலில் விளங்கிய அநேக காரியங்கள் விகற்பமாய்த் தோன்றினாலும் போதுமான அறிவும் ஆராய்ச்சியும் அநுபவமுமுள்ளவர்களுக்கு அந்த விகற்பந்தோன்றாமல் எல்லாம் தெளிவாய்த் தோன்றும்.

A. Apply the first part of this statement to Christianity, as a whole. It is likely to contain much that is different from our expectations.

1. In Nature we find that God rules and instructs according to certain laws: In Scripture we are told new truths connected with His government; and these two make together one scheme of Providence.

சாதாரணமான உலகஇயலுக்கு மேற்பட்ட காரியங்கள் நம்முடைய புத்திக்கெட்டாதவைகளானபடியால், அவைகளைப் பகுத்தறிய நம்மால் இயலாது. விவேகமுள்ள ஒரு

2. We are, in fact, incompetent judges of Nature, as has been shown—It is

therefore, probable that we shall be incompetent judges of Scripture. Both are likely to appear objectionable.

ராஜன் தன் ராஜ்யத்தை ஆண்டு நடத்தும் சாதாரண பொதுவிதிகளையே அறியாத குடிகள், அந்த ராஜா நவமான சிறந்த விதிகளைக்கொண்டு தன் ராஜ்யத்தை ஆள நேரிடும்போது, அந்தக் குடிகள் அந்தச் சிறந்த விதிகளை எளிதில் அறியக்கூடுவதெப்படி? அப்படியே உலகஇயலுக்கு மேற்பட்ட வேதஅருளைக் கடவுள் அநுக்கிரகிக்கும்போது, அந்த வேதத்தின் தன்மையையும் பொருளையும், அது அருளப்பட்ட வழிவகையையும் மனுமக்கள் எளிதில் அறிந்துகொள்வதெப்படி? ஆதலால் ஆய்ந்தோய்ந்து அறிவில் தேருமலும் அநுபவம் இல்லாமலும் ஒப்புமைநியாயத்தைக் கையாடாமலும் உலகஇயலையும் வேதஅருளையும் அறிந்துகொள்ளக்கூடாது. இரண்டும் நம்முடைய சிற்றறிவுக்கு விகாரமாய்த் தோன்றுகிறபடியால் ஆட்சேபனைக்கு இடங்கொடுக்கும்.

மேற்சொல்லிய நியாயங்கள் கிறிஸ்துமார்க்கம் முழுமையும் பற்றும்; அந்தமார்க்கம் வரிவேதமாக அருளப்பட்டிருப்பதை விசேஷமாய்ப் பற்றும். தேவஆவியின் ஏவுதலினால் வேதம் எழுதப்பட்டிருக்கிறது. கடவுள் நமக்குத் தம்முடைய திருவுளத்தை வேதத்தின் வழியாய் அருளிச்செய்யும்போது, இன்னின்ன பிரகாரமாய் வரிவடிவினாலோ ஒலிவடிவினாலோ, முற்றும் ஒரேவேளையிலோ பங்குபங்காக நாளடவிலோ, உயர்ந்த இலக்கண நடையினாலோ சாதாரண நாடோடி நடையினாலோ, இன்னின்ன வழிவகையினால் வேதத்தை நமக்கு அருளிச்செய்வாரென்று முன்னமே நாம் தீர்மானிக்க நமக்குச் சக்தியும் ஏதுவுமில்லை.

B. Apply this statement to instruction by *inspiration*. It is likely to differ from what we expect.

In the case of natural religion, we know not before experience, by what laws or means, or to what degree, or by what evidence, or in what mode, or even through what faculty it will be imparted. So in what is revealed.

(a) தேவன் மனுஷருக்கு இயற்கைஅறிவை அருளும்போது அவனவன் புத்திக்கும் அநுபவத்துக்கும் ஏற்றபடி இன்னின்ன பொருளை இன்

Natural Instruction.

னின்ன விதமாய் அருளுவாரென்றும், (b) அவர் அருளும் அறிவை மனுஷர் மற்றவர்களுக்கும் பின்னடியாருக்கும் எவ் விதமாய் வெளிப்படுத்துவார்களென்றும், (c) அவர்கள் வெளிப்படுத்தும் காரியம் மற்றவர்களுக்கு எளிதாயும் சந்தேகமின்றிப் பிரத்தியட்சமாயும் விளங்குமோ விளங்காதோ என்றும், (d) அறிவுக்குரிய பலவிஷயங்களின் பொருளும் உண்மையும் எல்லாருடைய மனதுக்கும் புத்திக்கும் வித்தியாசமின்றி எக்காலத்திலும் பிரத்தியட்சமாய் விளங்குமோ விளங்காதோ என்றும், (e) மனுஷர் அறிவில் தேறுவது கொஞ்சங் கொஞ்சமாயும் படிப்படியாயுமோ அல்லது ஒருமிக்க உடனேதானோ என்றும் மனுஷருக்கு முன்னர் விளங்காததுபோலவே,

Supernatural Instruction.

தேவன் மனுஷருக்கு வேதத்தை அருளும்போது (a) இன்னின்ன நூதனமான விஷயங்களை அருளுவாரென்றும், (b) வேதத்தை நேராய் அவரிடத்தில் பெற்றுக்கொள்ளுகிறவர்கள் அதை மற்றவர்களுக்கு ஒலிவடிவாயும் வரிவடிவாயும் அறிவித்து வெளிப்படுத்தும்படி அவர்களுக்கு அற்புதவரத்தை அளித்து வேதத்தின் உண்மையை விளங்கப்பண்ணி, வேதசத்தியம் பின்னடியார் யாவருக்கும் எட்டும்படி இன்னின்ன பிரயத்தனங்களைச் செய்வாரென்றும், (c) அதின் அத்தாட்சி யாவருக்கும் எளிதில் விளங்குமோ விளங்காதோ என்றும், (d) அது யாவருக்கும் பொதுப்பட பலிக்குமோ பலிக்காதோ என்றும், (e) அது ஒரேமுறையாக ஏககாலத்திலோ படிப்படியாகவோ எப்படி வெளிப்படுத்தப்படும் என்றும் நாம் நம்முடைய சுயபுத்தியினால் முன்னர் அறிந்து தீர்மானிக்கக்கூடாது.

ஆகையால் கடவுள் தம்முடைய திருவுளமாகிய வேதத்தை ஒலிவடிவினாலோ வரிவடிவினாலோ எவ்விதமாய் அருளச் சித்தங்கொள்ளுகிறாரோ அதை நாம் அங்கிகாரம்பண்ணுவதே நம்முடைய சிற்றறிவுக்கு ஏற்றதும் நம்முடைய கடமையுமாயிருக்கிறது.

காரியம் இப்படியிருக்கிறபடியால், கிறிஸ்துமார்க்கம் நம்முடைய உள்ளத்துக்கும் சுயத்தோற்றத்துக்கும் ஏற்றபடியிருக்கிறதோ இல்லையோ என்று கவனிக்கிறது வியர்த்தம். அது தேவ திருவுளத்துக்கும் கடவுளுடைய தோற்றத்துக்கும் ஏற்றபடியிருக்கும் என்று கருதுவதே யதார்த்தம். அது சிற்றறிவாளருடைய மனதிலிருந்து தோன்றி பொய்ப்பொருள் அடங்கியதோ பேரறிவாளருடைய திருவுளத்திலிருந்து தோன்றி மெய்ப்பொருள் அடங்கியதோ என்று கவனமாய் விசாரித்து, அது மெய்ப்பொருள் அடங்கியதானால் அங்கிகரித்துக்கொள்வதே மனுஷர்களுக்குரிய கடமை.

C. Hence the following conclusions:
1. As to Christianity as a whole, we are incompetent judges of what may be expected in a revelation. Therefore, the only question is, whether Christianity is a *real revelation;* not whether it is what we expect it to be. The only valid objection to it, if there be any, is against its evidence.

வேதத்திலுள்ள கருதலான வாக்கியங்கள், நாடோடிய பாஷை நடை,* சில வாக்கியங்களின் வெவ்வேறான பாடபேதங்கள், பற்பல வியாக்கியான பேதங்கள், வேதத்திலுள்ள சில ஆகமங்களை எழுதின கிரந்தகர்த்தாக்கள் இன்னின்னாரென்பதைப்பற்றிய விகற்பமான எண்ணங்கள், இவை முதலானவைகளைப்பற்றிய ஆட்சேபனைகள் வேத உண்மையையும் அதிகாரத்தையும் நிராகரிக்கமாட்டாது. மேலும் தீர்க்கதரிசிகளாவது அப்போஸ்தலர்களாவது நம்முடைய ஆண்டவராவது வேதத்தில் இவ்விதமான ஆட்சேபனைகளுக்கு இடமிராது என்று சொல்லவில்லை. வேதத்திலுள்ள தர்மத்தையும் நீதியையும் பற்றி ஆட்சேபனைசொல்லவும் இடமில்லை. வேதத்தை உறுதிப்படுத்தி ஸ்தாபிக்கும்படி நடந்த திவ்விய

2. As to the way in which its instruction is given, the only question is, whether it is a *Divine Book,* not whether it is such or such a book.—For deficient style, or deficient evidence of genuineness, or various readings in the text, are no proofs against it, unless it was promised that a Divine revelation should be free from those presumed difficulties. And . .

* தகப்பன் தன் பிள்ளைகளுக்கு எழுதுகிற நிருபம் எளிதில் விளங்கத்தக்க பாஷை நடையில் எழுதப்படும். பொன்னுக்கு முலாம்பூசவேண்டியதில்லை, கண்ணுக்கு ஆபரணம் அணிய வேண்டியதில்லை; "யார், அழகுக்கு அழகுசெய்வார்?"

மான அற்புதங்கள், பின்வரும் காரியங்களை முன்னதாகக் கண்டிருக்கிற மனுஷர் மனோவாக்குக்கு எட்டாத தீர்க்கதரிசனங்கள் ஆகிய இவைகளைப்பற்றி நிராகரிக்கக்கூடாத ஆட்சேபனைகள் சொல்லக்கூடுமானால் வேதம் உண்மை என்கிற அத்தாட்சி விளங்காது; அதின் அதிகாரத்துக்குப் பின்னமுண்டாகும். மற்றப்படி வேதமானது உள்ளபடி மன்னுயிர் நம்பிக்கைக்கும் நடக்கைக்கும் இம்மை மறுமைக்குரிய வாழ்வுக்கும் சுகத்துக்கும் ஆதாரம் என்றே ஒப்புக்கொள்ளவேண்டும்.

மேலும், மற்ற நூல்களைச் சாதாரணமாய் வியாக்கியானம் பண்ணி பகுத்தறிவதுபோல் வேதநூலை வியாக்கியானம்பண்ணிப் பகுத்தறியக்கூடாதென்று வேதநூலை நன்றாய் ஆராய்ச்சிசெய்து அதின் நடையையும் பொருளையும் அறிந்தவர்கள் ஒப்புக்கொள்வார்கள். விசேஷமாய் வேதத்திலுள்ள பரமரகசியமான உபதேசங்களையும் மனுஷர் புத்திக்கெட்டாத தீர்க்கதரிசன வாக்கியங்களையும் மனுஷர் செய்யும் மற்ற நூல்களுக்கடுத்த விதிகளினால் வியாக்கியானம் பண்ணக்கூடாது. "திருவாக்குக்கு எதிர்வாக்கில்லை." *

3. As to interpretation, we must accept that meaning which seems the true one, and not raise any objection that it is less clearly expressed than we hoped.

வேதத்தில் அடங்கியிருந்தும், நமக்கு விரோதமாய்த் தோன்றுகிற அசாத்தியங்கள் புறம்பான அத்தாட்சிகளை நிராகரிக்கும் என்று சிலர் ஆட்சேபனை சொன்னாலும், வேதவிஷயத்தில் இந்த ஆட்சேபனை உதவாது. கண்டறியாத காரியத்தைக் கண்டறிந்தவர்களின் சாட்சியினால் ஒத்துக்கொள்ளுகிறது சகஜம். அநுபவமில்லாதவர்களுக்கு அசாத்தியமாய்த் தோன்றுகிறவைகள் அநுபவசாலிகளுக்குச் சாத்தியமாய்த் தோன்றுவதும் சகஜமே.

*Obj.* To these conclusions, it may be objected, that internal improbabilities (that is, things contrary to expectation) weaken external probable proof.—True. But, as has been seen, real internal improbabilities are overcome by the most common testimony—And, in revelation, we scarcely know what improbabilities are.

* சூரியனைச் சூரியனுடைய வெளிச்சத்தினாலேயே காண்பதுபோல வேதப்பொருளை வேத வெளிச்சத்தினாலேயே கண்டறியவேண்டும். எல்லா நூல்களுக்கும் இலக்கிய இலக்கண விதிகள் ஒன்றேயானாலும் அருள்வேதத்தின் தத்துவார்த்தத்தை தேவ அருளைக்கொண்டே அறியவேண்டும். வேத வியாக்கியானத்தைப்பற்றி சில விபரங்களை அறியவேண்டுமானால் பிரசங்க புத்தாவளியிலுள்ள பிரமாணத்தைக் காண்க.

மேலும், வேதத்தில்- சந்தேகத்துக்குரியவைகளாய்த் தோன்றுகிற காரியங்களைக்குறித்து மனுஷர் தங்கள் சொற்பபுத்தியினால் செய்யும் ஆட்சேபனைகள் உதவாதென்பதைப்பற்றி இன்னும் சற்று விபரமாய்க் கவனித்துப் பார்ப்போமாக. உலகஇயலுக்குரிய காரியங்களை ஒப்புமைநியாயத்தினால் கவனிக்கும்போது நேர்மையான அநேக காரியங்கள் எதிரிடையாய்த் தோன்றி அநுபவத்தினால் பகுத்தறியாதவர்களுக்கு விரோதமாக விளங்கி ஆட்சேபனைக்கு இடங்கொடுக்கும்: எப்படியெனில்,

D. To expand this statement, and explain the second part of the statement made at the outset, that revelation is likely to contain much that appears *objectionable*, note

கடவுள் புத்தியில்லாத மிருகஜீவன்களுக்குக் கொடுத்திருக்கிற இயற்கை அறிவானது புத்தியுள்ள நரஜீவன்களுக்குக் கொடுத்திருக்கிற செயற்கை அறிவிலும் சில விஷயங்களில் விசேஷித்திருக்கக் காண்கிறோம். மனுஷர் பிரயாசையோடு நாளடைவில் கற்றறிய வேண்டியவைகளை சில மிருகங்களும் பட்சிகளும் ஒரு நொடியில் இயல்பாய் அறிந்துகொள்ளுகிறது.

1. That the instruction given to men and brutes respectively, is very objectionable in its limits, thus : it is objectionable

(*a*) மனுஷர் பூமியிலுள்ள சத்துப்பொருள் சித்துப்பொருள் முதலானவைகளின் தன்மையையும், அவைகளுக்குரிய பிரமாணங்களையும், வானத்திலுள்ள சந்திரசூரிய நட்சத்திர கிரகங்கள்முதலானவைகளுக்குரிய விதிகளையும் நடைகளையும் எளிதில் அறிந்து, கிராணமுதலானவைகளைக் கணித்துச் சொல்லக்கூடியவர்களாயிருந்தும், தங்கள் சொந்த சரீரத்தில் பிறந்து கொல்லும் வியாதிகளை நீக்கும் அவிழ்தங்களையும், நரஜீவ சுகத்துக்குரிய மற்ற எத்தனங்களையும் எளிதில் ஏற்கனவே அறிந்துகொள்ளக் கூடாதிருக்கிறதென்ன?

(*a*) That we should be instructed in the laws of matter more easily and truly than in the cure of diseases.

(*b*) மனுஷர் வெகுகாலம் கண்டறியாதிருந்த அச்செழுத்து, புகையந்திரம்,

(*b*) That we discover, as by accident,

மின்தாதுசூத்திரம் முதலானவைகள் தற்செயலாய் நவோந்தரமாகிய இக்காலத்தில் கண்டறியப்படுகிறதென்ன?

what years of inquiry fail to attain.

(c) நாம் பேசுகிற பாஷை சில விஷயங்களில் நம்முடைய கருத்தைப் பூரணமாய் வெளிப்படுத்தக்கூடாததும், கருதலானதும், இருபொருட்பயனுள்ளதும், மலைவானதும் தப்பிதத்துக்கேதுவுள்ளதுமாயிருக்கிறதென்ன?

(c) That language is liable to infinite abuse; and is, at best, ambiguous.

(d) புத்தியும் பேச்சுமில்லாத மிருகங்கள் சில விஷயங்களில் மனுஷரைப்பார்க்கிலும் அதிக நுண்ணறிவும் முன்னறிவும் பாராட்டி நடந்துகொள்ளுகிறதென்ன? இவைமுதலானவைகளைப்பற்றி ஆட்சேபனைகள் செய்ய வேண்டுமானல் செய்யலாமே.

(d) That brute instinct is often more skilful than human prudence.

அப்படியே கடவுள் நமக்கு அருள்செய்யும் வேதத்திலும் நாம் அநுபவசாலிகளாகும் முன்னமே பகுத்தறியக்கூடாத பல விஷயங்களைக் குறித்து சந்தேகித்து ஆட்சேபிக்கிறதற்கு இடமிருக்கலாம். ஆனலும் உலகஇயலிலுள்ளவைகளைக்குறித்து ஆட்சேபனைகளுக்கு இடமிருக்கிறதுபோலவே, வேதஅருளிலுள்ளவைகளைக்குறித்தும் ஆட்சேபனைகளுக்கு இடமிருக்கும். ஒப்புமையியாயத்தினல் இதின் உண்மை விளங்கும். சத்தியவேதமாகிய கிறிஸ்துமார்க்கத்தைப்பற்றிச் சொல்லக்கூடிய ஆட்சேபனைகள், கடவுள் அமைத்த உலகஇயலைப்பற்றியும் சொல்லக்கூடியதாகையால், இவ்விரண்டிற்குமுரிய ஆட்சேபனைகளுக்கு அடுத்த சமாதானங்கள் புத்திமான்களாகிய அநுபவசாலிகளுக்கு விளங்கும்.

2. So is revealed instruction (Christianity) likely to be liable to similar objections, as to its character and degrees. Nor are these objections more numerous than we might expect them to be.

வேதத்தில் கண்டிருக்கிறபடி ஆதி கிறிஸ்தவர்களுக்குள் சிலர் பலபாஷைகளைப் பேசும் அற்புத வரத்தைப் பெற்றி

E. Apply this reason to a particular case, to see more clearly its force and

applicability. It is said, the gifts in the apostolic age were not miraculous, because not used in an orderly manner. To which, answer.

ருந்தும், அந்த வரத்தை அவர்கள் தகுந்த படி கையாடாமல் தகாதபடிக் கையாடி சபையில் தாறுமாறை வருவித்தபடியால் அவைகள் சரியான அற்புதம் அல்லவென்று சிலர் ஆட்சேபிப்பார்கள்.*

1. Those who used them had power over them; and the use of them depended, as might be expected, on the prudence or imprudence of the possessor. So they are like other gifts; and, if it be said that these gifts should have been given only to the prudent, or that prudence ought to have been added to the gift, or that God should have interposed. Answer.

ஒரு பாஷையைப் பிரயாசப்பட்டுக் கற்கிறவர்கள் அதைத் தகுந்தபடிப் பிரயோகப்படுத்தக்கூடியவர்களாயிருந்தும், அதைத் தகாதபடிப் பிரயோகப்படுத்தவும் கூடியவர்களாயிருக்கிறதுபோலவே, பலபாஷைகளைப் பேசும் ஆவியின் வரத்தைப் பெற்றவர்கள் அதைத் தகுந்தபடிப் பிரயோகப்படுத்தக்கூடியவர்களாயிருந்தும் அதைத் தகாதபடிப் பிரயோகப்படுத்தவும் கூடியவர்களாயிருக்கலாம். அவர்கள் தகாதபடி அந்த வரத்தைப் பிரயோகப்படுத்தினபடியால் கடிந்துகொள்ளப்பட்டார்கள். விவேகமும் அடக்கமும் இல்லாதவர்கள் இயற்கையான காரியங்களில் எப்படி அவிவேகமாய் அடங்காமல் நடக்கிறார்களோ, அப்படியே வரப்பிரசாதிகளும் தாங்கள் கொண்டிருக்கும் வரப்பிரசாதத்தைப் பிரயோகப்படுத்தும்போது அவிவேகமாய் அடங்காமல் பிரயோகப்படுத்தவுங்கூடும்.

2. We cannot judge what ought to have been the degree of the gift; nor are gifts generally given in Nature according to the prudence of those who own them. Nor is instruction generally given in common life, in such

ஞாபகசக்தி, சாதுரியம், புலமை, பாண்டித்தியம் முதலிய சாதாரண வரங்கள் அவைகளைத் தகுதியாய்ப் பிரயோகப்படுத்தும் விவேகிகளுக்குமாத்திரமல்ல, அவைகளைத் தகாதவிதமாய்ப் பிரயோகப்படுத்தும் அவிவேகிகளுக்கும் கொடுக்கப்பட்டிருக்கக் காண்கிறோம். அப்படியே ஞானவிஷயங்களிலும் நடக்கிறதென்று ஒப்புமை

* 1 Cor. 12. 1—11. சாஸ்த.

நியாயத்தினால் விளங்கும். முதிர்வயதில் உதவத்தக்க படிப்பும் கல்வியும் கிட்சையும் இளவயதில் கொடுக்கப்படாததால் அநேகர் கெட்டுப்போகிறது இந்த நியாயத்தை விளக்குவிக்கும்.

forms only as best commend it to us.

F. மற்றக்காரியங்களிலும் உலகஇயலினால் உண்டாகிற அறிவுக்கும் வேதஅருளினால் உண்டாகிற அறிவுக்கும் சம்பந்தங் காணலாம்; எப்படியெனில், இல்லறத்துக்கும் உலக வாழ்வுக்கும் அடுத்த வழக்கமான காரியங்கள் யாவரும் அறிந்துகொள்ளத்தக்கதாய் எளிதில் தெளிவாய் விளங்குகிறது போல, வேதத்தில் விசுவாசத்துக்கும் நல்லொழுக்கத்துக்குமுரிய பக்திவிஷயத்துக் கடுத்த சாதாரண காரியங்களும் யாவரும் எளிதில் அறிந்துகொள்ளத்தக்கதாயும் தெளிவாயும் விளங்கும்.

F. The analogy between the natural and revealed methods of instruction, may be further applied.

1. In Nature, practical rules of conduct are generally plain. So are the faith and behaviour of practical Christianity.

உலகவிஷயங்களுக்கடுத்த சில நுட்பமான காரியங்களை அறிந்துகொள்ள அதிகப் படிப்பும் கவனமும் வேண்டியது போலவே, வேதவிஷயங்களுக்கடுத்த சில நுட்பமான காரியங்களை அறிந்துகொள்ளவும் அதிகப் படிப்பும் கவனமும் வேண்டியது. நுண்ணறிவு முயற்சியினால் பூரணப்படும்.*

2. In Nature, exact thought is sometimes required for the study of parts; so in the study of parts of Scripture.

கல்வியினால் உண்டாகிற அறிவைத் தடுக்கிற விக்கினங்கள் வேதத்தினால் உண்டாகிற அறிவையும் தடுக்கும். உலகஇயலில் இன்னும் அறியப்படாத காரியங்களை நாளடைவில் படிப்படியாய் அறிந்துகொள்ளுகிறதுபோல,

3. Progress in each department is hindered by the same, or similar causes.

* Heb. 6. 1, 2. "Going on unto perfection, is the only development allowed by Christianity. Scripture is yet to be fully known, but nothing new to be added."

எபி. 6. 1, 2. உலகஇயலில் நாளடைவில் அநேக காரியங்கள் நூதனமாய் விளங்குவதுபோல அருளிலும் விளங்கும். என்றாலும் உள்ளதுதான் வெளிப்பட்டு விளங்கும், இல்லாதது விளங்காது. அந்தந்த காலத்துக்கு ஏற்றபடி நூதன வியாக்கியானங்களும் அர்த்தங்களும் விளங்கும், புதிய வேதமும் நவீனபொருளும் உபதேசமும் விளங்கப்போகிறதில்லை.

வேதத்தில் இன்னும் வெளிப்படாத பொருள்களை நாளடவில் படிப்படியாய் அறிந்துகொள்ளவேண்டியது.

4. In Nature, as in Scripture, the full discovery of truth seems to depend on the progress of learning, of liberty, and upon the diligence of the studious. *All* the Bible is not now understood; nor is the whole of nature.

உலகஇயலிலுள்ள பொருள்களை அறிகிறதற்கு கல்வியும் முயற்சியும் சுயாதீனமும் வேண்டியது போல, வேதப்பொருள்களை அறிகிறதற்கும் அதிக கல்வியும் முயற்சியும் சுயாதீனமும் வேண்டியது. சூட்சமான யாதொரு குறிப்பினால் பெரிய காரியங்கள் உலகஇயலில் விளங்குகிறதுபோலவே வேதவிஷயத்திலும் விளங்குகிறது. முன்னோர்களுக்கு விளங்காத இயற்கைவிஷயங்கள் நாளடவில் பின்னோர்களுக்கு விளங்குகிறதுபோல, வேதப்பொருள் நாளுக்குநாள் விளங்கிவந்து "எல்லாம் நிறைவேறித் தீருங்காலத்தில்" பூரணப்படும்.*

G. To these analogies, between the instruction imparted by the two schemes (1), and between the two schemes themselves (2), it is objected,

1. That natural instruction is comparatively unimportant; whereas religious instruction is essential. Answer—

மேற்சொல்லிய ஒப்புமைநியாயத்துக்கு விரோதமாய் சிலர்: உலகஇயலுக்குரிய அறிவுக்கும் வேதஅருளுக்குரிய அறிவுக்கும் அனந்த வித்தியாசமுண்டு; உலகஇயலுக்குரிய அறிவு இம்மைக்குரிய சொற்ப அறிவு, அது எவ்விதமாயிருந்தாலும் இருக்கலாம்; வேதஅருளுக்குரிய அறிவு இம்மை மறுமைக்குரிய பேரறிவு, அது தெளிவும் பூரணமுமாயிருக்கவேண்டுமென்று ஆட்சேபிப்பார்கள்.

*(a)* This distinction is not material to the argument; which is, that Nature gives, not as we expect, but differently.

*(a)* அதுமெய்தான். என்றாலும், உலகஇயலுக்குரிய அறிவும் நாம் நாடி விரும்புகிறபடி நமக்குக் கொடுக்கப்படாமல் வேறுவிதமாய்க் கொடுக்கப்படுகிறதுண்டு.

*(b)* Some of the things not told us in Nature *are* import-

*(b)* உலகஇயலுக்குரிய அநேக காரியங்கள் நம்முடைய சுகத்துக்கும் நன்

* அப். 3. 21.

மைக்கும் எதுவாயிருந்தாலும் அவைகளை நாம் அறியவேண்டியபடி அறிந்து கொள்ள எதுவில்லை.

ant, and even essential, to comfort; and

(c) நம்முடைய சித்தத்துக்கும் பிரயோஜனத்துக்கும் ஏற்றதென்று நாம் எண்ணுகிறபடி உலகஇயலுக்குரிய அநேக காரியங்களைக் கடவுள் நமக்கு வெளிப்படுத்தாமல், தம்முடைய திருவுளத்துக்கு ஏற்றபடி நாம் அகத்தியமாய் அறியவேண்டியவைகளைமாத்திரம் வெளிப்படுத்துகிறார். அப்படியே வேத காரியங்களிலும் நாம் அவசியம் அறியவேண்டியவைகளைமாத்திரம் நமக்கு வெளிப்படுத்தியிருக்கிறார். காரியம் இப்படியிருக்கிறபடியினால் இயலுக்கும் அருளுக்குமுள்ள சம்பந்தம் ஒப்புமைநியாயத்தினால் விளங்கும்.

(c) Whatever be thought of these statements, still, neither in Nature, nor, therefore, in religion, does God dispense instruction according to our notions of its importance.

2. வேறு சிலர்: உலகம் பாவத்தினால் கெட்டுப்போயிருக்கிறதென்றும், கிறிஸ்துமார்க்கம் பாவநிவாரணமாகிய பரிகாரத்தை வெளிப்படுத்தி இயலால் ஆகக்கூடாதது அருளால் ஆகக்கூடும் என்றும் கூறுகிறபடியினால், அப்படிப்பட்ட வேதம் ஆட்சேபனைக்கு இடங்கொடுக்காமல் இருக்கவேண்டுவது; மனுஷர்களின் இகபரநன்மைக்குரிய இவ்வளவு முக்கியமான காரியமானது ஆதியிலேயே வெளிப்படாமல் வெகு காலத்துக்குப்பின் வெளிப்பட்டு, யாவருக்கும் ஒரேகாலத்தில் வெளிப்படுத்தப்படாமல் சிலருக்குமாத்திரம் வெளிப்படுத்தப்பட்டு, அதுவும் பூரணமாயும் தெளிவாயும் வெளிப்படுத்தப்படாமலிருப்பது நியாயமல்ல, மேலும் உலகஇயலிலுள்ள சந்தேகங்கள் வேதஅருளிலும் இருப்பது நியாயமா அல்லவே என்று ஆட்சேபிப்பார்கள்.

2. That Christianity being considered a remedial system, is not likely to be so open to objections or perversions, as natural revelation. Answer—

(a) இந்த ஆட்சேபனைக்கு ஒருவாறு இடமிருந்தாலும், அதற்குரிய சமாதானமுமுண்டு. எப்படியெனில், உலகஇயலுக்கும் வேதஅருளுக்கும் ஒரேகடவுள் காரணகர்த்தாவானால்,

(a) If both are from the same hand, this arrangement is by no means incredible; since remedies

in Nature (for diseases really fatal) are often late discovered, doubted, and perverted, &c. And further, on this principle of reasoning,

இயலும் அருளும் சம்பந்தப்பட்டிருக்க வேண்டியது அவசியம். மனுஷர்கள் இயல்பாய் பற்பல வியாதிகளுக்கு எது வாயிருக்கிறார்கள்; அந்த வியாதிகள் நீங்கக் கடவுள் பற்பல இயல்பான பரிகாரங்களை உலகத்தில் ஏற்படுத்தியிருக்கிறார். இந்தப் பரிகாரங்கள் ஜனங்களுக்கு வெகுகாலம் வெளிப்படாமலும் சிலருக்குமாத்திரம் வெளிப்பட்டும், இன்னும் பல விசேஷித்த பரிகாரங்கள் அநேகருக்குச் சரியானபடி உபயோகப்படுத்தத் தெரியாமலுமிருக்கிறபடியால், அவைகளால் நன்மையல்ல தீமையே உண்டாகிறது, சில பரிகாரங்கள் உலகத்தில் சில இடங்களில்மாத்திரம் இருக்கிறபடியால் மற்ற இடங்களில் இருக்கிற வெகு ஜனங்களுக்கு எட்டாமலும் கிடைக்காமலும் இருக்கிறது.* காரியம் இப்படியிருக்கிறபடியால், வியாதிகளும் இருக்கக்கூடாது, அதற்கடுத்த பரிகாரங்களும் இருக்கக்கூடாதென்று ஆட்சேபிக்கவேண்டியதாகுமே. இப்படி ஆட்சேபிப்பது நியாயமா? சிற்றறிவாளராகிய நம்முடைய சித்தப்படியும் இஷ்டப்படியும் சகல காரியங்களும் இருக்கவேண்டுமென்று யூகிப்பது விவேகமா? அல்லவே.

(b) If the remedies, natural or Christian, are not true, because not what we might expect, then the diseases themselves are not true, for they also are against expectation.

H. From the whole gather two conclusions; the one negative, and the other positive.

மேற்சொல்லிய நியாயங்களினால் விளங்குகிற யதார்த்தமான காரியங்களென்னவெனில்,

1. Not that reason is no judge of *anything* in regard *to* revelation (because it is not judge of everything), for rea-

வேதத்திலுள்ள சகல காரியங்களையும் நம்முடைய புத்தியினால் அளவறுத்து அறியக்கூடாதாகையால், வேதத்திலுள்ள ஒரு காரியத்தையும் நாம் அளவறுத்து அறி

* காய்ச்சலுக்கடுத்த கினைன் (Quinine) என்னும் மருந்தும், வைசூரிக்கடுத்த அம்மைவைத்தலும் (Vaccination) வெகுகாலமாய் ஜனங்களுக்குத் தெரியாதிருந்து இக்காலத்தில் தெரிய வேண்டியதென்ன?

யக்கூடாதென்று சொல்வது தகுதியல்ல. அறிந்துகொள்ளக்கூடியதை கூடியமட்டும் அறிந்துகொள்வது தகுதி.

son may judge (a) of the meaning of Scripture; and also,

வேதத்தைப்பற்றிய நீதிநியாயங்களையும் வேதத்துக்குரிய அத்தாட்சிகளையும் நம்முடைய புத்தியினால் பகுத்தறியவேண்டியதுமல்லாமல், அதனுடைய வியாக்கியானத்தையும் புத்தியினால் பகுத்தறியவேண்டியதே. வேதத்திலுள்ள நீதிகளையும் அதற்குரிய அத்தாட்சிகளையும் நாம் பகுத்தறியும்போது அவைகள் நமக்குப் பொதுப்பட யதார்த்தமாயும் பூரணமாயும் தோன்றினால், அவைகளை ஏற்றுக்கொள்ளவேண்டியதே. அவற்றிற்குரிய சில நுட்பமும் கடினமுமான நியாயங்கள் நம்முடைய சிற்றறிவுக்கு விளங்காமற்போனாலும், அவைகளையும் நாம் அங்கிகரித்துக்கொள்ள வேண்டியதே. உலகஇயலுக்குரிய சில காரியங்களை நம்முடைய சிற்றறிவினால் பகுத்தறியக்கூடாதபடியால் உலகஇயல் முழுதையும் பழுதுபடுத்தி அதைப்பற்றி வீணை ஆட்சேபனை செய்யக்கூடாது. அப்படியே வேதமாகிய கிறிஸ்துமார்க்கத்திலுள்ள சில காரியங்களின் பொருளையும் நோக்கத்தையும் நம்முடைய சிற்றறிவினால் பகுத்து அறியக்கூடாதபடியால், வேதம் முழுதையும் பழுதுபடுத்தி அதைப்பற்றி வீணை ஆட்சேபனை செய்யக்கூடாதே. தேவ ஞானத்துக்கும் நீதிக்கும் கருணைக்கும் விரோதமான காரியங்கள் வேதத்தில் இருக்குமானால், அது பிரத்தியட்சமாய், இரண்டும் இரண்டும் ஐந்தென்பதுபோல, புத்திக்கு விரோதமாயிருக்கும்; அப்படிப்பட்ட ஆட்சேபனை உலகஇயலிலும் வேதஇயலிலும் காணவேகூடாது.

(b) Of its morality; that is, not whether it is what we might expect from a holy God, but whether it is plainly not contrary to holiness, and to what Nature teaches us of Him. It is true that objections are taken to Scripture morality, but they apply equally to the constitution of Nature. Particular precepts also are objected to, but they are temporary, and refer to actions, not habits; and though liable to be perverted by enthusiasm, are of a piece with religion as a system of probation.

Extermination of the Canaanites. In all such instances the Israelites were but the executioners of a sentence; and to charge immorality on the procedure is to confound the administrative acts of a government with its laws.

வேதத்தில் தேவகட்டளையினால் நடந்ததாகச் சொல்லியிருக்கிற சில காரியங்களைப்பற்றிச் சிலர் ஆட்சேபனை செய்வதுமுண்டு. இஸ்ரவேலர் கானானியரை நிர்மூலமாக்கினது மகா கொடுமையான காரியம் என்றும் நீதிக்கு ஒவ்வாதென்றும் சொல்லத்துணிவார்கள். இந்தக் காரியத்தை இஸ்ரவேலர் தேவகட்டளையினால் செய்தபடியால் அவர்கள் குற்றவாளிகளல்ல. துரைத்தனத்தாரால் நேமிக்கப்பட்ட நியாயாதிபதி பாதகனைக் குற்றவாளியென்று தீர்க்கிறதினாலும், குற்றவாளியைத் தூக்கில்போடும்படி நேமிக்கப்பட்ட சேவகர் தங்களுக்குரிய தொழிலை நிறைவேற்றுகிறதினாலும் அவர்கள் குற்றவாளிகளல்லவே. கொடுமையையும் அநியாயத்தையும் செய்ய வேதம் கற்பிக்குமானால் குற்றமாகும், நீதியை நிறைவேற்றக் கற்பிப்பது குற்றமல்லவே. இப்படிப்பட்ட ஆட்சேபனைகள் வேதத்தைமாத்திரமல்ல உலகஇயலையும் பற்றும்; ஏனெனில், மின்னல், வெள்ளம், தீ, யுத்தம் முதலான தீங்குகளினாலும் அநேகர் சாகிறார்கள்; பஞ்சத்தினாலும் கொள்ளைநோயினாலும் அநேகர் மடிந்துபோகிறார்கள்; புசலினால் கப்பல்கள் முழுகிப்போகிறது. இவைமுதலான செயல்களைப்பற்றி ஆட்சேபிப்பதால் காரியமென்ன? *

(c) Of its evidence.

புத்தியினால் நாம் வேதஅத்தாட்சிகளைப் பகுத்தறிவதுமன்றி, அந்த அத்தாட்சிகளைக்குறித்துச் சொல்லிய ஆட்சேபனைகளையும் நிராகரிக்கலாம். இந்த விஷயத்தைப்பற்றிப் பின்வருகிற ஏழாம் அதிகாரத்தில் சொல்லப்படும்.

2. Positively, the truth of Christianity is clearly not affected by objections against its scheme.

ஆகையால் வேதத்திலுள்ள தர்மத்தையும் நீதியையும்பற்றி ஆட்சேபனைசெய்ய இடமில்லையென்றும், அதின் அத்தாட்சி

* கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்."

அதாவது, அரசன் கொடிய பாதகனைக்கொன்று நல்லோரைக் காத்தல் களைகளைந்து பயிரைக் காத்தற்கொப்பாகுமென்று குறளில் சொல்லியிருக்கிறது.

களைப்பற்றிச் செய்யப்படும் ஆட்சேபனைகளும் உலகஇயலையும் இயலுக்கும் அருளுக்கும் காரணராகிய கடவுளையும் பற்றுமாகையால் அவைகள் தகுமான ஆட்சேபனைகள் அல்லவென்றும், உலகஇயலிலும் சத்தியவேதத்திலும் தோன்றுகிற விகற்பங்கள் இனிமேல் நியாயமாய் விளங்குமென்றும் ஒத்துக் கொள்ளவேண்டும்.

(a) For such objections are founded upon principles which Nature contradicts. And the particular things objected to are really analogous to the course of Nature.

இருளும் மருளுமுள்ள உலகஞானிகளும் காரிய குருக்கள்மாரும் உண்டுபண்ணும் வேதங்களும் சாஸ்திரங்களும் பாவமுள்ள மனுஷருடைய ஜென்ம சுபாவத்துக்கடுத்தவைகளையும் இம்மைக்குரிய நியமநிஷ்டைகளையும் தற்பொழிவுக்குரியபிரயோஜனங்களையும் நாட்டும். சத்தியவேதம் தெய்வ திருவுளத்திலிருந்துதித்து, உலகஇயலுக்கொத்திருந்து, மனுஷருடைய இகபர சுகத்துக்குரியவைகளையே நாட்டும். ஆகையால் அது பகுத்தறிவாளருக்குச் சத்தியமென்று விளங்கும்.*

(b) The scheme of Christianity may even supply positive arguments in its favour, if it differs from the schemes which enthusiasm and imposture have framed.



* இந்த அதிகாரம் பல விசேஷித்த காரியங்களையும் அநேக முக்கியமான நியாயங்களையும் எடுத்துச்சொல்லுகிறது. இதில் அநேக நியாயங்களின் ஆதாரங்களை (மூலங்களை) மாத்திரம் எடுத்துக் காண்பித்திருக்கிறது. இதைக் கவனமாய் வாசித்தறிந்துணருகிறவர்களுக்கு அநேக விஷயங்களும் அவைகளுக்குரிய நியாயங்களும் விளங்கும்.

## CHAPTER IV.

*Of Christianity; considered as a scheme or constitution; imperfectly comprehended.*

## 4—ம் அதிகாரம்.

### கிறிஸ்துமார்க்கத்தின் முறைமையானது சிற்றறிவாளராகிய மனுஷருக்கு முற்றிலும் விளங்காமல் குறைவாய் விளங்கும் முறைமையென்பது.*

[It may be true, as shown (ch. iii.) that we are imperfect judges of the Christian system. Still, are the things objected to really wise and good? And, before proceeding to notice these things in detail, there is a general argument similar to the one given in Part I. ch. 7. which needs to be remembered—viz, that Christianity is a scheme, like God's natural

சிற்றறிவுள்ள மனுஷராகிய நமக்கு வேதம் அருளப்படுமானால் அதில் நம்முடைய எண்ணங்களுக்கு விகற்பமானதும் நம்முடைய புத்திக்கு எட்டாததும் ஆட்சேபிக்கத்தக்கதுமான அநேககாரியங்கள் அடங்கியிருக்கும். அவைகள் நம்முடைய சிற்றறிவினல் நாம் பகுத்தறியக்கூடாதவையென்று முந்தின அதிகாரத்தில் காண்பித்திருக்கிறோம். என்றாலும் இந்த நியாயமானது கிறிஸ்துமார்க்கத்தில் சத்தியமும் நியாயமும் நன்மையுமான காரியங்கள் அடங்கியிருக்கிறதென்றும், அவைகள் நம்முடைய நம்பிக்கைக்கும் அங்கிகாரத்துக்கும் உரி

---

* "Either nothing is mysterious, or every thing is" (*Dr. F. Brown.*) அதிசயமானது ஒன்றுமில்லை, அல்லது உள்ளதெல்லாம் அதிசயமானதே. "The last step of reason is to know that there is an infinitude of things which surpass it." (*Pascal*) நம்முடைய புத்திக்கெட்டாத காரியங்கள் அனந்தம் உண்டென்று ஒத்துக்கொள்வதே புத்தியினல் விளங்கும் கடந்த ஞானம். "Of the dark parts of revelation there are two sorts: one may be cleared up by the studious application of well employed talents, the other, which will always reside within the shadow of God's throne, where it would be impiety to intrude:" (*Warburton*). வேதத்திலுள்ள கருதலான பொருள்கள் இரண்டுவிதமாயிருக்கும். ஒன்று கூர்மையான புத்தியைக் கையாடி விசாரணைசெய்யும் முயற்சியினல் விளங்கும்பொருள்; மற்றொன்று கடவுளுக்குரிய சிங்காசனத்துக்குரிய சந்நிதி நிழலில் அடங்கியிருந்து நமக்கு ஒருபோதும் விளங்காதபொருள். சிற்றறிவாளராகிய நாம் தேவசந்நிதியிலுள்ளவைகளை அறியும்படி தலையிடுவது தகாது என்று மூன்று சாஸ்திரிகள் சொல்லியிருக்கிறார்கள். விசுவாசத்துக்கும் பக்திக்குமுரிய கிறிஸ்துமார்க்கம் பரமரகசியமான அதிசயமே.

யவைகளென்றும் உறுதிப்படுத்தப் போதுமான நியாயமல்லவென்று சிலர் ஆட்சேபிப்பார்கள். இந்த நூலின் முதலாம்பங்கு ஏழாம் அதிகாரத்தில் (1) உலகஇயலின் முறைமை நம்முடைய புத்திக்கு எட்டாத முறைமையென்றும், (2) அந்த முறைமையில் பல பிரயத்தனங்களின் மூலமாய்க் காரியசித்தி நடந்தேறுகிறதென்றும், (3) அந்த முறைமை பொதுவான விதிகளினாலே நடந்தேறுகிறதென்றும் காண்பித்திருக்கிறோம். கிறிஸ்துமார்க்கத்தின் முறைமையும் இத்தன்மையுள்ளதாயிருக்கிறபடியால், உலகஇயலின் முறைமைக்குரிய ஆட்சேபனை வேதஅருளின் முறைமையையும் பற்றும். இவ்விரண்டு முறைமைகளையும் ஒப்புமைப்படுத்தி விசாரித்துப் பகுத்தறிந்தவர்களுக்கு இவ்விரண்டிலும் சத்தியமும் நியாயமும் நன்மையுமான காரியங்கள் உண்டென்றும், அவைகள் நம்முடைய அங்கிகாரத்துக்கு உரியவைகளென்றும் விளங்கும்.

government, imperfectly comprehended; that the whole is credibly consistent with goodness, and illustrative of it; and that if we know all, it would appear to be so.

I. கிறிஸ்துமார்க்கம் நம்முடைய புத்திக்கெட்டாத முறைமையாயிருக்கிறது. கடவுள் உலகத்தை நீதியும் நியாயமுமாய் ஆண்டுநடத்தி, அவரவர்களுக்குரிய பலனை அவரவர்களுக்கு அளித்து, அநியாயத்தையும் கொடுமையையும் அடக்கி, முடிவில் சத்தியத்தையும் நீதியையும் விளங்கப்பண்ணுவார்.

A. 1. As *Moral* government, so *Christian*, is an incomprehensible scheme.

இந்த தேவஆளுகைக்குள் கிறிஸ்துமார்க்கம் சிறந்த முறைமையுடையதாயிருக்கிறது. அது மனுஷருடைய இகபரவாழ்வுக்காக நியமிக்கப்பட்டு, பாவம் வந்தவழியும், அது போகும் வழியும் காண்பித்து, பரம புருஷோத்தமனாய் அவதரித்த சற்குருவாகிய இயேசு கிறிஸ்துவினால் பாவிகளான மனுஷர்கள் இரட்சிக்கப்படுவார்கள் என்று வெளிப்படுத்துகிறது. "சித்தமாயிருக்கிற தேவனு

1. It is a scheme, under the plan of Providence, seeking the final perfection of man; beginning with our recovery, and involving the office of a Messiah, a sanctifying Spirit, invisible government over the Church, a gradual

preparation of the redeemed for heaven, and a final judgment.

டைய பிள்ளைகளை இவர் ஒன்றாகச் சேர்த்து," "நீதி வாசமாயிருக்கும் நித்திய ராஜ்யத்தை ஸ்தாபிப்பார்"* என்று சத்தியவேதம் சொல்லுகிறபடியே, தேவசுதனாகிய பரமநாயகர் உலகத்தில் மனுஷனாக அவதரித்தார்.

Christ, the Saviour.

"உங்களுக்கு உண்டான கிருபையைப்பற்றித் தீர்க்கதரிசனஞ்சொன்ன தீர்க்கதரிசிகள் இந்த இரட்சிப்பைக் குறித்துக் கருத்தாய் ஆராய்ந்து பரிசோதனை பண்ணினார்கள். தங்களிலுள்ள கிறிஸ்துவின் ஆவியானவர் கிறிஸ்துவுக்கு உண்டாகும் பாடுகளையும், அவைகளுக்குப் பின்வரும் மகிமைகளையும் முன்னறிவித்தபோது இன்னகாலத்தைக் குறித்தாரென்பதையும், அந்தக் காலத்தின் விசேஷம் இன்னதென்பதையும் ஆராய்ந்தார்கள். தங்கள் நிமித்தமல்ல, நமது நிமித்தமே இவைகளைத் தெரிவித்தார்களென்று அவர்களுக்கு வெளியாக்கப்பட்டது; "பரலோகத்திலிருந்து அனுப்பப்பட்ட பரிசுத்த ஆவியினாலே உங்களுக்குச் சுவிசேஷத்தைப் பிரசங்கித்தவர்களைக்கொண்டு இவைகள் இப்பொழுது உங்களுக்கு அறிவிக்கப்பட்டுவருகிறது; இவைகளை உற்றுப்பார்க்கத் தேவதூதரும் ஆசையாயிருக்கிறார்கள்" என்று அப்போஸ்தலனாகிய பேதுரு சொல்லுகிறார்.† "அவர் தேவனுடைய ரூபமாயிருந்தும் தேவனுக்குச் சமமாயிருப்பதைக் கொள்ளையாடினபொருளாக எண்ணாமல், தம்மைத்தாமே வெறுமையாக்கி, அடிமையின் ரூபமெடுத்து, மனுஷர் சாயலானார். அவர் மனுஷரூபமாய்க் காணப்பட்டு, மரணபரியந்தம், அதாவது சிலுவையின் மரணபரியந்தமும் கீழ்ப்படிந்தவராகித் தம்மைத் தாமே தாழ்த்தினார். ஆதலால் தேவன் எல்லாவற்றிற்கும் மேலாக அவரை உயர்த்தி, இயேசுவின் நாமத்தில் வானோர் பூதலத்தோர் பூமியின் கீழானோருடைய முழங்கால் யாவும் முடங்கும்படிக்கும், பிதாவாகிய தேவனுக்கு மகிமையாக இயேசு கிறிஸ்து கர்த்தரென்று நாவுகள் யாவும் அறிக்கைபண்ணும்படிக்கும், எல்லா நாமத்திற்கும் மேலான நாமத்தை அவருக்குத்

* யோ. 11. 52. 2 பேது. 3. 13. † 1 பேது. 1. 11—12.

தந்தருளினார்" என்று அப்போஸ்தலனாகிய பவுல் சொல்லுகிறார்.*

அன்றியும் பாவிகளைக் குணப்படுத்தி, விசுவாசிகளாகிய உத்தமர்களுக்கு வரமளித்து, பலவீனரை ஆதரித்துத் தாங்கித் தேற்றிக் கிறிஸ்துநாதருடைய உத்தரவாத புண்ணியத்தை மனுமக்களுக்குப் பலிக்கும்படி செய்ய பரிசுத்த ஆவியானவரும் உண்டென்று சத்தியவேதம் வெளிப்படுத்துகிறது.†

The Holy Spirit, the Sanctifier.

கிறிஸ்துநாதர் பரலோகத்தில் இருந்தாலும் தமது ஆவியானவரைக்கொண்டு திருச்சபையை ஆண்டு நடத்தி, தம்மைப் பற்றினவர்களை முடிவில் மோட்சகரையேற்றுவாரென்று வேதம் திருவுளம்பற்றுகிறது. "என் பிதாவின் வீட்டில் அநேக வாசஸ்தலங்கள் உண்டு; அப்படியில்லாதிருந்தால், நான் உங்களுக்குச் சொல்லியிருப்பேன்; ஒரு ஸ்தலத்தை உங்களுக்காக ஆயத்தம்பண்ணப்போகிறேன்" என்று ரட்சகர் சொல்லியிருக்கிறார்.‡

The Church.

மேலும் அவர் மறுபடியும் வந்து உலகத்தை நீதியாய் நியாயந்தீர்த்து, பரமராஜ்யத்தை நாட்டி ஸ்திரப்படுத்துவாரென்னும் காரியத்தைப்பற்றி: "பிதாவைக் கனம்பண்ணுகிறதுபோல எல்லாருங் குமாரனையும் கனம்பண்ணும்படிக்கு, பிதாவானவர் தாமே ஒருவருக்கும் நியாயத்தீர்ப்புச் செய்யாமல், நியாயத்தீர்ப்புச்செய்யும் அதிகாரம் முழுவதையும் குமாரனுக்கு ஒப்புக்கொடுத்திருக்கிறார். குமாரனைக் கனம்பண்ணாதவன் அவரை அனுப்பின பிதாவையும் கனம்பண்ணாதவனாயிருக்கிறான்." §

Christ's future return.

---

* பிலி. 2. 6—11. † யோ. 14. 2.

‡ பாவத்தை வெறுத்து புண்ணியத்தை நாடி இரட்சகனைப் பற்றிக்கொள்ளுகிறவர்களுக்குக் கிடைக்கும் பரிசுத்த ஆவியின் வரப்பிரசாதத்தினால் "உள்ளவர்களுக்குக் கொடுக்கப்படும்" என்னும் உண்மை விளங்கும். இந்த ஆவியானவர் பாவத்தைக்குறித்தும், நீதியைக்குறித்தும், நியாயத்தீர்ப்பைக்குறித்தும் உலகத்தைக் கடிந்து உணர்த்துகிறவர். (யோ. 16. 8.) அவர் பாவநிலையிலிருந்து நம்முடைய மனதைப் புண்ணியநிலையில் திருப்பி உள்ளத்தைக் குணப்படுத்தி சீர்ப்படுத்தி அதில் சத்தியத்தை நாட்டி திருவிளக்கையேற்றி இருளையும் மருளையும் நீக்கி நம்மை தமக்கு அகமும் ஆலயமுமாக்குகிறார்.

§ யோ. 5. 22, 23.

preparation of the redeemed for heaven, and a final judgment.

டைய பிள்ளைகளை இவர் ஒன்றாகச் சேர்த்து," "நீதி வாசமாயிருக்கும் நித்திய ராஜ்யத்தை ஸ்தாபிப்பார்"* என்று சத்தியவேதம் சொல்லுகிறபடியே, தேவசுதனாகிய பரமநாயகர் உலகத்தில் மனுஷனாக அவதரித்தார்.

Christ, the Saviour.

"உங்களுக்கு உண்டான கிருபையைப்பற்றித் தீர்க்கதரிசனஞ்சொன்ன தீர்க்கதரிசிகள் இந்த இரட்சிப்பைக் குறித்துக் கருத்தாய் ஆராய்ந்து பரிசோதனை பண்ணினார்கள். தங்களிலுள்ள கிறிஸ்துவின் ஆவியானவர் கிறிஸ்துவுக்கு உண்டாகும் பாடுகளையும், அவைகளுக்குப் பின்வரும் மகிமைகளையும் முன்னறிவித்தபோது இன்னகாலத்தைக் குறித்தாரென்பதையும், அந்தக் காலத்தின் விசேஷம் இன்னதென்பதையும் ஆராய்ந்தார்கள். தங்கள் நிமித்தமல்ல, நமது நிமித்தமே இவைகளைத் தெரிவித்தார்களென்று அவர்களுக்கு வெளியாக்கப்பட்டது; "பரலோகத்திலிருந்து அனுப்பப்பட்ட பரிசுத்த ஆவியினாலே உங்களுக்குச் சுவிசேஷத்தைப் பிரசங்கித்தவர்களைக்கொண்டு இவைகள் இப்பொழுது உங்களுக்கு அறிவிக்கப்பட்டுவருகிறது; இவைகளை உற்றுப்பார்க்கத் தேவதூதரும் ஆசையாயிருக்கிறார்கள்" என்று அப்போஸ்தலனாகிய பேதுரு சொல்லுகிறார்.† "அவர் தேவனுடைய ரூபமாயிருந்தும் தேவனுக்குச் சமமாயிருப்பதைக் கொள்ளையாடின பொருளாக எண்ணாமல், தம்மைத்தாமே வெறுமையாக்கி, அடிமையின் ரூபமெடுத்து, மனுஷர் சாயலானார். அவர் மனுஷரூபமாய்க் காணப்பட்டு, மரணபரியந்தம், அதாவது சிலுவையின் மரணபரியந்தமும் கீழ்ப்படிந்தவராகித் தம்மைத் தாமே தாழ்த்தினார். ஆதலால் தேவன் எல்லாவற்றிற்கும் மேலாக அவரை உயர்த்தி, இயேசுவின் நாமத்தில் வானோர் பூதலத்தோர் பூமியின் கீழானோருடைய முழங்கால் யாவும் முடங்கும்படிக்கும், பிதாவாகிய தேவனுக்கு மகிமையாக இயேசு கிறிஸ்து கர்த்தரென்று நாவுகள் யாவும் அறிக்கைபண்ணும்படிக்கும், எல்லா நாமத்திற்கும் மேலான நாமத்தை அவருக்குத்

* வெளி. 11. 52. 2 பேது. 3. 13. † 1 பேது. 1. 11—12.

தந்தருளினார்" என்று அப்போஸ்தலனாகிய பவுல் சொல்லுகிறார்.*

The Holy Spirit, the Sanctifier.

அன்றியும் பாவிகளைக் குணப்படுத்தி, விசுவாசிகளாகிய உத்தமர்களுக்கு வரமளித்து, பலவீனரை ஆதரித்துத் தாங்கித் தேற்றிக் கிறிஸ்துநாதருடைய உத்தரவாத புண்ணியத்தை மனுமக்களுக்குப் பலிக்கும்படி செய்ய பரிசுத்த ஆவியானவரும் உண்டென்று சத்தியவேதம் வெளிப்படுத்துகிறது.†

The Church.

கிறிஸ்துநாதர் பரலோகத்தில் இருந்தாலும் தமது ஆவியானவரைக்கொண்டு திருச்சபையை ஆண்டு நடத்தி, தம்மைப் பற்றினவர்களை முடிவில் மோட்சகரையேற்றுவாரென்று வேதம் திருவுளம்பற்றுகிறது. "என் பிதாவின் வீட்டில் அநேக வாசஸ்தலங்கள் உண்டு; அப்படியில்லாதிருந்தால், நான் உங்களுக்குச் சொல்லியிருப்பேன்; ஒரு ஸ்தலத்தை உங்களுக்காக ஆயத்தம்பண்ணப்போகிறேன்" என்று ரட்சகர் சொல்லியிருக்கிறார்.‡

Christ's future return.

மேலும் அவர் மறுபடியும் வந்து உலகத்தை நீதியாய் நியாயந்தீர்த்து, பரமராஜ்யத்தை நாட்டி ஸ்திரப்படுத்துவாரென்னும் காரியத்தைப்பற்றி: "பிதாவைக் கனம்பண்ணுகிறதுபோல எல்லாருங் குமாரனையும் கனம்பண்ணும்படிக்கு, பிதாவானவர் தாமே ஒருவருக்கும் நியாயத்தீர்ப்புச் செய்யாமல், நியாயத்தீர்ப்புச்செய்யும் அதிகாரம் முழுவதையும் குமாரனுக்கு ஒப்புக்கொடுத்திருக்கிறார். குமாரனைக் கனம்பண்ணாதவன் அவரை அனுப்பின பிதாவையும் கனம்பண்ணாதவனாயிருக்கிறான்." §

---

* பிலி. 2. 6—11. † யோ. 14. 2.

‡ பாவத்தை வெறுத்து புண்ணியத்தை நாடி இரட்சகரைப் பற்றிக்கொள்ளுகிறவர்களுக்குக் கிடைக்கும் பரிசுத்த ஆவியின் வரப்பிரசாதத்தினால் "உள்ளவர்களுக்குக் கொடுக்கப்படும்" என்னும் உண்மை விளங்கும். இந்த ஆவியானவர் பாவத்தைக்குறித்தும், நீதியைக்குறித்தும், நியாயத்தீர்ப்பைக்குறித்தும் உலகத்தைக் கடிந்து உணர்த்துகிறவர். (யோ. 16. 8.) அவர் பாவநிலையிலிருந்து நம்முடைய மனதைப் புண்ணியநிலையில் திருப்பி உள்ளத்தைக் குணப்படுத்தி சீர்ப்படுத்தி அதில் சத்தியத்தை காட்டி திருவிளக்கையேற்றி இருளையும் மருளையும் நீக்கி நம்மை தமக்கு அகமும் ஆலயமுமாக்குகிறார்.

§ யோ. 5. 22, 23.

"வானத்திலும் பூமியிலும் சகல அதிகாரமும் எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது." "எல்லாச் சத்துருக்களையும் தமது பாதத்திற்கு கீழாக்கிப்போடும்வரைக்கும், அவர் ஆளுகைசெய்யவேண்டியது. சகலமும் அவருக்குக் கீழ்ப்பட்டிருக்கும்போது, தேவனே சகலத்திலும் சகலமுமாயிருப்பதற்கு, குமாரன் தாமும் சகலத்தையும் கீழ்ப்படுத்தினவருக்குக் கீழ்ப்பட்டிருப்பார்" என்று வேதம் அவரைக்குறித்துச் சாட்சியிடுகிறது.*

கிறிஸ்துமார்க்கத்துக்குரிய இந்த முறைமை எளிதில் பூரணமாய் அறியக்கூடியதல்ல. அதில் அடங்கிய பொருளாகிய உபதேசங்கள் "மகா மேன்மையுள்ள பரமரகசியங்கள்" என்று வேதமே சொல்லுகிறது.† உலக இயலில் நமக்கு விளங்காத காரியங்கள் நம்முடைய அறிவீனத்தை வெளிப்படுத்துகிறதுபோலவே, வேதஇயலில் நமக்கு விளங்காத காரியங்களும் நம்முடைய அறிவீனத்தை வெளிப்படுத்தும். உலகஇயலை நாளாவட்டத்தில் பிரயாசத்தோடு முயற்சிசெய்து அறிந்துகொள்வதுபோலவே, வேதஇயலையும் அறிந்துகொள்ளவேண்டும். உலகஇயலில் நம்முடைய சொற்ப புத்திக்கெட்டாத காரியங்களை நாம் முற்றிலும் அறிந்துகொள்ள இயலாததுபோலவே, வேதஇயலிலும் நம்முடைய சொற்ப புத்திக்கெட்டாத காரியங்களை முற்றிலும் அறிந்துகொள்ள இயலாது. ஆகையால் இவ்விஷயத்தில் வேதஇயலைப்பற்றின ஆட்சேபனை உலகஇயலையும் பற்றும்.

2. And it is a scheme imperfectly comprehended; a mystery of godliness, the things revealed ever running up into mysteries, and a large part of it still undisclosed.

II. உலகஇயலில் பற்பல பிரயத்தனங்களினால் காரியங்கள் சித்தியாகிறதுபோலவே, கிறிஸ்துமார்க்க இயலிலும் பற்பல பிரயத்தனங்களினாலே காரியங்கள் சித்தியாகிறதுண்டு. ஆகையால் கிறிஸ்துமார்க்கத்தின்

B. Note two important analogies between the two:
1. As the natural government of God, so Christianity uses,

---

* மத். 28. 18. 1 கொ. 15. 25, 28. † 1 Tim. 3. 16.

இயல் பூரணமாய் விளங்கவில்லையென் றும் ஆட்சேபனை உலகஇயலும் பூரண மாய் விளங்கவில்லையென்னும் ஆட்சே பனையைப் பற்றும். இவ்வித விஷயங்க ளுக்குரிய காரியங்களை நிறைவேற்றும் பொருட்டு செய்யப்படும் பிரயத்தனங் கள் மனுஷருடைய அற்பபுத்திக்கு ஏலாததாய்த் தோன்றி னும் அவைகள் திருவுளத்துக்கு ஏற்ற பிரயத்தனங்கள் என்ப தற்குச் சந்தேகமில்லை. நம்முடைய புத்திக்கெட்டாத விஷ யங்களில் நமக்கு ஏலாததாய்த்* தோன்றுகிறவைகள் காரியு சித்தியானபின்பு ஏற்றதென்றே விளங்கும்.

to accomplish ends, by means, undesirable it may be, or "foolish," yet, in Nature, none the less appropriate to secure the desired result.

III. உலகஇயல் பொதுவிதிகளினால் நடத்தப்படுகிறபடி யே, கிறிஸ்துமார்க்க இயலும் தொன்று தொட்டுப் பொதுவிதிகளினாலேயே நடத் தப்பட்டுவருகிறது. (a) உலகஇயலுக் குரிய பொதுவிதிகளினால் உண்டாகும் காரியத்தைமாத்திரம் கண்டறிகிறோம்; அதன் காரணங்களையும் வழிவகைகளை யும் கண்டறியக்கூடாது. "இன்னின்ன காரியங்கள் நிறைவேற இன்னின்ன பிரயத்தனங்கள் நியமிக்கப்பட்டிருக்கிற தென்று நாம் எப்படிச் சொல்லக்கூடும்? உலகமக்களை அழித்து நாசமாக்குகிற பெருங்காற்றுமழையும், வெள்ளமும், பூமியதிர்ச்சியும், பஞ்சமும், கொள்ளைநோயும் உண்டாகிற காரணங்களாவது, மனுஷரில் உண்டாயிருக்கிற குணபேதங்கள் ஸ்திதிபேதங்கள் முதலான விகற்பங்கள் உண் டாயிருக்கிறதற்குக் காரணங்களாவது விளங்கவில்லையே. எந் தக் காரியமும் ஒரு காரணமில்லாமல் தற்செயலாய் உண்டா கிறதில்லை. ஆகையால் உலகத்தில் சம்பவிக்கிறவைகளெல் லாம் சாதாரணமாய் தெய்வச்செயலால் உண்டாகிறதென்றே ஒத்துக்கொள்ளவேண்டும். சம்பவிக்கிற காரியங்களின் ஒரு

2. As the natural government of God, so Christianity is carried out by general laws.

(a) That God's natural government is so carried on we conclude from the many cases in which we can trace those laws. "By analogy" we apply to all what we see to be true of a part. So,

* 1 கொ. 1. அதி.

பங்கைமாத்திரம் அறிகிறோமே ஒழிய அதின் முழுமையையும் அறிய நம்மால் கூடாது. சம்பவிக்கிற ஒரு பங்கைப்பார்த்து முழுதையும் குறித்து ஒப்புமையினால் அநுமானித்து முழுதையும் அறிந்துகொள்ளப் பார்க்கிறோம். அப்படியே விசேஷமாய்த் தோன்றுகிற அனந்த ஞானமுள்ள அற்புத செய்கையானது நமக்கு நூதனமாய்த் தோன்றினாலும், அவைகள் சகலத்தையும் ஆண்டு நடத்துகிற கடவுளுக்குரிய பொதுவிதிகளாயிருக்கலாம். ஒருவன் பிறந்த உடனே மரிக்கிறான், வேறொருவன் நெடுநாள் ஜீவித்து மரிக்கிறான்; ஒருவன் செல்வமாய் வாழ்கிறான், வேறொருவன் தரித்திரத்தை அநுபவிக்கிறான். இதற்குக் காரணம் என்ன? உலகஇயலில் நடந்தேறுகிற விசேஷித்த செய்ல்களும் அற்புதங்களும்போலவே வேதஇயலிலும் விசேஷித்த செயல்களும் அற்புதங்களும் நடந்தேறலாமே. சகல காரியமும் அனந்த ஞானமுள்ள கடவுளுடைய திருவுளத்துக்கு ஏற்றபடி நடந்துவருகிறதென்பதற்குச் சந்தேகமில்லை.

*(b)* We may conclude that Christianity is carried on by general laws, even though in particular cases, we see only the fact, and not the law, as in miracles. Hence, though some exigencies may be met by miracles, yet every exigency may not be so met; a reason for miraculous interposition in some cases, and not in all.

உலகஇயலில் நமக்கு விகாரமாய்த் தோன்றுகிற காரியங்களினால் நாம் முழுமையும் அறியாமல் அதில் ஒரு பங்கைமாத்திரம் அறிந்துகொள்ளுகிறபடியே, வேதஇயலிலும் முழுமையும் அறியாமல் ஒரு பங்கைமாத்திரம் அறிந்துகொள்ளுகிறோம். உலகஇயலில் இப்பொழுது விகாரமாயும் அறைகுறையாயும் தோன்றுகிறவைகள் இருக்கஇருக்க ஏற்றகாலத்தில் குறையில்லாமல் பூரணமாய் விளங்கும். அப்படியே வேதஇயலிலும் இப்பொழுது அறைகுறையாயும் விகாரமாயும் தோன்றுகிறவைகள் இருக்க இருக்க ஏற்றகாலத்தில் குறையின்றிப் பூரணமாய் விளங்கும்.

*(c)* Hence conclude that, as Christianity is a scheme with means and general laws, it is liable to objections from apparent deficiencies and irregularities, which would cease if the whole case were known.

உலகஇயல்பிலும் வேதஇயலிலும் தோன்றுகிற தர்மவிஷயங்களைப்பற்றி உண்டாகிற ஆட்சேபனைகளுக்குச் சமாதானம் முதலாம் பங்கின் ஏழாம் அதிகாரத்திலும் இந்த அதிகாரத்திலும் சொல்லப்பட்டது. கிறிஸ்துமார்க்கத்தைப்பற்றி இன்னொரு விசேஷித்த ஆட்சேபனை சொல்லப்படுகிறதுண்டு. அதென்னவென்றால், மனுஷருடைய இரட்சிப்புக்கடுத்த காரியத்துக்குரிய அவருடைய சித்தத்தை தெய்வீகத்துக்கேற்றபடி நேராய் உடனே ஒரு நிமிஷத்தில் நிறைவேற்றாமல் பலவித பிரயத்தனங்களையும் வழிவகைகளையும்கொண்டு நாளாவட்டத்திலும் தாமதமாகவும் சுற்றுச்சுழலாகவும் நிறைவேற்றுகிறது தேவவல்லமைக்கும் ஞானத்துக்கும் தகுதியல்லவென்று சிலர் ஆட்சேபிப்பார்கள். உலக இயலில் நம்மைச் சூழ்ந்திருக்கும் காரியங்களை நாம் கவனித்துப்பார்க்கும்போது இது வீணான ஆட்சேபனையென்று தோன்றும்; எப்படியெனில் தெய்வச்செயல்கள் நமக்குத் தோன்றுகிறபடி தாமதமாயும் சுற்றுச்சுழலாயும் நடந்தேறிவருகிறது. அவருடைய செயல்களுக்குரிய காரணகாரியங்களின் சம்பந்தத்தைப் பகுத்தறிய நம்மால் கூடாது. இயலிலும் அருளிலும் தோன்றுகிற அநேக காரியங்கள் நம்முடைய புத்திக்கெட்டாத பரமரகசியமாயிருக்கிறது. சிற்றறிவாளராகிய நாம் இன்னகாரணத்தைக் கையாடினால் இன்னகாரியம் உண்டாகுமென்று அறிந்திருக்கிறோம். எல்லாவற்றையும் படைத்து ஆண்டு நடத்துகிறவருடைய செயலுக்குரிய காரணகாரியத்தைப் பகுத்தறிய நம்மால் முடியாது.

C. Objections to a Christian scheme, as a fact, have been met. (ch. iii.) Objections against its consistency with wisdom and goodness have been already met in this ch. Objections to particular parts of the scheme may be met by particular analogies in Nature. In the following chapter other parts are taken up. There it is intended to notice a particular objection to the scheme as a whole, involving especially a use of intricate means for the salvation of the world. No just objection to Christianity can hence arise; for

1. In Nature and Providence (the seasons, the growth of vegetables and animals, the progress of nations, for example) means, equally intricate and tedious are employed, so that the objection applies equally to Nature and to Religion. And further,

2. உலகஇயலுக்குரியவைகள் ஒரு நிலையில் நிற்காமல் மாறி மாறி விகாரப்பட்டு நாளுக்குநாள் வளர்ந்தேறிக்கொண்டுவருகிறது. காலங்கள் மாறிமாறி வருகிறது. ஒரு விருட்சத்தின் வித்து நிலத்தில் போட்டவுடனே முளைத்து இலையும் பூவும் காயும் கனியுமாய் விளங்காமல் வெகுகாலத்திற்குப்பின் பக்குவமாகிறது. அப்படியே ஒரு பிள்ளையும் பிறந்தவுடனே பக்குவப்படாமல் நாளாவட்டத்தில் குழந்தையாய் பாலியமாய் இளமைப்பருவமாய் முதிர்வயதாய்ச் சரீரப்படி பக்குவப்படுகிறதுமன்றி, மனதின்படியும் அறிவில் நாளுக்குநாள் தேறி அநுபவத்தினுல் பக்குவப்படுகிறதுண்டு. அப்படியே ஒரு ராஜ்யமும் எடுத்தஎடுப்பில் பூரணப்பட்டு வளர்ந்தோங்காமல் நாளாவட்டத்தில் பல பிரயத்தனங்களினுல் பக்குவப்படுகிறதுண்டு. மேலும் மனுஷர் இம்மையில் பூரணபக்குவம் அடையாமல் மறுமையில் பூரணபக்குவம் அடைய இம்மையில் தேறுகிருர்கள்.*

2. We distinguish means and ends; while, in fact, the distinction may be absurd. And certainly, with God, means may be as important a part of the process as the end itself.—These are expanded.

மனுஷர்கள் சகல காரியங்களும் ஒரு நொடியில் ஆகவேண்டுமென்று நாடுவார்கள். திரிகால வித்தியாசமில்லாத நித்திய வஸ்துவாகிய கடவுள் சகலத்தையும் படிப்படியாய்ப் பொறுமையோடும் நிதானத்தோடும் நடத்திவருகிருர். சகல காரியங்களின் ஆதியும் அந்தமும் அவருக்குப் பிரத்தியட்சமாயிருக்கிறது. தம்முடைய மனோவாக்குக்கெட்டாத சகலத்தையும் அவருடைய திருவுளத்தின் அநாதி தீர்மானத்தின்படி நடத்தி ஏற்றகாலங்களில் எல்லாம் விளங்கும்படி செய்கிருர். உலக இயலில் தெய்வச்செயல் விளங்குகிறதுபோலவே வேதஇயலிலும் விளங்குகிறபடியால் கிறிஸ்துமார்க்கம் நடந்தேறுகிற விஷயத்தைப்பற்றி ஆட்சேபனைசெய்வது வியர்த்தம்.

---

* "அரசன் அன்று கொல்லும்
தெய்வம் நின்று கொல்லும்."

## CHAPTER V.

*Of the particular system of Christianity; the appointment of a Mediator, and of the redemption of the world by Him.*

## 5-ம் அதிகாரம்.

தேவனுக்கும் மனுஷருக்கும் நடுநிற்பவராகிய ஒரு மத்தியஸ்தர் உண்டென்றும், அவராலே உலகம் மீட்கப்பட்டு ரட்சிக்கப்படுகிறதென்றும் சொல்லுகிற கிறிஸ்துமார்க்கத்துக்கே உரிய உபதேசத்தைப் பற்றியது.

*கிறிஸ்துவின் மத்தியஸ்தத்தினாலே உலகத்திற்கு மீட்பு உண்டென்கிற கிறிஸ்துமார்க்கத்துக்குரிய உபதேசத்தைப்பற்றி ஆட்சேபனை விசேஷமாய்ச் செய்யப்படுகிறதுண்டு. இந்த விஷயத்தை நன்றாய்க் கவனித்து விசாரித்துப்பார்க்கும்போது யாதொரு ஆட்சேபனைக்கும் இடமில்லையென்று பிரத்தியட்சமாய் விளங்கும்.*

The mediation of Christ has been greatly objected to, but without reason; for

I. *தேவனுக்கும் மனுஷருக்கும் மத்தியஸ்தர் ஒருவர் உண்டென்னுங் கொள்கை* உலகஇயலுக்கும் ஒத்திருக்கிறதென்று விளங்குகிறது. எப்படியெனில், உலகத்தில் உள்ள சகலமானபேர்களும் தங்களைத் தாங்களே உண்டாக்கிக்கொள்ளாமல், மற்றவர்கள் மூலமாய் உண்டாக்கப்பட்டு, பிறர் உதவியினால் வளர்ந்து காக்கப்பட்டு, பிறருடைய சிட்சைரட்சையினால் படிப்பு தொழில் உத்தியோகம் பெற்று, சுக-துக்கம் இன்ப-துன்ப முதலானவைகளைப் பிறர்மூலமாகவே அநுபவிக்கிறார்களென்*

A. The analogy of Nature supplies no presumption against the general notion of mediation, but the contrary:

For upon the instrumentality or mediation of others we depend for our birth and nature; for happiness and misery.

* 1 Tim. 2. 5, 6.

பது பிரத்தியட்சமாய் விளங்குகிறது. உலகத்தை ஆண்டு நடத்துகிற கடவுளானவர் தாமே நேராய் வெளிப்படாமல் சிலரைத் துணைக்கருவிகளும் உபகரணங்களுமாகக்கொண்டு அவர்கள் மூலமாய் ஜீவகோடிகளைப் படைத்து நடத்தி, அவருடைய நீதியையும் நியாயத்தையும் தயவையும் இரக்கத்தையும் யாவருக்கும் விளங்கப்பண்ணுகிறார். இது உலகஇயலுக்குரிய சாதாரணமான காரியமென்று யாவருடைய அநுபவத்திலும் பட்டிருக்கிறபடியால், உலகஇயலிலுள்ளபடி அருளிலும் மத்தியஸ்தர் ஒருவர் உண்டென்கிற கிறிஸ்துமார்க்கத்தின் உபதேசத்தைப்பற்றிச் சொல்லும் ஆட்சேபனைக்கு இடமில்லை.

B. The moral government of God, which mediation presupposes, and which religion tells us extends into another life, is natural.

II. கிறிஸ்துவின் மத்தியஸ்தத்தினால் உலகத்துக்கு மீட்புண்டென்கிற வேத உபதேசத்தைக் கவனிப்பதற்குமுன், உலகத்தில் தர்மம் நிலைத்திருக்கிறதென்றும், கடவுள் உலகத்தைத் தர்மமாய் ஆண்டுநடத்திவருகிறாரென்றும் ஒத்துக்கொள்ளவேண்டும். இம்மையில் செய்யப்படும் பாவத்திற்கு மறுமையில் தண்டனையுண்டென்பது தேவநீதிக்கடுத்ததென்று தர்மமே முறையிடும்.

1. Present punishment, one effect of moral government, is certainly natural, ever following vice; and, in the same way, future punishment may naturally follow vice.

1. பாவத்துக்குத்தக்க தண்டனை அடையவேண்டுமென்பது தேவஏற்பாடென்றும் அது இயல்பான காரியமென்றும் விளங்கினாலும், பாவத்தின் காரணங்களும் மறுமையில் உண்டாகும் தண்டனையின் வழிவகைகளும் நமக்கு இம்மையில் பூரணமாய் விளங்காது. என்றாலும் செங்குத்தான ஒரு மலையின் மேல் மிதமிஞ்சி துணிகரமாய்க் குதித்தாடுகிறவன் தாங்குவாரில்லாமல் விழுந்து கைகால் உடைந்து அழிந்துபோகிறதுபோலவும், துர்நடக்கையினால் வறுமை-சிறுமை, பிணி-பழி முதலானவை இம்மையில் நேரிடுகிறதுபோலவும் மறுமையிலும் பாவத்துக்குத் தக்க தண்டனை நேரிடுமென்று விளங்குகிறது.

2. Nor need any object that, upon this supposition, jus-

பாவத்துக்குத் தக்க தண்டனை இயல்பாய் நடக்கும் என்று சொல்லப்படுகிறதி

ஞல், கடவுள் நீதிசெலுத்தாமல் இயலே நீதிசெலுத்துகிறதென்று சொல்லலாகும்; இது தேவலட்சணத்துக்குப் பின்னமாகுமென்று சிலர் ஆட்சேபிப்பார்கள். உலக இயலை நடத்துகிறவர் கடவுளாகையால் இயல்பாய் நடந்தேறுகிற காரியமும் தெய்வச்செயலே என்று அறியவேண்டும்.

tice is taken out of God's hand, and given to Nature; for, (*a*) It is God who does what nature is said to do; and

தெய்வச்செயல் இயற்கையாயும் இயற்கைக்கு மேற்பட்ட அற்புதமாயும் இருக்கும்; இவ்விரண்டும் அவர் கைக்குள் அடக்கம். இவைகளை அவர் நேராய்ச் செய்தாலும், மற்றவர்களைக்கொண்டு செய்தாலும், பொதுவாய் நீதிநியாயத்துக்கேற்ற தர்மமாயிருக்கும்படியே செய்வார் என்பதற்குச் சந்தேகமில்லை.

(*b*) In Scripture natural punishments are ascribed to God, and yet are deemed natural, as distinguished from miraculous; and

(*c*) By "natural" is meant, not arbitrary, but just and reasonable; such, moreover, as are in accordance with general laws.

III. மேலும், தெய்வச்செயலால் நடத்தப்படுகிற உலகஇயலில் தீவினைக்குரிய தண்டனைகள் இம்மையில் நடந்தேறாமல் அவைகள் நிவிர்த்தியாகும்படி பல பிரயத்தனங்கள் நியமிக்கப்பட்டிருக்கிறதையும் காண்கிறோம். அப்படியே மறுமையிலும் தீவினைக்குரிய தண்டனைகள் நிவிர்த்தியாகும்படி பல பிரயத்தனங்கள் நியமிக்கப்பட்டிருக்கலாம்.

C. All the present penal consequences of vice are not always inflicted, but a provision is made to prevent them, and so may some of the future consequences be prevented.

உலகத்தில் தீமையும் துக்கமும் இராதபடி அமைக்கப்பட்டிருந்தால் நலமாயிருக்குமென்று சிலர் சொல்லத்துணிவார்கள். உலகத்தை அமைத்த காரணக்கடவுள் தீமைக்கும் துக்கத்துக்கும் இடங்கொடுத்திருந்தாலும், நரஜீவன்களாலுண்டாகும் தீமை நீங்கி துக்கம் நிவிர்த்தியாகிச் சீரும் சுகமுமுண்டாகப் பல பிரயத்தனங்களையும் உண்டுபண்ணியிருக்கிறார். "அடிக்கும் ஒருகை அணைக்கும் ஒருகை" என்பதுபோல,

1. Men may think that it would have been better for evil not to have existed; still it does exist, though God often provides remedies even for such evils as are penal.

உலகஇயலில் சிட்சைக்கு-ரட்சையும், துன்பத்துக்கு-இன்ப மும் நியமிக்கப்பட்டு, விஷம் இருந்தால் அதற்குரிய மாற்றும், தோஷமிருந்தால் அதற்குரிய பிராயச்சித்தமும் உண்டாயிருக்கிறது. தீவினைக்குப் பல தடைகளும், பிணிகளுக்குப் பல பரிகாரங்களும் உண்டு. மருளால் உண்டாகும் துன்பமெல்லாம் அருளால் நீங்கும். உலகஇயலிலே தீமையினால் கேடு நேரிடினும் நன்மையினால் கேடு அழியும்.

2. Such provision might have been withheld; an arrangement severe, perhaps, but not unjust.

தீமைக்குச் சாந்தியாக நியமிக்கப்பட்டிருக்கிற இந்தப் பரிகாரம் உண்டாயிராமற்போனால், அது கண்டிப்பான நீதியாயிருக்குமேயல்லாமல் அநீதியாயிராது. நியமிக்கப்பட்டிருப்பதெல்லாம் நன்மையாய் முடியும்படியே நியமிக்கப்பட்டிருக்குமென்பதற்குச் சந்தேகமில்லை.

3. In fact, however, there is such a provision, and analogously we may hope that it will extend into the future, so that the consequences of vice may not follow universally in all cases.

என்றாலும், தீமைக்கு நிவிர்த்தியாகப் பல சாந்திகள் நியமிக்கப்பட்டிருக்கிறது நிச்சயமான காரியமானபடியால், இந்தக் காருணியம் இம்மைக்குமாத்திரமல்ல மறுமைக்குமுரியதாயிருக்கலாம் என்றும், இதினால் பல தீமைகள் நிவிர்த்தியாகலாமென்றும் துணிந்துசொல்லலாம்.

4. Some may be surprised that this is stated as a supposition only. But if the consequences of irregularities even (not of vice) be so serious, and of vice often extreme misery and death, what may we not fear that the consequences of irreligion will be, looking at the disorder it introduces? However, some of the future penal con-

சிலர் பாவத்தின் கொடுமையை உணராமல் மறுமையில் பாவத்துக்கு நேரிடும் தண்டனையைப்பற்றிக் கவலையற்றுக் கவனியாதிருக்கிறார்கள். உலகஇயலில் பேதமையான காரியங்களினால் உண்டாகிற தீமைகளையும் துர்க்கிரியைகளினால் உண்டாகிற கேடுகளையும் நாம் பார்க்கும்போது தர்மத்துக்கு விரோதமாய் மனமறியத் துணிந்து செய்யும் பஞ்சமாபாதகங்களுக்கும் தெய்வதுரோகத்துக்கும் விதிக்கப்பட்டிருக்கும் தண்டனை பலியாமற்போகுமா? தர்மம் நிலைநிற்கும்படி பாவம் தண்டிக்கப்

படவேண்டியது அவசியமானல் அது நிவிர்த்திசெய்யப்படுவதெப்படி? சொற்பமான பற்பல தீங்குகளுக்குப் பற்பல நிவிர்த்திகள் உலகஇயவில் உண்டாயிருக்கிறதுபோல, நாம் செய்யும் கொடுமையான பாவங்களும் மன்னிக்கப்பட்டு நிவிர்த்தியாகும்படி வேண்டிய பிரயத்தனங்கள் தேவஅருளினல் நியமிக்கப்பட்டிருக்கலாமென்று அநுவயித்து நம்பலாம்.

sequences of sin may be prevented.

IV. நம்முடைய பாவத்தினிமித்தம் நமக்கு நேரிடவேண்டிய துன்பங்கள் விலகி நமக்குப் பாவநிவிர்த்தியுண்டாகிறதற்கு நம்முடைய சுயமுயற்சியும் நம்முடைய சுயபுண்ணியமும் போதாது.

D. We have no reason, however, to suppose that these consequences can be prevented by any thing we can do; for

1. தீவினையின்பயன் இன்னதென்றும், தண்டனைக்குரிய நியாயங்கள் இன்னதென்றும் நமக்குப் பூரணமாய்த் தெரியாதபடியினல் அவைகள் இவ்வித வழிவகையாய் நிவிர்த்தியாகும் என்றும் நமக்குத் தெரியாது.

1. We know not what reasons for punishment may exist, or what the natural consequences of vice are, and so cannot tell what can prevent them.

கடவுள் உலகத்தை ஆண்டுநடத்தும் வழிவகை நமக்குப் பூரணமாய் விளங்காதபடியினல், உலக இயலில் தோன்றுங் காரியங்களினல் இவ்விஷயத்தைப்பற்றிச் சொல்லிய ஆட்சேபனைகளுக்கு வேதநியாயங்களைக்கொண்டு சமாதானஞ் சொல்லலாம். சிலர் ஊதாரித்தனத்தினல் தங்கள் ஆஸ்தியைச் செலவழித்தும், சிலர் காமவிகாரத்தினல் தங்கள் சுகத்தை இழந்தும், சிலர் விதிவிலக்குகளை மீறி அக்கிரமத்திற்குரிய தண்டனைக்கும் துன்பத்துக்கும் உட்படும்போது, அவர்கள் சென்ற காலத்தில் செய்த தீவினைகளுக்காக மனங்கசந்து துக்கித்து வருங்காலத்தில் நல்வினைசெய்ய உறுதியான தீர்மானம்பண்ணினலும் அவர்களுக்கு நேரிடவேண்டிய துன்பமும் துயரமும்

2. Nature, moreover, leads to the conclusion that we cannot prevent them; for ruin is often the consequence of vice, nor can repentance repair the evil. Our ability to repair it is often weakened; and, even if not, we have to depend on others.

நேரிடாமற் போகிறதில்லையென்று காண்கிறோம். அவர்கள் சுகம் இழந்து சக்தி குறைந்து ஜீவனத்துக்கு ஏதுவில்லாமல் பிறர்உதவியைநாடி அந்த உதவி இல்லாமல் கடைத்தேறக் கூடாதவர்களாயிருக்கிறார்கள். சொற்பகாலத்துக்குரிய இம்மையிலேயே நம்முடைய காரியங்கள் இப்படியிருக்குமானால், நித்தியகாலத்துக்குரிய மறுமையிலும் நம்முடைய காரியங்கள் இப்படியே இருக்குமென்று அநுவயித்து நம்முடைய சுயமுயற்சியும் சுயபுண்ணியமும் நமக்குரிய இகபரசுகத்துக்குப் போதாதென்றே சொல்லவேண்டும்.

3. Our notions of government are all against the supposition that repentance will prevent the future painful consequences of vice.

குற்றவாளி தான் செய்த குற்றத்தினிமித்தம் மனஸ்தாபமடைந்து இனி அந்தக் குற்றத்தைச் செய்யேன் என்று பிரதிக்கினை செய்தாலும், அவன் செய்த குற்றத்திற்குரிய தண்டனையை அவன் அடைந்து தீரவேண்டியதாகும்; அதனால் நீதி நிறைவேறவேண்டும். இம்மையில் நீதி நிறைவேறவேண்டியபடியே மறுமையிலும் நிறைவேறவேண்டியதே. நாம் செய்த குற்றத்திற்காக மனஸ்தாபமும் பச்சாத்தாபமும் இருக்கவேண்டியது நியாயமே; என்றாலும் அது பாவநிவாரணத்துக்கும் தண்டனை நிவிர்த்திக்கும் போதாது. உலகஇயலும் அதனை நடத்தும் தெய்வச்செயலும் இதற்குச் சாட்சி.*

4. This conclusion is favoured by the general sense of

4. பாவவிமோசனத்திற்கும் தண்டனைநிவிர்த்திக்கும் மனஸ்தாபம் போதாதென்று மனுஷர் யாவரும் உணருகிறபடியினால், மனஸ்தாபம்மாத்

---

Even if repentance could save us, Natural religion is unable to produce it. It is the effect of grace, and is connected with faith and love.

Repentance, not *useless*, but *insufficient*. Forgiveness of sins is the result not of repentance, but of the death of Christ, Repentance being essential not to the *efficacy* of His death, but to the *appropriation* of the benefits secured by it.

* பாவத்துக்காக உத்தம மனஸ்தாபப்படுதல் நம்மை ரட்சிக்கக்கூடுமானாலும், அந்த உத்தம மனஸ்தாபத்தை இயல்வேதம் நமக்குள் உண்டுபண்ணக்கூடாது. உத்தம மனஸ்தாபம் வியர்த்தமானகாரியமல்ல, என்றாலும் பாவமன்னிப்புக்குப் போதாதகாரியமாயிருக்கிறது. விசுவாசிகளுக்குப் பாவமன்னிப்பு உத்தமமனஸ்தாபத்தினால் பலிக்காமல் கிறிஸ்துநாதருடைய மரணத்தினாலும் உத்தரவாத புண்ணியத்தினாலும் பலிக்கும். உத்தமமனஸ்தாபம் கிருபையினால் உற்பத்தியாகி விசுவாசத்தையும் அன்பையும் பற்றியிருந்து மனந்திரும்புதலையும் குணப்படுதலையும் உண்டுபண்ணி, கிறிஸ்துவின் புண்ணியம் பலிக்கும்படி செய்யும். "The blood of Christ procured for us the grace of repentance."

திரமல்ல, அதற்கடுத்தப் பிராயச்சித்தமும் இருக்கவேண்டுமென்று யாவரும் ஒத்துக் கொண்டு, அது யாவருக்குமுரிய தர்ம மென்று ஸ்தாபித்திருக்கிறார்கள். பாவப்பிராயச்சித்தத்திற்கே பலவித யக்கியங்களும் பலிகளும் அர்ப்பணங்களும் காணிக்கைகளும் நியமநிஷ்டைகளும் உலகத்தாருடைய பற்பல தர்ம நூல்களில் விதிக்கப்பட்டிருக்கிறது. பாவத்திற்கும் தண்டனைக்கும் இவ்வித தடைகளும் உபசாந்திகளும் இராவிட்டால் உலகஇயலில் இம்மையில் பாவம் மன்னிக்கப்படாமல் தண்டிக்கப்படுகிறபடியே மறுமையிலும் தண்டிக்கப்படுமென்றே தீர்மானிக்கவேண்டியதாகும்.

mankind, who add *sacrifice*, i. e. propitiation, to their repentance.

V. இம்மையில் செய்யப்படும் அக்கிரமத்துக்கு மறுமையில் உண்டாகும் தண்டனையைப்பற்றிய சந்தேகத்தையும் பயத்தையும் வேதமானது உறுதிப்படுத்தி, உலகமானது பாவக் கேட்டில் அமிழ்ந்திருக்கிறதென்றும், மனஸ்தாபத்தினால்மாத்திரம் தண்டனை நிவிர்த்தியாகாதென்றும், பாவம் நிவிர்த்தியாகி குற்றம் தண்டிக்கப்படாதிருப்பதற்கு தேவ அநுக்கிரகமாகிய அருளே அவசியமென்றும் வெளிப்படுத்துகிறது. பாவத்தையும் பாவநிவிர்த்தியையும், தேவகிருபையையும் அன்பையும் விளங்கப் பண்ணும் கிறிஸ்துமார்க்கத்துக்குரிய இந்த வேத உபதேசம் நம்முடைய புத்திக்கும் அநுபவத்துக்கும் விரோதமானதல்ல. "தேவன் தம்முடைய ஒரேபேறான குமாரனை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப்போகாமல் நித்தியஜீவனை அடையும்படிக்கு அவனைத் தந்தருளி, இவ்வளவாய் உலகத்தில் அன்புகூர்ந்தார்" என்று வேதம் திரு

E. The general doctrine of Revelation on these questions confirms these views. It confirms our fears, and tells us of the future consequences of vice. It supposes a state of ruin (a supposition not contrary to reason); teaches us that we cannot be pardoned through repentance alone, yet affirms that pardon is possible, therein revealing God's goodness in preventing punishment and bestowing salvation through the suffering of another, all which is consistent with what we already know of God; and if any object

வுளம்பற்றுகிறது.* லௌகிகவிஷயங்களில் மற்றவர்கள்மூலமாய் தேவன் நமக்கு உதவிசெய்கிறதுபோலவே வைதீகவிஷயங்களிலும் மத்தியஸ்தராகிய ஒருவர் மூலமாய் நமக்குச் சிறந்த உதவிசெய்துவருகிறார். அன்பைப் பெருக்கி நமது ஆருயிரைக் காக்கவந்த காரண குருவாகிய தேவசுதனானவர் உலகத்தார்களுக்காகத் தம்மைத்தாமே சமர்ப்பித்துப் பிராணத்தியாகஞ்செய்து புண்ணியதத்தம்பண்ணினார்.† இது மனோவாக்குக்கெட்டாத ஒப்பற்ற அன்பு; இது நீதியை நிறைவேற்றி இரக்கத்தை விளங்கப்பண்ணிற்று; இந்த அன்பினால் விளங்கிய புண்ணியம் அவரைப் பற்றிக்கொள்ளுகிற யாவருக்கும் பலிக்கும்; அதனால் அவர்கள் பாவம் நிவிர்த்தியாகித் தண்டனை விலக்கப்படும்.‡

1. That this doctrine is inconsistent with goodness; answer, that even the supposition that the whole creation had perished would not be inconsistent with it, therefore much less is this. Or

இந்த வேத உபதேசமானது தெய்வதயவுக்கு விகற்பமாயிருக்கிறதென்று ஆட்சேபிப்பவர்கள் அதைச் சற்று கவனித்துப் பார்ப்பார்களாகில் அதின் உண்மையை அறிந்துகொள்வார்கள். உலகமெங்கும் சீர்கேடு விளங்குகிறபடியால் உலகத்தை அழித்துப்போடுவது தேவநீதிக்கு ஏற்றதாயிருக்கும்; அதை அழித்துப்போடாமலிருப்பது அவருடைய தயவையும் இரக்கத்தையும் காண்பிக்கிறதல்லவா?

2. That it presupposes a degraded state; answer,
(a) That Christianity does not put us into this state,

பாவமும் பழியும் துன்பமும் துயரமும் உலகத்தில் உண்டென்று பிரத்தியட்சமாய் விளங்கும்; கொடுமையும் கேடும் உலகமெங்குமுண்டு. இந்த நிலைமை கிறிஸ்துமார்க்கத்தினால் உண்டாகாமல், அதினால் வெளிப்படுத்

* பேது. 3. 16. † தீத். 2. 14.

‡ இந்தப் புண்ணியத்தைக்குறித்துச் சொல்லும் கிறிஸ்துமார்க்க உபதேசத்தை இம்மையில் கேள்விப்பட்டவர்களுக்குமாத்திரம் இது பலிக்கும். மற்றவர்களுக்கு இது பலிக்காது என்று நாம் சொல்லத்துணியலாகாது. இந்த மார்க்கத்தைக்குறித்துக் கேள்விப்படாத உத்தமர்களை வேறு வழிவகையினால் கடவுள் ரட்சிக்கக்கூடாதா என்கிற கேள்விக்கும் நாம் உத்தரவுசொல்லத் துணியலாகாது. கிறிஸ்துநாதர் சர்வ ஜனங்களுக்குமுரிய ஜகத்குரு, ஆதிமுதல் அந்தம்வரைக்கும் சகலரையும் பிரகாசிப்பிக்கிற திருவிளக்கு அவரே. சகலருக்கும் அவர் மரணத்தை ருசிபார்த்தார். (எபி. 2. 9.) "அவர் எல்லா மனுஷருக்கும் விசேஷமாய் விசுவாசிகளுக்கும் ரட்சகர்." (1 தீமோ. 4. 10.) பிரசங்கரத்நாவளி 34-ம் பிரசங்கம் காண்க.

தப்பட்டு, அது நிவிர்த்தியாகும் வழிவகையும் அதினால் காண்பிக்கப்பட்டிருக்கிறது. உலகத்தின் பாவத்தையும் கொடுமையையும் உணருகிறவர்கள், தங்களுக்குள்ள குற்றங்களை உணர்ந்து முறையிட்டும், அவர்கள் உலகத்தில் இருக்க இருக்கப் பெரும்பாலும் பாவத்தில் உழன்று அதிக சீர்கேடு அடைகிறார்கள். வேதம் இதற்குச் சாட்சியிடுகிறது.

*(b)* That the fact we are in this state is confirmed by all experience (the best complain, and most grow worse with age.); and

என்னத்தினால் உலகத்தில் இந்தச் சீர்கேடு உண்டாயிருக்கிறதென்கிற கேள்விக்கு எளிதாய் உத்தரவு சொல்ல முடியாது. பாவமும் கேடும் உலகத்தில் உண்டென்று புலவர்களும் ஞானிகளும் வெகுவாய் எடுத்துரைத்திருக்கிறார்கள்; யாவரும் அதை ஒத்துக்கொள்ளுகிறார்கள். அதின் காரணத்தை அறியாமல் பிறப்பும் இறப்பும் சுகமும் துக்கமும் இந்த ஜந்மத்தில் அநுபவிக்கிற துன்பமும் துயரமும் முன் ஜந்மத்தில் செய்த தீவினையின் பயனென்று சிலர் சொல்லுவார்கள். உலக சீர்கேட்டின் காரணத்தைப்பற்றி உலகஞானிகள் சொல்லுகிற பற்பல விகற்பமான கொள்கைகள் நம்முடைய புத்திக்கும் அநுபவத்துக்கும் படாததாயிருக்கிறது. நமக்கு உண்டான சீர்கேடு நம்முடைய ஆதித்தாய் தகப்பன்மார் தங்களை உண்டாக்கினவரின் விதிவிலக்கை அநுசரியாமல் பாவிகளானதினால் வந்ததென்று சத்தியவேதம் சொல்லுகிற உபதேசமானது நமக்குப் பிரத்தியட்சமாய்த் தோன்றுகிற உலகஇயலுக்கு ஒத்திருக்கிறது.* ஆதாமினால் பாவம் வந்ததென்றும், கிறிஸ்து

*(c)* How we are so, and why, may be difficult to explain; yet the Scripture account is analogous to much around us, and to our recovery by Christ.

* ஆதாம் செய்த சிறிய சொற்பமான பாவத்திற்காக இவ்வளவு பெரிய கொடிய தண்டனை இடலாமா என்று ஆட்சேபிப்பவர்கள், ஒரு சிறிய துவாரம் ஒரு பெரிய கப்பலை முழுகச்செய்து, ஒரு சிறிய தீப்பொறி ஒரு பெரிய காட்டைக் கொளுத்திப்போடுமோ என்றும் ஆட்சேபிக்கவேண்டியதாகும். மேலும் ஜன்மபாவம் இல்லாதவனாக உண்டாக்கப்பட்டுப் பாவத்தை எதிர்த்து நின்று அதை மேற்கொள்ள சக்தியுள்ளவனுமிருந்த ஆதாமுக்கும், பாவத்தில் ஜநமித்து பாவத்துக்கு ஏதுவாயிருக்கிற மற்ற மனுஷர்களுக்கும் வெகு வித்தியாசமுண்டு. ஆதாம் சத்திய கடவுளுடைய நேரான கட்டளையை மீறி பொய்யனாகிய பசாசின் வசனத்துக்கு இடங்கொடுத்து பாவஞ் செய்தது சொற்பமானகாரியமாயிராமல் கொடும்பாதகமாயிருக்கிறது.

விஞல் புண்ணியம் வந்ததென்றும் வேதம் சொல்வது உலக இயலில் சம்பவிக்கும் காரியங்களுக்குச் சம்பந்தப்பட்டிருக்கிறது.

F. These considerations show that mediation generally is analogous to what we see in Nature; nor can any valid objection be taken to the particular manner in which Christ interposed.

VI. உலகத்தை ரட்சிக்கும்பொருட்டு கிறிஸ்துவானவர் ஏற்பட்ட விதத்தைப்பற்றி வேதத்தில் விபரமாய்க் கண்டிருக்கிறது. பலி, யக்கியம்முதலான முன்னடையாளங்களிஞலும், முன் குறிக்கப்பட்ட தீர்க்கதரிசன மொழிகளிஞலும், நேராகத் திருவுளத்தை வெளிப்படுத்தும் வேதவாக்கியங்களிஞலும் கிறிஸ்துநாதருடைய மத்தியஸ்த தொழில் வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது. அவர் திரு

1. The doctrine of Scripture is in general, that Christ came to teach, and then to die for us—This last fact is *especially* set forth in the Law, and clearly revealed in the Gospel.

வுளத்தை வெளிப்படுத்தும் பரமகுருவாகவும், உலக ஒளியாகவும், கிருபாதாரபலியாகவும் உற்சாகமாய்த் தம்மைத் தாமே புண்ணியபலியாக ஒப்புக்கொடுத்த பிரதான ஆசாரியராகவும்* வெளிப்பட்டார். பலியும் அவரே, பலியிட்டவரும் அவரே. பழைய ஏற்பாட்டில் விதித்திருக்கிற பலிகளுக்குரிய நியமநிஷ்டைகளெல்லாம் பொருளல்ல, நிழலாயிருந்தது. அவைகளெல்லாம் கிறிஸ்துவாகிய பொருளுக்குள் நிறைவேறின. கிறிஸ்துவின் மரணத்தையும் அதிஞல் பலிக்கும் உத்தரவாத புண்ணியத்தையும்பற்றி வேதத்தில் சொல்லியிருக்கிறதாவது: "நியாயப்பிரமாணமானது வரப்போகிற நன்மைகளின் பொருளாயிராமல், அவைகளின் நிழலாய்மாத்திரம் இருக்கிறபடியால், வருஷந்தோறும் இடைவிடாமல் செலுத்தப்பட்டுவருகிற ஒரேவிதமான பலிகளிஞலே அவைகளைச் செலுத்தவருகிறவர்களை ஒருக்காலும் பூரணப்படுத்தமாட்டாது." "காளை வெள்ளாட்டுக்கடா இவைகளுடைய ரத்தம் பாவங்களை நிவிர்த்திசெய்யமாட்டாதே. ஆகையால் அவர்

* Cur. 1. 8, 12. Cri. 3. 2. &c. Cur. 1. 29. &c.

உலகத்தில் பிரவேசிக்கும்போது: பலியையும் காணிக்கையையும் நீர் விரும்பவில்லை, ஒரு சரீரத்தை எனக்கு ஆயத்தம்பண்ணினீர். அப்பொழுது நான்: தேவனே, உம்முடைய சித்தத்தின்படி செய்ய, இதோ, வருகிறேன், புஸ்தகச்சுருளில் என்னைக்குறித்து எழுதியிருக்கிறது என்று சொன்னேன் என்றார்: தேவனே, உம்முடைய சித்தத்தின்படிசெய்ய, இதோ, வருகிறேன் என்று சொன்னார்; இயேசுகிறிஸ்துவினுடைய சரீரம் ஒரேதரம் பலியிடப்பட்டதினாலே, அந்தச் சித்தத்தின்படி நாம் பரிசுத்தமாக்கப்பட்டிருக்கிறோம்." "கிறிஸ்துவும் அநேகருடைய பாவங்களைச் சுமந்துதீர்க்கும்படிக்கு ஒரேதரம் பலியிடப்பட்டு, தமக்காகக் காத்துக்கொண்டிருக்கிறவர்களுக்கு ரட்சிப்பை அருளும்படி இரண்டாந்தரம் பாவமில்லாமல் தரிசனமாவார்."* எபிரெயருக்கு எழுதின நிருபத்தில் கிறிஸ்துவின் முத்தொழில்களைப்பற்றியும், அவருடைய மரணமாகிய உத்தரவாத புண்ணியபலியைப்பற்றியும் விபரமாய்ச் சொல்லியிருக்கிறது. பழைய ஏற்பாட்டின் காலத்தில் நியமிக்கப்பட்டிருந்த பலி சடங்குமுதலானவைகளெல்லாம் புதிய ஏற்பாட்டின்காலத்தில் கிறிஸ்துவுக்குள் விளங்கின நன்மைகளுக்கு நிழலாட்டமான குறிப்புகளும் அடையாளங்களுமாயிருந்தன.

"இயேசு யூதஜனங்களுக்காக மரிக்கப்போகிறாரென்றும், அந்த ஜனங்களுக்காகமாத்திரமல்ல சிதறியிருக்கிற தேவனுடைய பிள்ளைகளை ஒன்றாகச் சேர்க்கிறதற்காகவும் மரிக்கப்போகிறாரென்றும் தீர்க்கதரிசனமாய்ப் பிரதான ஆசாரியன் சொன்னான்."

"கிறிஸ்துவும் நம்மை தேவனிடத்தில் சேர்க்கும்படி அநீதியுள்ளவர்களுக்குப் பதிலாக நீதியுள்ளவராய்ப் பாவங்களினிமித்தம் ஒருதரம் பாடுபட்டார்;" "மனுஷகுமாரனும் ஊழியங்கொள்ளும்படி வராமல், ஊழியஞ்செய்யவும், அநேகரை மீட்கும்பொருளாகத் தம்முடைய ஜீவனைக்கொடுக்கவும் வந்தார். நம்மைக் கிரயத்துக்குக் கொண்டார்." "குற்றமில்

* எபி. 10: 1, 4, 5, 7: 9. 28.

லாத மாசற்ற ஆட்டுக்குட்டியாகிய கிறிஸ்துவின் விலையேறப்பெற்ற ரத்தத்தினாலே மீட்கப்பட்டீர்களென்று அறிந்திருக்கிறீர்களே."*

"கிறிஸ்து நமக்காக சாபமாகி நியாயப்பிரமாணத்தின் சாபத்துக்கு நம்மை நீங்கலாக்கி மீட்டுக்கொண்டார்." "அவரைப் பற்றின யாவரும் நித்தியரட்சிப்பை அடைவதற்கு அவர் காரணராக ரட்சிப்பின் அதிபதி உபத்திரவங்களினாலே பூரணப்படுத்தப்பட்டார்." "நாம் அவருக்குள் தேவனுடைய நீதியாகும்படிக்கு, பாவம் அறியாத அவரை நமக்காகப் பாவமாக்கினார்." "தேவன் உலகத்தாருடைய பாவங்களை எண்ணாமல், கிறிஸ்துவுக்குள் அவர்களைத் தமக்கு ஒப்புரவாக்கி, மரணத்துக்கு அதிகாரியாகிய பிசாசானவனைத் தமது மரணத்தினாலே அழித்தார்." "அவர் மனுஷரூபமாய்க் காணப்பட்டு, மரணபரியந்தம், அதாவது, சிலுவையின் மரணபரியந்தமும் கீழ்ப்படிந்தவராகி, தம்மைத்தாமே தாழ்த்தினார். ஆதலால், தேவன் எல்லாவற்றிற்கும் மேலாக அவரை உயர்த்தினார்." "பரமசேனைகள் மகா சத்தமிட்டு: அடிக்கப்பட்ட ஆட்டுக்குட்டியானவர் வல்லமையையும் ஐசுவரியத்தையும் ஞானத்தையும் பெலத்தையும் கனத்தையும் மகிமையையும் ஸ்தோத்திரத்தையும் பெற்றுக்கொள்ளப் பாத்திரராயிருக்கிறார் என்று அவரை ஸ்தோத்திரிக்கிறார்கள்."†

More particularly He appeared,

இப்பொழுது எடுத்துரைத்த வேதவாக்கியங்களெல்லாம் கிறிஸ்துவானவர் குரு, ராஜா, ஆசாரியர் ஆகிய முத்தொழிலையும் நடத்தும் பகாப் பொருளாய் வெளிப்பட்டார் என்று விளக்குகிறது.

First, As a Prophet; teaching the law of Nature, purely, authoritatively,

முதலாவது, கிறிஸ்து குருவாயிருக்கிறார். குருவுக்கு வேதத்தில் தீர்க்கதரிசியென்னும் பெயர் வழங்குகிறது. திருவுளத்தை வெளிப்படுத்துகிறவரே தீர்க்கதரிசி. மறைந்திருந்த உலக

* யோ. 11. 51, 52. 1 பே. 3. 18. மத். 20. 28. 2 பே. 2. 1. 1 பே. 1. 19.
† கலா. 3. 13. 2 கொ. 5. 21. எபி. 2. 10; 5. 9. 2 கொ. 5. 19. எபி. 2. 14. பிலி. 2. 8, 9. வெளி. 5. 12, 13.

இயலுக்குரிய மூலப்பிரமாணத்தை அவர் வெளிப்படுத்தி, மனுஷர் தெளிந்தபுத்தியும் நீதியும் தேவபக்தியுமுள்ளவர்களாய் உலகத்தில் ஜீவனம்பண்ணக் கற்பித்து, இம்மையில் செய்யும் நல்வினைக்கும் தீவினைக்கும் மறுமையில் பலனுண்டென்றும், ஒரு நியாயத்தீர்ப்புநாளுண்டென்றும் போதித்து, உலகஇயலுக்கும் பரமஅருளுக்கும் இருக்கும் சம்பந்தத்தைக் கூறி, தேவனை ஆராதிக்கும் விதத்தையும், குணப்பட்ட விசுவாசிகளுக்கு உண்டாகும் பலனையும் எடுத்துரைத்தார். அவர் திருவாய்மலர்ந்து போதித்ததுமாத்திரம் அல்ல, அவரை நாம் பின்பற்றி நடக்கும்படி நமக்கு நல்மாதிரியையும் காண்பித்திருக்கிறார். இவைமுதலானவை அவருடைய ராஜதொழிலுக்குரியது.

with new light, and adding many truths peculiar tō Himself, besides leaving us His own example.

இரண்டாவது, கிறிஸ்து ராஜாவாயிருக்கிறார். அவருடைய ராஜ்யம் இவ்வுலகத்திற்குரியதல்ல, அவர் ஏற்படுத்தின ராஜ்யமாகிய திருச்சபையானது உலகத்தில் தர்மநிலைக்கு ஆதாரமாயிருக்கிறது. அவருடைய சிஷர்களாகிய உத்தம விசுவாசிகளெல்லாரும் அந்த ராஜ்யத்தின் குடிகள். திருச்சபைக்குக் கிறிஸ்து தலையாயினும், பரிசுத்த ஆவியானவர் அதின் உயிரும் பயனுமாயிருக்கிறார்.* பரிசுத்தவான்கள் கடைத்தேறும்பொருட்டு, சுவிசேஷ ஊழியத்தின் வேலைக்காகவும் கிறிஸ்துவின் சரீரமாகிய சபையானது பக்திவிருத்தியடைவதற்காகவும், "அவர் சிலரை அப்போஸ்தலராகவும், சிலரைத் தீர்க்கதரிசிகளாகவும், சிலரைச் சுவிசேஷகராகவும், சிலரை மேய்ப்பராகவும், சிலரைப் போதகராகவும் ஏற்படுத்தினார்."† திருச்சபை என்னும் இந்த ராஜ்யத்தின் அவயவங்களாகிய விசுவாசிகள் இம்மையில் கிருபையும் மறுமையில் மகிமையும் அடைவார்கள். "என் பிதாவின் வீட்டில் அநேக வாசஸ்தலங்கள் உண்டு; அப்படியில்லாதிருந்தால், நான் உங்களுக்குச் சொல்லியிருப்பேன்; ஒரு ஸ்தலத்

Secondly, as a King; ruling in his Church; the number of which he is about to perfect, and to receive to glory.

* பேரா. 6. 4. † எபே. 4. 12, 13.

தை உங்களுக்காக ஆயத்தம்பண்ணப்போகிறேன். நான் போய் உங்களுக்காக ஸ்தலத்தை ஆயத்தம்பண்ணினபின்பு, நான் இருக்கிற இடத்திலே நீங்களும் இருக்கும்படி, நான் மறுபடியும் வந்து உங்களை என்னிடத்தில் சேர்த்துக்கொள்ளுவேன்."* "நான் ஜெயங்கொண்டு என் பிதாவினுடைய சிங்காசனத்திலே அவரோடேகூட உட்கார்ந்ததுபோல, ஜெயங்கொள்ளுகிறவனெவனோ அவனும் என்னுடைய சிங்காசனத்தில் என்னோடேகூட உட்காரும்படிக்கு அருள்செய்வேன்."† "ஏழாம் தூதன் எக்காளமூதினான்; அப்பொழுது உலகத்தின் ராஜ்யங்கள் நம்முடைய கர்த்தருக்கும் அவருடைய கிறிஸ்துவுக்குமுரிய ராஜ்யங்களாயின; அவர் சதாகாலங்களிலும் ராஜ்யபாரம்பண்ணுவார் என்னும் கெம்பீரசத்தங்கள் வானத்தில் உண்டாயின."‡ "கர்த்தராகிய இயேசு தமது வல்லமையின் தூதரோடும், ஜுவாலித்து எரிகிற அக்கினியோடும், வானத்திலிருந்து வெளிப்படும்போது அப்படியாகும்" என்று அவருடைய ராஜதொழிலைக்குறித்துச் சொல்லியிருக்கிறது.§

மூன்றாவது, கிறிஸ்து ஆசாரியராயிருக்கிறார். உலகத்தின் பாவத்தை நிவிர்த்திசெய்யும்படி அவர் தம்மைத்தாமே கிருபாதாரபலியாக ஒப்புக்கொடுத்தார். பலியிடுவது யூதர்களுக்குப் பூர்வ வேதவிதியாயிருந்ததுமல்லாமல், இந்துதேசத்திலும் மற்றத் தேசங்களிலும் பூர்வமுதல் யக்கியமுதலானவைகள் செய்யப்பட்டுவந்திருக்கிறது. கிறிஸ்து தம்மைத்தாமே பலியிடுகிறதினாலே பாவங்களை நீக்கும்பொருட்டாக இந்தக் கடைசிக்காலத்தில் ஒரேதரம் வெளிப்பட்டார்.‖ மற்ற பலிகளெல்லாம் இந்தப் பலிக்கு நிழலாட்டமான குறிப்புகளும் அடையாளங்களுமாயிருந்தன. பொருள் இதுவே, பயனும் இதுவே.

Lastly, as Priest; offering up Himself a sacrifice, universal, efficacious, and final.

இந்த உத்தரவாத புண்ணியபலியில் நம்பிக்கைவைத்து மனந்திரும்பி குணப்படுகிற பாவிகளுக்குப் பாவநிவாரண

* யோவா. 14. 2, 3. † வெளி. 3. 21. ‡ வெளி. 11. 15. § 2. தெச. 1. 8.
‖ எபி. 9. 26.

முண்டு. இயேசுகிறிஸ்துவானவர் ஜகத்குருவாக உதித்து, மனுஷர்களுக்குச் சத்தியத்தை உபதேசித்து, உத்தமராயிருந்து அவர்களுக்கு நல்வழி காண்பித்ததுமல்லாமல், அவருடைய உத்தரவாத புண்ணியபலியினால் நம்மையும் ரட்சண்ய நிலையில் கொண்டுவந்து நிறுத்தி, மனந்திரும்பிக் குணப்பட்டு விசுவாசிக்கிறவர்களுக்கு தம்முடைய புண்ணியம் பலிக்கும்படி செய்து, மோட்சகதியாகிய நித்தியஜீவனுக்குரியவர்களாக்கினார். இந்த சத்திய உபதேசத்தை அநுசரிப்பதே நம்மேல் விழுந்த கடமை; இதுவே நமக்குரிய பாக்கியம்.

VII. மனுஷர் ரட்சிக்கப்படும்படி மத்தியஸ்தர் ஒருவர் அவசியம் வேண்டியதென்பது வேதத்தினால்மாத்திரம் நாம் அறிந்துகொள்ளவேண்டியதாயிருக்கிறபடியால், அவ்விஷயத்தை நாம் சுதாவாய் அறிந்துகொள்ள ஏதுவில்லை. "குருவில்லாத வித்தையில்லை, குருவில்லாத சம்பிரதாயமுமில்லை" என்பதைப் பெரும்பாலும் ஜனங்கள் ஒத்துக்கொள்ளுகிறார்கள். வேதம் வெளிப்படுத்துகிற இவ்விஷயத்தைப்பற்றி நாம் ஆட்சேபிக்க இடமில்லை. இது பக்திக்கு அடுத்தவிஷயமாகையால் மத்தியஸ்தனைப்பற்றியும், அவருடைய தன்மையைப்பற்றியும், அவருடைய தொழிலைப்பற்றியும் நம்முடைய சொற்பபுத்தியினால் அளவிடுகிறது விபரீதமாயிருக்கும். என்றாலும் ஒரு மத்தியஸ்தராகிய பரமகுரு ஆத்தும ரட்சிப்புக்கு அவசியமல்லவென்று யாதாமொருவர் ஆட்சேபித்து, அதற்கடுத்த நியாயஞ்சொல்லக்கூடுமானால் அதை நாம் கவனித்தறியவேண்டியது அவசியமே. அவ்விதமான நியாயம் சொல்லக்கூடாமல் சிலர் இவ்விஷயத்தைப்பற்றி குயுக்தியான ஆட்சேபனைகளைமாத்திரம் சொல்லத்துணிவார்கள்.

G. Hence, since we are ignorant of much that mediation involves, objections against the scheme of mediation generally, and against the Scriptural scheme, are futile; whether against

1. The necessity of it.

2. The nature, parts, and duties of the Mediator's office, unless such objections are founded upon the unfitness of the means to the end proposed.

3. பலமான நியாயமாய்த் தோன்றும் ஒரு ஆட்சேபனை என்னவென்றால்: உலகத்தின் பாவத்தை நிவிர்த்திசெய்ய ஒரு மத்தியஸ்தர் பாடுபட்டு மரணமடைகிறது குற்றவாளிகளுக்காகக் குற்றமற்றவர் பாடுபட்டு மரணமடைகிறதாயிருக்கிறபடியால், அது நியாயமல்ல, நீதிவழுவு, என்று சிலர் சொல்லுவார்கள்.

3. Of unfit means, the suffering of Christ, as innocent for guilty, is supposed to be an example; but the answer is obvious:

இந்த ஆட்சேபனை கிறிஸ்துமார்க்கத்துக்குரிய இந்த உபதேசத்தைமாத்திரமல்ல, உலகஇயலில் நடக்கும் கடவுளுடைய செயலையும் பொதுவான தர்மத்தையும் பற்றும். குற்றவாளிகளுக்காகக் குற்றமற்றவர்கள் தண்டிக்கப்படுகிறது உலகத்தில் சகஜமாய் நடக்கிற காரியம். உலகஇயலுக்குக் காரணகடவுளானவர் வேதத்துக்குங் காரணகடவுளானபடியால் இயலுக்குரியது அருளுக்குமுரியதே. இவ்விரண்டிலும் ஊடாடினவர்களுக்கு இதின் உண்மை எளிதில் விளங்கும்.

(a) In the constitution of nature men thus suffer.

(b). மேலும் இவ்விஷயத்தை நன்றாய்க் கவனிக்கும்போது, கிறிஸ்துமார்க்கத்தைப்பற்றிச் சொல்லிய இந்த ஆட்சேபனை விசேஷமாய் உலகஇயலையே பற்றும், எப்படியெனில், உலகத்தாருக்கு நேரிடுகிற துன்பங்கள் உற்சாகமாய் அல்ல, கட்டாயமாயும் அவர்களுடைய சித்தத்துக்கு விரோதமாயும் நேரிடுகிறது. கிறிஸ்துவுக்கு நேரிட்ட துன்பம் கட்டாயமாயல்ல, உற்சாகமாய் அவருடைய சித்தத்துக்கு ஏற்றபடி நேரிட்டது. இந்த நுட்பத்தைப் பகுத்தறிந்தால் ஆட்சேபனைக்கு இடமிராது.*

(b) Against that constitution the argument is still stronger, for Christ suffered *voluntarily*.

(c) தர்மமாய் நடத்தப்படுகிற உலகஇயலில் மனுஷர் செய்யும் நல்வினை தீவினைகளுக்குத்தக்கதாய் முடிவில் பலாபலன் அடைந்து தீரவே

(c). In the end all (Christ included)

---

* "சண்ணும்பி லிருக்கிறது குட்சம்
குட்சத்திலிருக்கிறது மோட்சம்"

என்னும் பழமொழிப்படி, ஜீவகாரணர் ஜீவனைக்கொடுக்கவும் எடுக்கவுங்கூடும். தம்முடைய ஜீவனையே உற்சாகமாய்க் கொடுத்து நம்முடைய ஜீவனை ரட்சித்தார்.

ண்டியதே. என்றாலும் நவோந்தரத்தில் ஒருவருக்காக ஒருவர் பாடுபட்டுத் துன்பப்படவேண்டியிருக்கிறது. பிணையாளிகள் உத்தரவாதிகள் முதலானவர்கள் பிறருக்காக நஷ்டப்பட்டுத் துன்பப்படுகிறது சாதாரணமான காரியமானபடியால் அந்த மனுஷர் விசேஷமாய்க் கவனிக்கிறதில்லை.

will be treated according to their deserts.

(d) ஒருவர் சம்பாத்தியம் பலருக்கு ஜீவனம்; ஒருவன் பட்ட கடன் வேறொருவன் தீர்க்கவேண்டியதாகும்; தகப்பன் அடைந்த வியாதி மகனுக்குமுரியதாகும்; இவையெல்லாம் இயற்கையான சம்பவங்கள்; கிறிஸ்துமார்க்கத்தில் விளங்கும் இந்த முத்தியஸ்தக்கொள்கை நூதனமானதல்ல, இது யாவரும் ஒப்புக்கொள்ளத்தக்கது.*

(d.) Such suffering is formed, in fact, to contribute largely to the relief of man; and

மேலும் கிறிஸ்துநாதருடைய உத்தரவாத புண்ணியத்தினால் மனுஷர்களுக்கு ரட்சிப்பு உண்டென்கிற இந்த உபதேசம் தர்மத்தை நாட்டி, தேவநீதியை நிறைவேற்றி, வேதப்பிரமாணத்தை ஸ்தாபித்து, பாவத்தை நிவிர்த்தியாக்கி, பாவியைக் குணப்படுத்தி, தன்னை அறிந்து பாவத்தை வெறுக்கும்படி செய்து, விசுவாசத்தை உண்டுபண்ணி, அன்பை எழுப்பி, நன்றியறிதலைப் பிறப்பித்து, புண்ணியநிலையில் நிறுத்தும்.

(e) The reasonableness of the doctrine and its fitness for the end, is seen in its natural tendency to vindicate God's laws, and deter men from sin.

ஆதலால் பாவிகளுக்கு அவசியமான இந்தப் பரம உபதேசம் தகாததென்று சிற்றறிவாளராகிய நமக்குத் தோன்றுகிற குயுக்தியினால் அதை ஆட்சேபிக்கத் துணிவது தகுதியல்ல.

(f) The objection, moreover, really means that it is not fit, because we do not see it to be so.

---

* "தேற்றினர் பணிந்தது வென்னின் னிறைவனென்றே
சாற்றினர் புயிர்க்கிடர் தணிப்பதென வென்றும்
தோற்றியுள தம்புதல்வர் துன்பமுற மக்கோப்
மாற்றுமவ்வகை யன்னைய ரருந்திய மருந்தாம்." (வேதநூற் புராணம்.)

4. தாங்கள் பகுத்தறியக்கூடாத காரியங்களைப்பற்றி ஆட்சேபனை செய்வது புத்திமான்களுக்கு லட்சணமல்ல. தெய்வச்செயலைக் கூடிய மட்டும் பகுத்தறிவது பக்தர்களுடைய காரியமானாலும், நமக்கு விளங்காத புத்திக்கு மேற்பட்ட காரியங்களை நம்முடைய அறியாமையினாலும் குயுக்தியினாலும் ஆட்சேபிப்பது தகுதியல்ல. நம்முடைய அறிவுக்கும் அநுபவத்திற்கும் படத்தக்கதாய் உலகஇயலில் தோன்றும் காரியங்களே கிறிஸ்துமார்க்கத்திலும் விளங்கும்போது, அவைகளைப்பற்றி வீணான ஆட்சேபனை செய்வது அகங்காரமல்லவா? நம்முடைய அறிவீனத்தையே நியாயமாக எடுத்து நாட்டுவது மூடத்தனமல்லவா? வேத உபதேசம் உலகஇயலுக்கு நேர்விரோதமானால் அதைத் தள்ளவேண்டியது அவசியமே, அதற்கு ஒத்திருக்குமானால், நம்முடைய சொற்பபுத்திக்கு எட்டாமற்போனாலும், அதை அநுசரித்து அங்கீகரிப்பது நியாயமே. அனந்தஞானமுடைய திருவுளத்தில் தோன்றி விளங்கும் சத்தியம் முழுமையையும் நாம் அறியக்கூடாது. நமக்குத் தோன்றிய அதற்குரிய சில பகுதிகளைப்பற்றி முற்றும் அறிந்துணர்ந்தவர்கள்போல ஆட்சேபிப்பதும் தகுதியல்லவே.

4. Such objections are all unreasonable, for they are based upon our ignorance; that is, the reason of the arrangement is not told us, and yet we object to it; they are most unreasonable, because, so far as we can judge, it is analogous to natural facts; besides, it is part of the doctrine in which we are not actively concerned; further

5. நாம் நடக்கவேண்டிய கடமைகளைப்பற்றிமாத்திரம் நமக்குப் போதுமான விதிவிலக்கும் நியாயமும் அருளப்படவேண்டியது அவசியமாயினும், தெய்வச்செயலைப்பற்றி அவ்விதமாய் நமக்கு அறிவிக்கப்படவேண்டியது அவசியமில்லை. நாம் நன்மைதீமை இன்னதென்றும், தக்கது தகாதது இன்னதென்றும் அறிந்துகொள்ளவேண்டிய காரியங்கள் நமக்குத் தெளிவாய் அறிவிக்கப்

5. From Scripture and from analogy we learn that, while *our duty* is made clear, we are not to expect the same clearness in what Scripture tells us of the Divine conduct.

பட்டிருக்கிறது. பரமரகசியங்கள் நமக்கு அறிவிக்கப்படவேண்டியதில்லை. உலகஇயலிலும் வேதத்திலும் நமக்குப் போதுமானமட்டும் வெளிப்படையாய் அநேக காரியங்கள் அறிவிக்கப்பட்டிருக்கிறது, மற்றவைகளை நாம் அறியவேண்டியதில்லை. நாம் இங்கே அறிகிற காரியங்களையும் கொஞ்சங்கொஞ்சமாய் அநுபவத்தினால் அறிந்துகொள்ளுகிறோம்.

(a) In nature we gather rules of life by experience. Of the vast scheme of Providence we know little; so

(b) மத்தியஸ்த விஷயத்தைப்பற்றி நாம் அறிந்துகொள்ளவேண்டிய நமக்குரிய காரியங்கள் வேதத்தில் நமக்குத் தெளிவாய் வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது. அவ்விஷயத்தில் தேவனுக்கும் மத்தியஸ்தருக்குமுரிய காரியங்கள் நமக்குத் தெளிவாய் அறிவிக்கப்படவில்லை. அது நமக்கு அவசியமல்ல. உலகஇயலிலும் வேதப்பொருளிலும் நமக்கு விளங்காத அநேக பரமரகசியங்களுண்டு. கடவுள் "தம்முடைய மகிமையினாலும் காருணியத்தினாலும் உலகஇயலில்ஜீவனுக்கும் வேதஅருளில் தேவபக்திக்கும் வேண்டிய யாவற்றையும் நமக்கு வெளிப்படுத்தியிருக்கிறார்" என்று வேதமே சாட்சியிடுகிறது.* கடவுள் இட்டதே நமக்குச் சட்டம், வேதத்தில் விளங்கிய பொதுவிதிகளெல்லாம் தெளிவாய் விதித்திருக்கிறது. அவைகளை அநுசரித்துக் கைக்கொள்வது நமது கடமை. நமக்குக் கடமையாக விதிக்கப்பட்டநேரான விதிகளின் நியாயமும் தெளிவாயிருக்கிறது. ஆசாரங்களையும் நியமநிஷ்டைகளையும் பற்றிய சில விதிகளுக்கு நியாயம் விளங்காமற்

(b) Analogously in Scripture, the things not understood relate to God's part, not to human duty. In both there is much we can understand; but our duties are always clear, whether moral or positive, and the reasons for them; and even if they were not, the fact that they are commanded is sufficient to make them binding.

"The constitution of the world, and God's natural government over it, is all mystery, as much as the Christian dispensation. Yet under the first He has given us all things pertaining unto life; and under the other, all things pertaining unto godliness."

* 2 பேது. 1. 3.

போனாலும் அவைகள் தவறாத திருவுளத்தினால் விதிக்கப்பட்டிருப்பதே அவைகளைக் கைக்கொள்வதற்குப் போதுமான நியாயம். இரட்சணியத்துக்குரிய மத்தியஸ்தத் தொழிலை நடத்தும் பரமகுருவுக்கு நாம் செய்து செலுத்தவேண்டிய கடமைகள் வேதத்தில் தெளிவாய் விதிக்கப்பட்டிருக்கிறபடியால் அவைகளை அநுசரிப்பதே நமக்குரிய கடமை.

*Appendix.*

[அநுபந்தம்.—"நான் அவருக்குப் பிரதியுத்தரஞ்சொல்லுகிறதற்கும், நாங்கள் கூடி நியாயத்திற்கு வருகிறதற்கும் அவர் என்னைப்போல மனுஷனல்லவே. எங்கள் இருவர்மேலும் தன் கையை வைக்கத்தக்க மத்தியஸ்தன் எங்களுக்குள் இல்லையே."* "தேவன் ஒருவரே, தேவனுக்கும் மனுஷருக்கும் மத்தியஸ்தரும் ஒருவரே; எல்லாரையும் மீட்கும்பொருளாகத் தம்மை ஒப்புக்கொடுத்த மனுஷனாகிய கிறிஸ்து இயேசு அவரே; இதற்குரிய சாட்சி ஏற்றகாலங்களில் விளங்கிவருகிறது."† இவ்விரண்டு வசனங்களும் மத்தியஸ்தர் உண்டென்கிற கொள்கையை ஸ்தாபிக்கிறது. மனுஷர் ஒருவரையொருவர் பற்றிநாடி நத்தி ஜீவனஞ்செய்கிறார்கள். தகப்பன்பேரைக்கொண்டு மகன் பிழைக்கிறான். பெரியோருடைய நற்சாட்சிக்காகிதம் பெற்றுக்கொண்டு அநேகர் உத்தியோகம் சம்பாதிக்கிறார்கள். மற்றவர்கள் கையெழுத்துப்போட்டு உத்தரவாதிகளாகப் பிணை நிற்க அநேகர் கடன்வாங்குகிறார்கள். பிள்ளைகளுக்குக் கண்ட வியாதிதீர தாய்மார் மருந்துண்டு பத்தியம் பிடிக்கிறார்கள். பிள்ளையில்லாதவன் வேறொருவனுடைய பிள்ளையை தத்துப்புத்திரனாக ஏற்றுக்கொள்ளுகிறான். ராஜமுத்திரை மோதிரத்தை உடையவனுக்கு தான் எத்தனித்துப்போகும் காரியம் சித்திக்கும். சில வருஷங்களுக்குமுன்னே தஞ்சாவூரில் பஞ்சமுண்டானபோது தஞ்சாவூர் ராஜாவினாலேயும், கும்பினியாராலேயும் ஜனங்களுக்கு தானியம் சம்பாதிக்கக்கூடாதிருக்க, சுவார்ச்சையர் நடுநின்று குடிகளிடத்திலும் வியாபாரிகளிடத்திலும் பேசினபோது; அவர்களுக்கு அவர்பேரிலிருந்த

---

* யோபு, 9. 32, 33. † 1 தீமோ. 2. 5, 6.

விசுவாசத்தினாலும் மதிப்பினாலும் களஞ்சியங்களைத் திறந்து வேண்டிய தானியங்களை விற்றார்கள்.

"நல்லா ரொருவ ருளரேல் அவர்பொருட்
டெல்லார்க்கும் பெய்யு மழை."*

மனுஷன் நிர்ப்பந்தமான பாவியாயிருக்கும்போது அவன் தன்னைத்தான் ரட்சிக்கக்கூடாது.†

"ஒருவனாவது, தன் சகோதரன் அழிவைக் காணாமல் இனி என்றைக்கும் உயிரோடிருக்கும்படி, எவ்விதத்தினாலாவது அவனை மீட்டுக்கொள்ளவும், அவனிமித்தம் மீட்கும் பொருளை தேவனுக்குக் கொடுக்கவுங்கூடாதே." அவன் தன் பாவத்துக்காக மனஸ்தாபப்பட்டாலும் அவன் பாவம் நிவிர்த்தியாகாது. துர்நடக்கையினால் சுகத்தையும் பொருளையும் இழந்தவன் அவைகளை மறுபடியும் எளிதில் சம்பாதிக்கக்கூடாது. ஆகையால், ஒரு மத்தியஸ்தர் வேண்டியதே. சிருஷ்டிகர்த்தாவாகிய பரமாத்துமாவுக்கும் சிருஷ்டியாகிய ஜீவாத்துமாவுக்கும் இடையூறாய் சம்பவித்த பாவத்தாலும் பகையினாலும் விரோதம் நேரிட்டிருக்கிறது. இதை நீக்கி ஒப்புரவுண்டாக்க ஒரு மத்தியஸ்தர் வேண்டும். விமலநாயகராகிய இயேசுகிறிஸ்து மத்தியஸ்தராக ஏற்பட்டு மன்னுயிர்க்காகத் தன்னுயிர் தந்து அவர்களை மீட்கும்பொருளாகத் தம்முடைய ஆருயிரைக் கொடுத்து, புண்ணியதத்தம்பண்ணி, தேவனுக்கு தேவனாகவும் மனுஷருக்கு மனுஷனாகவும் நடுநின்று அவர்கள் இருவரையும் பிரித்த நடுச்சுவரைத் தகர்த்து அவர்கள் இருவருக்கும் நடுவில் இருக்கும் பெரும்பிளப்பையும் ஆற்றையுங் கடந்துபோகத்தக்க பாலத்தை உண்டுபண்ணி இருதரத்தாரையும் ஒருமைப்படுத்தினார்.

---

* விசுவாசப்பிரமாணவிளக்கத்திலும் பிரசங்க ரத்நாவளியிலும் சொல்லியிருக்கிற சான்றுகளைக் காண்க.

† பாபோ அஹம், பாபகர்மா அஹம்
பாபாத்மா, பாப சம்பவஹ,
திராஹிமாம், புண்டரீகாக்ஷா
சர்வ பாப ஹரோ ஹரி.

பாபி நான், பாபஞ் செய்பவன் நான், பாபாத்மா, பாபத்தில் பிறந்தவன், ரட்சியும் என்னை தாமரைக் கண்ணனாகிய சர்வபாபஹரியே.

"ஒருவர்பொறை இருவர்நட்பு."

"உடன்பிறந்தார் சுற்றத்தா ரென்றிருக்க வேண்டாம்
உடன்பிறந்தே கொல்லும் வியாதி—உடன்பிறவா
மாமலையிலுள்ள மருந்தே பிணிதீர்க்கும்
அம்மருந்துபோல் வாரு முண்டு."

"அவர்தாமே சோதிக்கப்பட்டு பாடுபட்டதினாலே, அவர் சோதிக்கப்படுகிறவர்களுக்கு உதவிசெய்ய வல்லவராயிருக்கிறார்." "நம்முடைய பலவீனங்களைக்குறித்துப் பரிதபிக்கக் கூடாத பிரதான ஆசாரியர் நமக்கிராமல், எல்லாவிதத்திலும் நம்மைப்போல் சோதிக்கப்பட்டும், பாவமில்லாதவராயிருக்கிற பிரதான ஆசாரியரே நமக்கிருக்கிறார். ஆதலால் நாம் இரக்கத்தைப் பெறவும், ஏற்றசமயத்தில் சகாயஞ்செய்யுங் கிருபையை அடையவும் தைரியமாய்க் கிருபாசனத்தண்டையிலே சேரக்கடவோம்." *

"தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்ற லரிது."

"செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது."



* எபி. 2. 18 ; 4. 15, 16.

# CHAPTER VI.

*Of the want of universality in Revelation: and of the supposed deficiency in the proof of it.*

## 6—ம் அதிகாரம்.

**வேதம் சாதாரணமாய் யாவருக்கும் ஒரேவேளையில் அருளப்படவில்லையென்றும், அது கடவுளால் அருளப்பட்டதென்பதற்குப் போதுமான அத்தாட்சிகள் இல்லையென்றும் சொல்லப்படும் ஆட்சேபனைகளைப்பற்றிச் சொல்லியது.**

*வேதம் சத்தியமானால் சமுசயமான அத்தாட்சிகளுக்குரியதாயிராதென்றும், வேதத்துக்குரிய அத்தாட்சிகள் சமுசயப்படத்தக்கவைகளானால் அது வேதம் சத்தியமல்லவென்பதற்கு உறுதியான நியாயமென்றும் சிலர் பாவித்து, வேதமானது உலகத்திலுள்ள யாவருக்கும் சாதாரணமாய் ஒரேகாலத்தில் அருளப்படாதிருப்பதே அதற்குப் பெருங்குறைவென்று சொல்லி, வேதத்தின் உண்மைக்கு இது விரோதமான நியாயமென்று ஆட்சேபிப்பார்கள்.*

The evidence of Revelation is deficient, it is said, and so the Revelation is not true. Revelation is not universal, it is said, and therefore not true. These objections, which are made (it will be noticed) positive arguments against religion, are against both natural and revealed. Note—

*இந்த ஆட்சேபனையைச் சற்றுக் கவனித்துப்பார்ப்போமானால் அது வியர்த்தமானதென்று விளங்கும். இது எப்படியிருக்கிறதென்றால், கடவுள் யாருக்காவது தயவுபாராட்டினால் அந்த தயவை அவர் யாவருக்கும் சமரஸமாய் அவரவர் இஷ்டத்துக்கு ஏற்றபடி பாராட்டவேண்டுமென்றும், யாவ*

A. These objections are groundless, for they rest upon these two groundless suppositions;

1. That God will not bestow favour upon us, except in that degree which

we think most advantageous.

2. That God will not bestow blessings upon some, except He bestow them upon all. Suppositions which the general analogy of Nature contradicts.

ருக்கும் பொதுப்பட சமரஸமான தயவை அவர் பாராட்டாமற்போனால் ஒருவருக்கும் அவர் தயவுபாராட்டக்கூடாதென்றும் சொல்வதுபோலிருக்கும். இவ்வித அபிப்பிராயம் உலகஇயலில் பிரத்தியட்சமாயும் சாதாரணமாயும் நடந்தேறிவருகிற தெய்வச்செயலுக்கும் நடத்துதலுக்கும் நேர்விரோதமாயிருக்கிறது.

B. These objections are answered by analogies in God's natural Government.

வேத அத்தாட்சிகள் சமுசயத்துக்குரியவைகளென்று ஆட்சேபனை செய்கிறவர்கள் லௌகீக விஷயங்களில் தங்களுக்குரிய காரியங்களை எந்த அத்தாட்சியைக்கொண்டு நடத்துகிறார்களென்று கவனித்துப்பார்க்கவேண்டும். தங்களுக்குரிய

1. The evidence, it is said, is doubtful, because deficient. But so is the evidence

லௌகீக காரியங்களெல்லாம் சந்தேகங்களாலும் சமுசயங்களாலும் சூழப்பட்டிருக்கிறதே. தாங்கள் படுகிற பாடுகளுக்குத் தக்கபலனை அடைவார்கள் என்கிற நிச்சயம் மனுஷர்களுக்கு உண்டா? தாங்கள் பிரயாசப்பட்டு

(a) Of what constitutes our temporal interests; and

சம்பாதித்ததை அநுபவிப்பார்களென்கிற நிச்சயம் உண்டா? நம்முடைய குணமும் பெலனும் சுகமும் மாறுகிறபடியால் அநுபவசக்தி குறைந்துபோகிறதே. நம்முடைய சுகதுக்கங்களையும் இன்பதுன்பங்களையும்

(b) Of the best and surest means of attaining it.

சமரஸப்படுத்தக்கூடாதே. நடுவாந்தரத்தில் நேரிடுகிற விக்கினங்களினால் நம்முடைய முயற்சிகள் வீணாகி, பிறர்செய்யும் துரோகங்களினால் நம்முடைய பிரயத்தனங்கள் பயன்படாமற்போகிறதும் உண்டே. நம்முடைய முயற்சிகளின் பலன் சமுசயத்துக்கும், நம்முடைய பிரயத்தனங்களின் பலன் சந்தேகத்துக்கும் உரியவைகளாயினும், மனுஷர் இவைகளினால் தடைபடாமல் விடாமுயற்சியோடு தங்கள் காரியசித்திக்கு வேண்டிய பிரயத்தனங்களையெல்லாம் செய்துவருகிறார்களே.

வேதம் யாவருக்கும் பொதுப்பட சாதாரணமாய் ஒரேகாலத்தில் அருளப்படவில்லையென்னும் ஆட்சேபனை இருபக்கமும் கருக்குள்ள பட்டயம்போலிருக்கிறது. கடவுளானவர் ஆயுள், சுகம், செல்வம், கல்வி, சாமர்த்தியம் முதலான வரங்களைச் சிலருக்கு அளிக்கிறபடியே யாவருக்கும் அளிக்கக்காணோம். மனுஷர்கள் யாவரும் பார்வையிலும், உருவத்திலும், நிலையிலும், ஸ்திதியிலும், தன்மையிலும், குணத்திலும் ஒருவிதமாயிராமல் பலவிதமாயிருந்து, சிலர் ஐசுவரியவான்களும் சிலர் தரித்திரருமாயிருக்கிறார்களே. இவ்வித விகாரங்களும் வேற்றுமைகளும் இருந்தாலும் கடவுளின் செயலால் உலகஇயல் நடந்தேறி வருகிறது. மனுஷர் தங்கள் விவேகத்துக்குத்தக்க சுகத்தையும் அவிவேகத்துக்குத்தக்க துக்கத்தையும் பெரும்பாலும் அநுபவித்துவருகிறார்கள்.

2. Revelation is not, it is said, universal. But so neither is the bestowal of natural gifts; which want of universality, however, is no argument against God's natural Government, nor against the prudent management of our affairs under it.

முதலாவது, யூதர்களுக்கு அருளப்பட்ட பழைய ஏற்பாடாகிய வேதமும், இரண்டாவது, கிறிஸ்தவர்களுக்கு அருளப்பட்ட புதிய ஏற்பாடாகிய வேதமும் பூர்வத்திலிருந்த அந்த ஜனங்களுக்குமாத்திரம் விசேஷமாய் அருளப்பட்டாலும் அவர்கள்மூலமாய் வேதஒளி பற்பலகாலத்தில் உலகத்திலுள்ள பற்பல இடங்களுக்கும் ஜனங்களுக்கும் எட்டிப் பல அத்தாட்சிகளினால் பயன்பட்டுவந்திருக்கிறது. மோசேமுதலான தீர்க்கதரிசிகளின் காலமுதல் யூதர்கள் பாபிலோன் தேசத்துக்குச் சிறைப்பட்டுப்போன காலமட்டும் இருந்த யூதர்களுக்கு உண்டாயிருந்த வேத அத்தாட்சிகள் சிறந்ததாயிருந்தது. அவர்களுடைய பின்னடியாராகிய யூதர்களுக்கு அந்த அத்தாட்சி குறைவாயிருந்தது. அப்படியே இப்பொழுது இருக்கிற கிறிஸ்த

This evidence, and the partial bestowment of truth, illustrated in the successive ages of Judaism and Christianity; in the condition of the heathen and of Mahomedans, and of those who live under a corrupt religious system, &c; and the whole shown to be analogous to facts in Nature, and in the providence of God.

வர்களுக்கு உண்டாயிருக்கிற வேத அத்தாட்சியைப்பார்க்கி லும் அப்போஸ்தலரின் காலத்திலிருந்த பூர்வ கிறிஸ்தவர்க ளுக்கு இருந்த அத்தாட்சி சிறந்ததாயிருந்தது. அவர்கள் தெய்வ அற்புதங்களைக் கண்ணாலேகண்டு, ஞான உபதேசங்களைக் கா தாலே கேட்டு, பரம சத்தியத்தை உள்ளத்தில் உணர்ந்து, அந்த சத்தியத்தினால் தங்களிடத்திலும் பிறரிடத்திலும் விளங்கின குணப்படுதலைக் கவனித்து, தாங்கள் அநுசரித்த வேதத்தின் உண்மைக்குரிய அத்தாட்சிகளை அறிந்துகொண்டார்கள். கிறி ஸ்துமார்க்கத்தைக்குறித்து பூர்வ கிறிஸ்தவர்களுக்கு உண்டாயி ராத அத்தாட்சி இக்காலத்திலுள்ள நமக்கும் இனியுண்டாகும் பின்னடியாருக்கும் உண்டு; அதாவது, "இருளுள்ள ஸ்தலத்தில் விளக்கைப்போல் பிரகாசிக்கிற உறுதியான தீர்க்கதரிசன வசு னம் நமக்குண்டு" என்று வேதம் சொல்லுகிற அத்தாட்சியே.*

சூரியனுடைய ஒளி சில இடங்களில் பூரணமாயும், சில இடங்களில் குறைவாயும், சில இடங்களில் அநேகநாள் மறை யாமலும், சிலநாள் மறைந்தும் பிரகாசிக்கிறதுபோலவே, வேத ஒளியும் சில இடங்களில் பூரணமாயும், சில இடங்களில் குறை வாயும், சில இடங்களில் சிலகாலம் மறையாமலும் சிலகாலம் மறைந்தும் பிரகாசிக்கிறது. "மனுஷஜாதியான சகல ஜனங் களையும் தேவன் ஒரே ரத்தத்தினாலே தோன்றப்பண்ணி, பூமியின்மீதெங்கும் குடியிருக்கச்செய்து, முன் தீர்மானிக்கப் பட்ட காலங்களையும் அவர்கள் குடியிருப்பின் எல்லைகளையும் குறித்திருக்கிறார். கர்த்தராகிய தம்மை அவர்கள் தடவியாகி லும் கண்டுபிடிக்கத்தக்கதாகத் தம்மைத் தேடும்படிக்கு அப்ப டிச் செய்தார்; அவர் நம்மில் ஒருவருக்கும் தூரமானவரல்ல வே." "காணப்படாதவைகளாகிய அவருடைய நித்திய வல் லமை தேவத்துவம் என்பவைகள், உண்டாக்கப்பட்டிருக்கிற வைகளினாலே, உலகம் உண்டானது முதற்கொண்டு தெளி வாய்க் காணப்படும்; ஆதலால் மனுஷர்கள் போக்குச்சொல்ல இடமில்லை."† இந்த இயல்வேதம் உலகத்தார் யாவருக்கும் பொது. இதை மனுஷர் தகுந்தபடி கையாடாமல் பலவித

---

*2 பேது. 1. 19. †அப். 17. 26, 27. ரோ. 1. 20.

மாய் விகாரப்படுத்தினார்கள். இயல்வேதத்துக்குச் சாட்சியாக அருள்வேதம் அளிக்கப்பட்டிருக்கிறது. ஒரு இடத்தில் அருளோதயம் உண்டானால் ஏற்றகாலத்தில் எங்கும் அது பரவுமென்பதற்குச் சந்தேகமில்லை.* இந்துதேசத்தார் நாலுவேதம் ஆறுசாஸ்திரம் பதினெண்புராணங்களை உடையவர்களாயினும்

"சாத்திரத்தைச் சுட்டுச் சதுர்மறையைப் பொய்யாக்கிச்
சூத்திரத்தைக் கண்டு சுகம்பெறுவ தெக்காலம்"

என்று சொல்லி, அவர்களில் சிலர் சத்தியவேதமாகிய அருளோதயத்துக்குக் காத்திருந்தார்கள். மகம்மதியர் பக்கவழியாய் இந்த அருளோதயத்தினால் கொஞ்சம் தெளிவுபெற்றார்கள். இந்தத் திருவிளக்கைப் பெற்றுக்கொண்ட சிலர் திருவிளக்கு மங்கி யெரியும்போது அதைத் தூண்டிவிடாமல் மறைத்துவைக்கிறது முண்டு. சிலர் வேதப்பொருளைப் பலவிதமாய் விகாரப்படுத்தி வியர்த்தமாக்குகிறதுமுண்டு. சத்தியவேதமானது திருவுளத்தில் அடங்கியிருக்கிற மறைபொருள்களாகிய பரம ரகசியங்களை நமக்கு வெளிப்படுத்தாமல், நாம் அவசியம் அறியவேண்டிய காரியங்களையும், நாம் நம்பி நடக்கவேண்டிய கடமைகளையும்மாத்திரம் தெளிவாய் நமக்கு வெளிப்படுத்துகிறது. இந்த விஷயத்திலும் இயலில் எவ்விதமாய் சம்பவிக்கிறதோ அப்படியே அருளிலும் சம்பவிக்கிறதுண்டு.

உலகஇயலில் இப்படிச் சம்பவிக்கிறது அநீதியென்று நாம் குற்றம்பாராட்டக்கூடாது. "அவனவனுக்கு இல்லாததின்படியல்ல, அவனவனுக்கு உள்ளதின்படியே பலனளிக்கப்படும் என்றும்," "எவனிடத்தில் அதிகம் கொடுக்கப்படுகிறதோ அவனிடத்தில் அதிகம் கேட்கப்படும்" என்றும் வேதம் சொல்லுகிறது.† என்றாலும் இயலை

C. This reasoning, defended by the fact, that every man will be treated according to his light and privileges; though this statement does not imply either

1. That all men's religious condition is

* காருணிய கடவுள் நல்லார்மேலும் பொல்லார்மேலும் மழையை வருஷிக்கப்பண்ணுகிறார். சர்வ கிர்த்தியமும் நன்மைக்கேதுவாக விதிக்கப்பட்டனவென்னும் கோட்பாட்டின்படி (Optimism) மழை பெய்யவேண்டிய இடத்தில் பெய்யாமல் சிலவேளைகளில் சமுத்திரத்திலும் மணற்காட்டிலும் வீணாய்ப் பெய்யவேண்டியதென்ன? இதன் காரியம் திருவுளத்துக்கே விளங்கும்.

† 2 கொரி. 8. 12. லூக். 12. 48.

equally advantageous; or
2. That we ought not, therefore, to improve our own condition, or that of others.

உடையோர் அருளையும் நாடவேண்டியது அவசியம். அறிவினரும் மூடரும் படித்துத் தேறவேண்டியது எப்படி அவசியமோ, அப்படியே பாவ இருளிலிருக்கிறவர்களும் வேதஒளியில்வந்து இருளையும் மருளையும் போக்கிக்கொள்ளவேண்டியதும் அவசியமே.

D. What the reasons of this arrangement are, we cannot tell; but it may be said,
1. Generally, that the same principle which disposed God to make various orders of creatures, and with various capacities, disposed Him to place creatures of the same order (and even the same creatures, at different periods,) in different positions.

சர்வ ஞானமுள்ள காரணக்கடவுளானவர் சிருஷ்டிகளைப் பலவிதமாகப் படைத்து, ஒருவிதமான சிருஷ்டிகளைப் பலவித நிலைமைகளிலும் அந்தஸ்துக்களிலும் அமைத்து வைத்திருக்கிறதற்குக் காரணம் இன்னதென்று நமக்கு விளங்காது. நம்முடைய நிலைமைகள் மாறிமாறி வருகிறதுமுண்டு. நமக்குரிய நிலைமை இன்னதென்று நமக்கே விளங்காது. இப்பிறப்பில் நாம் அநுபவிக்கிற சுகதுக்கங்கள் முற்பிறப்பின் பயனோ அல்லவோ என்பதும் நமக்கு விளங்கவில்லை; இப்பிறப்பில் நாம் செய்யும் நல்வினை தீவினையின் பயன் பிற்பிறப்பில் பலிக்குமோ இல்லையோ என்பதும் விளங்கவில்லை. மறுமை உண்டென்பது நம்மை நல்வினைக்கு ஏவுகிறதென்பதை மாத்திரம் இயலினாலும் அருளினாலும் அறிந்திருக்கிறோம்.

2. More particularly, it is very difficult to give a reason; as may be seen from our own case. A system like ours, implies
Things past and future, unknown to us, but possibly containing the explanation:
It requires too, variety, which may

வேதஅறிவு உலகத்திலுள்ள சகலருக்கும் ஒரேகாலத்தில் அருளப்பட்டிருந்தாலும்,மனுஷருடைய ஜீவகாலமும் குணபேதமும் நிலைமைகளும் சம்பவங்களும் பலவிதமாயிருக்கிறபடியால் தர்மவிஷயத்தில் அவர்களெல்லாரும் பலவிதமாயிருப்பார்களே ஒழிய ஒருவிதமாயிருக்கமாட்டார்களென்பதற்குச் சந்தேகமில்லை. இந்த பேதாபேதங்களை நாம் அறிந்துகொள்ளக்கூடாதாகையால், நம்முடைய சொற்ப அறிவே நம்

முடைய அறியாமைக்குக் காரணமென்று ஒத்துக்கொள்ளவேண்டியதாயினும், பின்வரும் சாதாரண நியாயங்களைக் கவனித்துப்பார்த்தால் இவ்விஷயத்தைப்பற்றிச் சில காரியங்களை அறிந்துகொள்ளலாம்.

supply the reason.

And, at all events, the reason why we are placed in a state of ignorance, is probably also the reason, why the reason of our being in that state is not told us.

முதலாவது, உலகஇயலை முற்றிலும் அறிந்துகொள்ளக்கூடாது. மனுஷர்களுடைய நிலைமை இப்படியிருக்கிறபடியால் இந்த அறிவீனத்தைக்குறித்து அங்கலாய்த்து முறையிடுகிறதற்கு ஏதுவில்லை.

E. That this arrangement is no ground of complaint, appears from the following facts:—

1. வேதவிஷயத்தைப்பற்றிய அத்தாட்சி தெளிவாயிராமல் கருதலாயிருப்பது சில மனுஷர்களுடைய தர்மநிலைமையைப் பரீட்சிக்கிறதற்கு ஏதுவாயிருக்கலாம். கருதலாயிருக்கும் காரியத்தைப் பகுத்தறியும்படி முயற்சி செய்யாமலிருப்பது குற்றமும், முயற்சி செய்து அறிந்துகொள்வது தர்மமுமாயிருக்கும். லௌகீகவிஷயங்களை நாம் முயற்சிசெய்து அறிந்துகொள்வதுபோலவே வைதீகவிஷயங்களையும் முயற்சி செய்து அறிந்துகொள்வது நியாயமே. வேத அத்தாட்சிகளையும் உதாரணங்களையும் ஆராய்ச்சிசெய்து பகுத்தறியும்பொருட்டு பாரபட்சமில்லாமல் முயற்சிசெய்கிறவனே வேதவிதிகளைக் கைக்கொள்ள முயற்சிசெய்வானென்பதற்குச் சந்தேகமில்லை.* இப்படி வேத உதாரணத்தை ஆராய்ச்சிசெய்து

1. The deficiency of Christian evidence may be a part of our intellectual probation, intended to exercise our minds virtuously in examining the evidence. Such exercise in intellectual matters, may as easily test our fairness and candour, as probation in practice.

* “தெய்வசித்தத்தின்படி செய்ய மனதுள்ளவனெவனோ அவன் இந்த (வேத) உபதேசம் தேவனால் உண்டாயிருக்கிறதோ, நான் சுயமாய்ப் பேசுகிறேனோ என்பதை அறிந்துகொள்ளுவான்” என்று ரட்சகர் சொல்லியிருக்கிறார். (யோ. 7. 17.) வேத அத்தாட்சியானது தன் நடக்கைக்குப் போதுமானதென்று தீர்மானித்து வேதத்தை ஏற்றுக்கொள்ளாதவன் அது தன் விசுவாசத்துக்குப் போதுமானதென்று தீர்மானித்து ஏற்றுக்கொள்ளமாட்டான் என்று வேதசாஸ்திரி ஒருவர் சொல்லியிருக்கிறார். “I am not sure that any one can be a fair judge of the sufficiency of the evidence to determine belief, until he had allowed it to determine behaviour.” *Fitzgerald*—கண்ணில்லாதவனுக்குச் சூரியவெளிச்சத்தையும், செவி இல்லாதவனுக்குச் சத்தத்தின் மதுரத்தையும் மெய்ப்பிக்கக்

அறிந்துணர்ந்துகொள்ள விருப்பமில்லாவிடில் அகங்காரத்தினாலே அதை அசட்டைசெய்து அதின் விதிவிலக்குகளை அநுசரிக்காமல் கெட்டுப்போகிறதற்கு ஏதுவுண்டு. வேத அறிவு மனுஷர்களுக்கு இயற்கைவாசனையினால் உண்டாகாமல் செயற்கைவாசனையினால் உண்டாகவேண்டியதாயிருக்கிறபடியினால்அதை விசாரித்து சீர்தூக்கி அநுவயித்து அறிந்துகொள்ள வேண்டியது நம்முடைய கடமையாயிருக்கிறதுமல்லாமல், அப்படிச்செய்வது நம்முடைய உத்தமத்தையும் விளக்குவிக்கும். ஆகையால் நியாயமான சந்தேகம் முயற்சிக்கும் ஆராய்ச்சிக்கும் இடங்கொடுக்குமேயல்லாமல், வெறுப்புக்கும் பராமுகத்துக்கும் இடங்கொடாது. இப்படிச்செய்வது தர்மமும் இப்படிச் செய்யாமலிருப்பது அதர்மமுமாம்.

Doubt does not justify neglect or indifference.

2. இரண்டாவது, சமுசயமுள்ள மனம் ஒருபட்சத்தில் துணியாமல் இருபட்சத்தின் நடுவில் ஊசலாடிக்கொண்டிருக்கும். எந்த விஷயத்தைப்பற்றியும், விசேஷமாய் தர்ம விஷயத்தைப்பற்றியே, நிச்சயம் பிறந்து ஒருதலைதுணிவு உண்டாகிறதற்குமுன்னே முயற்சியைக் கையாடி இயன்றமட்டும் ஆராய்ச்சிசெய்யவேண்டும். ஒருவன் நமக்குப் பிரத்தியட்சமாய் உபகாரஞ்செய்திருந்தால் நாம் அவனுக்கு நன்றியறிதலைப் பாராட்டுவது நம்முடைய கடமை. ஒருவன் நமக்குச் செய்யக்கூடிய உபகாரத்தைச் செய்யாமற்போனது பிரத்தியட்சமாய் விளங்கினால் நாம் நன்றியறிதல் பாராட்டவேண்டியதில்லை. ஒருவன் நமக்கு உபகாரஞ்செய்தானோ செய்யவில்லையோ என்று நாம் சமுச

2. It may be part of our general moral and religious probation, that it proves our character, thus:

---

கூடாது. தனக்கு அகத்தில் கடவுளையும் தர்மத்தையும் கண்டறியாதவன் தனக்குப் புறத்தில் கண்டறியவேண்டுமென்பது எப்படியிருக்கிறதென்றால், தான் நின்றநிலையில் வானவில்லைக் கண்டவன் வேறுநிலையில் அந்த வானவில்லைக் கண்டறியத் தேடுவதுபோலிருக்கும். "இருதயத்தில் பரிசுத்தமுள்ளவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் தேவனைத் தரிசிப்பார்கள்" என்று வேதம் சொல்லுகிறபடியே,

"பொய்வளரு நெஞ்சினர்கள் காணாத காட்சிதனை
மெய்வளரு நெஞ்சினர்கள் கண்டு களித்திடுவர்"

என்று புலவர்களும் சொல்லுகிறார்கள்.

யங்கொண்டிருந்தால், அந்த விஷயத்தை விசாரித்து அறிந்து சமுசயந் தீரும்வரைக்கும் ஒருதலை துணிவுகொள்வது நியாய மல்ல. தர்மவிஷயத்தைப்பற்றின வேதத்துக்கடுத்த நியாயங் கள் நமக்குப் பூரணமாய் விளங்காமற்போனாலும், அது மெய் யாயிருக்கும், அதை அநுசரிப்பதினால் நஷ்டமில்லை பிரயோ ஜனமுண்டு என்பதைக் கருதி துணிவது விவேகமாயிருக்கும்.

If religion is only supposably creditable,

(*a*) Serious inquiry, and moral self-control, are made obligatory; and profanity, carelessness and presumption, are thereby condemned: especially

வேதவிஷயங்களைப்பற்றி சமுசயங்கொண்டபோதிலும் அவைகள் உண்மையாயிருக்கலாம் என்று கருதி, காரியங்களைச் சீர்தூக்கி ஆய்ந்தோ ய்ந்துபார்த்து கடவுள் வழிபற்றித் தீவி னை ஒழித்து அடக்கம் ஒழுக்கமுள்ள வர்களாயிருந்து, பக்திவிநயமுள்ளவர்க ளாய் நடந்து, இம்மை மறுமைக்குரிய சம்பந்தத்தை நாடி தர்மநிலையில் கவலை யுற்றிருப்பதே உத்தமம். வேதத்தை ஆரா ய்ந்து அறியுமுன் அதைப் பழித்து நிந்திப்பது மதியீனம். "தர் மமே ஜயம், தர்மம் தலைகாக்கும்" என்னும் சத்தியத்தை உணர் ந்தறிய விரும்புகிறவர்கள் வேதத்தைப் பழிக்கமாட்டார்கள்.

(*b*) As our example will have influence with others, the reason being,

தனமும் கனமுமுடைய பெரியோர்கள் வேதப்பொருளை அறியவேண்டுமென்கிற விருப்பத்தோ டே வேதத்தை ஆய்ந்தோய்ந்து விசாரணை செய்கிற நல்நடக்கையினால் மற்றவர்க ளுக்கு நல்மாதிரிகாண்பித்து நன்மைசெய்கிறார்கள்.

1. That doubt supposes *some* evidence; and

இரு தலை துணிவிராமல் சம்சயத்துக்கு இடமி ருக்குமானால் சந்தேக நிவிர்த்தியாகிய நியாயத்துக்கும் இடமிருக்கும். அத்தாட்சியைப் பற்றி சமுசய ங்கொள்வது கடைநிலை; நம்பிக்கைகொள்வது இடைநிலை; நிச்சயங்கொள்வது தலைநிலை. இந்த மூன்று நிலைகளும் இகபர விஷயங்களைப்பற்றி சகஜமாய் வழங்கிவருகிறது. நம்முடைய புத்திக்கும் அநுபவத்துக்கும் எட்டினமட்டும் இவைகளை நாம் கையாடவேண்டும்.

owing to something in the objector; either

லாம். அப்படியானல் அது அவர்களுடைய குற்றமென்றேசொல்லவேண்டும்.

1. To his fault—want of earnestness in attention to evidence, &c, just as in practical matters; or

வேதவிஷயங்களின் அத்தாட்சிகள் போதுமானதாயிருந்தாலும் சிலர் அவைகளை அறியவேண்டுமென்கிற மனவிருப்பத்தோடே உறுதி ஊக்கம் முயற்சிமுதலியவைகளைக் கையாடாமலும், அது உண்மைப்படாதிருப்பதே நலமென்று மனதில் இரகசியமான விருப்பங்கொண்டும் அதற்குரிய தெளிவான அத்தாட்சிகளைக் கவனியாமல், அதைப்பற்றிச் சொல்லப்படும் விபரீதமான ஆட்சேபனைகளைமாத்திரம் கவனித்துக் கவலையற்று பராமுகமாயிருப்பவர்களுமுண்டு. அப்படிப்பட்டவர்களுக்கு வேதவிஷயங்களின் அத்தாட்சிகள் விளங்காதிருப்பது அதிசயமல்ல. வேதவிஷயங்களுக்குரிய தத்துவார்த்தத்தையும் உண்மைப்பொருளையும் அறியநாடாமல், அதினுடைய விபரீதமான பத அர்த்தங்களையும் தப்புறையான பாவனைகளையும் போலிப் பொருள்களையும்மாத்திரம் நாடுகிறவர்களுக்கு வேத உண்மை விளங்குவதெப்படி?

இருளிலும் மருளிலும் இருக்க விரும்புகிறவர்களுக்கு அருளும் பொருளும் விளங்காது.

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."

செல்வத்திலெல்லாம் சிறந்த செல்வமாகிய செவிச்செல்வத்தை நாம் அடையும்பொருட்டு "காதுள்ளவன் கேட்கக்கடவன்" என்று இரட்சகர் திருவுளம்பற்றியிருக்கிறார். இவ்விஷயத்தில் "முயற்சியில்லார் இகழ்ச்சியடைவார்." இப்படிப்பட்டவர்களைக்குறித்தே "அவர்கள் கேட்டும் உணராதவர்களாயும் கண்டும் அறியாதவர்களாயும் இருக்கிறார்கள்" என்று வேதம் சொல்லுகிறது.*

---

* மத். 11. 15, 25: 13. 13, 14. தானி. 12. 10. யோவா. 3. 19: 5. 44: 7. 17. 2 கொரி. 2. 14. காண்க.

இயலினாலும் அருளினாலும் விளங்கும் விஷயங்களுக்குரிய அத்தாட்சிகள் சாதாரண மனுஷர்களின் புத்திக்கு எட்டாதவைகளாயிராது. இவைகளை அறியவேண்டுமென்கிற விருப்பமாத்திரமிருந்தால், மற்றெந்த உலகக் கவலைகளிருந்தாலும், நாம் அவசியம் அறியவேண்டிய தர்மங்களை அறிந்துகொள்ளலாம். அவர்கள் உலகவிஷயங்களில் கருத்துள்ளவர்களாயிருக்கிறபடியே வேதவிஷயங்களிலும் கருத்துள்ளவர்களாயிருப்பார்களானால், உலகத்தைப் படைத்து ஆளுகிற தேவன் ஒருவர் உண்டென்றும், தாங்கள் அவரால் உண்டாக்கப்பட்டவர்களென்றும், நன்மைதீமை இன்னதென்றும், தீதொழிய நன்மைசெய்வதே தங்கள் கடமையென்றும் அறிந்துகொள்ள ஏதுவிருக்கிறதுமல்லாமல், கிறிஸ்துமார்க்கம் உண்மையென்பதற்குப் பலவித புறச்சாட்சிகள் அகச்சாட்சிகளாகிய போதுமான உதாரணங்கள் உண்டென்றும் அறிந்துகொள்ள ஏதுவுண்டு. வேத ஆட்சேபனைகளை மற்றவர்களைக்கொண்டு காதாலேகேட்பதும் அதைப்பற்றி மற்றவர்களிடத்தில் வாயாலே பேசுவதும் போதாது. அவைகளை மண்ணோட்டைக்கொண்டு சரீரக்கண்ணினால் பார்ப்பதுபோலப் பாராமல் தெளிவான பளிங்கு ஓட்டைக்கொண்டு மனக்கண்ணினால் உள்ளே ஊடுருவப் பார்த்துப் பகுத்தறிந்து தீர்மானம்பண்ணவேண்டும். "நீதிமானுக்காக வெளிச்சமும் செம்மையான இருதயத்தாருக்காக மகிழ்ச்சியும் விதைக்கப்பட்டிருக்கிறது" என்று வேதம் சொல்லுகிறது. "அவருடைய சித்தத்தின்படி செய்ய மனதுள்ளவனெவனோ அவன் வேத உபதேசம் தேவனால் உண்டாயிருக்கிறதோ நான் சுயமாய்ப் பேசுகிறேனோ என்று அறிந்துகொள்வான்" என்றும், "சத்தியவான் எவனும் என் சத்தம் கேட்கிறான்" என்றும் இரட்சகர் திருவுளம்பற்றியிருக்கிறார்.

2. To his requiring more than a popular proof of Christianity, without applying the necessary examination or knowledge.

That evidence is level to the common understanding; but is liable to objections. Many *see* those objections, without giving time to *see through them.* Still the evidence, properly regarded, *or* thoroughly considered, is real and conclusive.

It may; indeed, be objected,

என்றாலும் ஒரு ராஜாவாவது எஜமானாவது தன் ஊழியக்காரருக்குக் கட்டளை அனுப்பும்போது அந்தக் கட்டளை சந்தேகத்துக்கு இடங்கொடாமல் தெளிவாயும் விபரமாயும் இருக்கவேண்டுவதுமன்றி, அது உண்மையான கட்டளையென்று திருஷ்டாந்தப்படும்படி சரியான கையொப்பம் இடப்பட்டு தகுந்த முத்திரையினால் முத்திரிக்கப்பட்டிருக்கவேண்டும்; அப்படியே வேதகட்டளையும் இருக்கவேண்டியதில்லையா என்று சிலர் ஆட்சேபித்துக் கேட்பார்கள். மனுஷர்களுக்குரிய இந்த நியாயம் கடவுளுக்குப் பற்றுமா என்று கவனித்துப்பார்க்கவேண்டும். நமக்குரிய சுகதுக்கத்துக்கடுத்த உலககாரியங்களில் கடவுள் நமக்கு இவ்வித சந்தேகப்படத்தகாத நேரான விபரமான கட்டளைகளைக் கொடுக்கக்காணோம். மேலும் அரசர்கள் விதிக்கும் உலகக் கட்டளைகள் புறம்பான நடக்கையைமாத்திரம் பற்றும், கர்மாதாரங்களுக்குரிய உள்ளான நோக்கங்களையும் எண்ணங்களையும் பற்றாது; உலககட்டளைகள் நடக்குங்காரியத்தை மாத்திரம் பற்றும்; வேதக்கட்டளைகள் நம்மைப் பரீட்சிக்கத்தக்க நடக்கையையும் அந்த நடக்கைக்குரிய கருத்தையும் நோக்கத்தையும் பற்றும். "உள்ளத்தா லுள்ளலுந் தீதே" என்பது வேதப்பிரமாணமேயல்லாமல் தேசப்பிரமாணமல்ல. வேதகட்டளையானது காரணகாரியத்தையும் அவற்றிற்குரிய தர்மாதர்மத்தையும் அவற்றாலுண்டாகும் பலாபலனையும் பற்றும்.

3. That, whatever the source of this deficiency, the evidence ought to be without doubt, as the directions of earthly masters are. To which answer—

*(a)* That wherever the fallacy lies, there is fallacy; for in temporal affairs, God (our Master) does not give evidence free from doubt: moreover,

*(b)* Religion differs from all external commands. It seeks not external obedience simply, but the testing and exercise of our principles. That is best secured by commands less plain. Besides, God's will is conditional; ending in either obedience and reward, or vice and punishment.

தர்மநிலைமையென்பது பரீட்சை நிலைமையென்பதற்குச் சந்தேகமில்லை. இதுவே இம்மைக்குரிய நம்முடைய நிலைமை. இது மெய்யானால் மேலே சொல்

G. In conclusion, as religion implies probation, the probation may consist in the very things which are here made

லிய நியாயங்களெல்லாம் நம்முடைய நிலைமைக்கு அடுத்த நியாயங்களே. துர்க்குணத்தினாலும் அஜாக்கிரதையினாலும் நாம் பரீட்சிக்கப்படுகிறபடியே குறைவான அத்தாட்சியினாலும் நாம் பரீட்சிக்கப்படலாம்.

grounds of objection: 1. Judging from the reason of the thing, it seems that we may be tried by deficient evidence, as easily as by inattention or passion.

சில லௌகீகவிஷயங்களைப்பற்றி துர்க்குணத்தினாலும் அஜாக்கிரதையினாலும் விசாரணைசெய்யாமலிருப்பதினால் சந்தேகத்துக்கு இடமுண்டாகிறதுபோலவே, வைதீகவிஷயங்களைப்பற்றியும் விபரமான சங்கதிகளைப் பிரயாசப்பட்டு அறியாதிருப்பதினால் சந்தேகத்துக்கு இடமுண்டாகிறது; இதைச் சோதனையென்று சொல்லலாம்.

2. Judging from experience, we are often tried by causes which produce doubts (imperfect information, &c), as by inattention or passion.

மேலே சொன்ன நியாயங்கள் சிலருக்கு விகற்பமாய்த் தோன்றினாலும் தோன்றும். இவ்விதமான ஆட்சேபனைகளைச் செய்து வேதவிதிவிலக்குகளை அநுசரியாமலிருக்கிறவர்கள் ஆட்சேபனைகளுக்குச் சொல்லப்பட்ட சமாதானங்கள் போதுமானதல்லவென்று உணர்ந்ததினால் அல்ல, தங்களுடைய துர்க்குணமே தங்களை மேற்கொள்ளுகிறதினால் வேதஉதாரணங்களை ஒத்துக்கொள்ளாமலும் வேதவிதிவிலக்குகளை அநுசரியாமலுமிருக்கிறார்கள். உலகவிஷயங்களில் போதுமான நியாயங்கள் இல்லாமற்போனாலும் சொற்ப ஆதாரங்களைக்கொண்டே நாடோறும் நாம் நடந்து நம்முடைய காரியங்களையெல்லாம் நிறைவேற்றும்போது, வேதவிஷயங்களில்மாத்திரம் அதிக நியாயங்கள் இருக்கவேண்டுமென்று கருதுவது நியாயமோ? அல்லவே. இது நமக்குரிய மனக்குறையே ஒழிய வேதத்துக்குரிய அத்தாட்சிக்குறையல்ல.

3. Hence (to sceptics); it may be said, that scepticism may spring from want of solicitude; not from want of evidence; and that in daily life we act, where the probability is against success, and if only it is *possible* we may succeed.

## CHAPTER VII.

*Of the particular evidence for Christianity.*

## 7—ம் அதிகாரம்.

### கிறிஸ்துமார்க்கத்துக்குரிய நேரான அத்தாட்சிகளைப்பற்றியது.

Having considered objections against any revelation, and against the Christian revelation particularly, consider now the positive evidence for Christianity, and the objections against that evidence; the whole divisible into two parts.—

அருள்வேதத்தைப்பற்றியும், கிறிஸ்துமார்க்கத்தின் உபதேசங்களைப்பற்றியும் சொல்லிய ஆட்சேபனைகளைக் கவனித்தோம். கிறிஸ்துமார்க்கம் உண்மையென்பதற்கு உண்டாயிருக்கிற நேரான அத்தாட்சிகளையும், உறுதியான திருஷ்டாந்தங்களையும் அவைகளை உறுதிப்படுத்துகிறதற்கு உலகஇயலில் விளங்கிய நியாயங்களையும் இப்பொழுது கவனிப்போம்.

கிறிஸ்துமார்க்கத்தை உறுதிப்படுத்துகிற நேரான அத்தாட்சிகளும் சார்பான அத்தாட்சிகளுமுண்டு. அற்புதங்களும் தீர்க்கதரிசனங்களும் உறுதியுள்ள நேரான அத்தாட்சிகள்; அவைகளுக்கு இசைவாக வேறே சார்பான அத்தாட்சிகளுமுண்டு. இவைகளெல்லாம் ஆதிமுதல் தொன்றுதொட்டு வந்திருக்கிற அத்தாட்சிகள். இவைகள் காரணத்துக்கும் காரியத்துக்குமுரிய சம்பந்தங்களைக் காட்டும்.

i. The evidence from miracles and prophecy;

இந்த அதிகாரத்தில் முதலாவது, அற்புதங்களையும் தீர்க்கதரிசனங்களையும் பற்றிய அத்தாட்சிகளைக் கவனித்து, அவைகளுக்கு விரோதமாய்ச் சொல்லப்படும் ஆட்சேபனைகளை உலகஇயலோடு ஒத்திட்டு, அவற்றால் விளங்கிய நியாயங்களை எடுத்துக் காண்பிப்போம்.

இரண்டாவது, மேற்சொல்லிய நேரான அத்தாட்சிகளையும், அவைகளுக்குச் சார்பான வேறே அத்தாட்சிகளையும் கவனித்து, அவைகளால் கிறிஸ்துமார்க்கத்துச்குரிய ஏகவுதாரணத்திரட்டை எடுத்துக் காண்பிப்போம்.

ii. The direct and collateral evidence considered as making one argument.

PART I.

முதலாம் பங்கு.

---

கிறிஸ்துமார்க்கத்துக்குரிய நேரான அத்தாட்சிகளாகிய அற்புத அத்தாட்சியையும் தீர்க்கதரிசன அத்தாட்சியையும், அவற்றிற்கு விரோதமாய்ச் சொல்லப்படும் ஆட்சேபனைகளையும் கவனிப்போம்.

## I. அற்புத அத்தாட்சி.

வேதத்துக்கு அத்தாட்சியாகச் செய்யப்பட்ட அற்புதங்கள் வேதத்தில் கண்டிருக்கிற சரித்திரசம்பவங்களினால் விளங்கும்.

A. On miracles as evidences for Christianity, note

1. மோசேமுதலான யூதர்களுடைய சரித்திரம் பழைய ஏற்பாட்டில் எழுதப்பட்டிருக்கிறபடியே, மோசேமுதலான தீர்க்கதரிசிகள் செய்த அற்புதங்களும் அந்தப் பழைய ஏற்பாட்டிலேயே எழுதப்பட்டிருக்கிறது. கிறிஸ்துநாதரையும் அவருடைய அடியாராகிய அப்போஸ்தலமார்களையும் குறித்துச் சொல்லிய சரித்திரம் புதிய ஏற்பாட்டில் எழுதப்பட்டிருக்கிறபடியே, கிறிஸ்துநாதரும் அவருடைய அப்போஸ்தலர்களும் செய்த அற்புதங்களும் அந்தப் புதிய ஏற்பாட்டிலேயே எழுதப்பட்டிருக்கிறது. மகாத்துமாக்களுடைய சரித்திரங்களும், அவர்கள் செய்த அற்புதங்களும் வெவ்வேறாய்ச் சொல்லப்படாமல் ஏகமாய்க் கலந்து யாவருக்கும் விளங்கும்படியான

1. The Bible gives the same evidences for miraculous as for common history.

(a) The narrative of miraculous and of common history is equally plain.

நாடோடிய சாதாரணநடையில், உள்ளதை உள்ளபடிசொல்லப்பட்டிருக்கிறது. மற்றவர்களுக்கு வியப்புண்டாகும்படி அரும்பதங்களையும் அலங்காரவிதிகளையும் பிரயோகித்துக் கருதலான நடையில் பிரபந்தங்களை இயற்றுகிறவர்கள் இப்படிச் செய்யமாட்டார்கள். வேதத்தில் கண்டிருக்கிற அற்புதங்கள் ஆதிமுதற்கொண்டு உண்மையாய் நடந்தகாரியங்களாக எடுத்துரைக்கப்பட்டிருக்கிறது. மேலும் வேதத்தில் நடந்ததாகச் சொல்லியிருக்கிற அற்புதங்கள் அந்தந்தக்காலத்தில் இருந்த மற்ற கிரந்தகர்த்தர்களாலும் எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது.

(b) The accounts of miracles are quoted as genuine.

(c) The accuracy of the account of miracles is attested by contemporaneous and by later events.

அந்தந்தக் காலங்களில் இந்த அற்புதங்கள் நடந்தபடியினாலேயே யூதமார்க்கமும் கிறிஸ்துமார்க்கமும் உண்மைபெற்று பூலோகத்தில் ஸ்தாபிக்கப்பட்டது. இந்த அற்புதங்கள் நடவாமற்போனால் இந்த மார்க்கங்கள் ஸ்தாபிக்கப்படவும், அவைகளில் கண்டிருக்கிற நியமநிஷ்டைகள் வழங்கிவரவும் முகாந்தரமிராது. வேதசரித்திரம் மெய்யான சரித்திரமாகையால் வேதஅற்புதங்களும் மெய்யான அற்புதங்களாக விளங்குகிறது. ஆதலால் வேதஅத்தாட்சி பொய்யென்று விளங்குமட்டும் நாம் அந்த அத்தாட்சியை அங்கிகரிப்பதே நம்முடைய கடமையென்று ஒத்துக்கொள்ளவேண்டும்.

(d) And the most obvious explanation of the reception of this history is its truthfulness, so that

(e) It ought to be received till there is reason for rejecting it.

2. பவுல் அப்போஸ்தலன் எழுதிய நிருபங்கள் திருமுகவழக்கென்னப்படும் சாதாரண நடையில் பற்பல சபைகளுக்கும் எழுதப்பட்டிருக்கிறபடியால், அவைகள் உண்மையாய் அவராலேயே எழுதப்பட்டதென்று விளங்குகிறதுமன்றி, கிறிஸ்துமார்க்கத்தின் உண்மைக்கு உதாரணங்களாயுமிருக்கிறது.

2. St. Paul's Epistles, which are proved genuine, are an additional and peculiar proof of the miracles of Christianity.

அவர் கொரிந்தியருக்கு எழுதின முதல் நிருபத்திலிருந்து பூர்வத்திலிருந்த கிலெமென்ஸ் ரோமேன்ஸ் என்பவர் ஒரு வாக்கியத்தை மேற்கோளாக எடுத்து எழுதியிருக்கிறபடியினால், அக்காலத்திலிருந்தவர்கள் அதை நிராகரிக்காமல் உண்மையாக ஒத்துக்கொண்டார்களென்று விளங்குகிறது.

பவுல் அப்போஸ்தலன் தம்முடைய நிருபங்களில் சுவிசேஷ சத்தியத்தையும், நற்கருணையாகிய இராப்போஜன கட்டளையையும் மனுஷர் மூலமாய் அல்ல, நேராய் தேவனாலேயே பெற்றுக்கொண்டேனென்றும் சொல்லியிருக்கிறதுமன்றி, கிறிஸ்துவின் காட்சி அவருக்குக் கிடைத்ததென்றும்,* கிறிஸ்துவினால் அற்புதஞ் செய்யும் வரப்பிரசாதங்கள் அவருக்குக் கிடைத்ததென்றும் † தெளிவாய்ச் சொல்லியிருக்கிறபடியினால், கிறிஸ்துமார்க்கம் அற்புதத்தினால் நாட்டப்பட்டதென்று சாட்சிபகருகிறார்.

(a) Additional, because St. Paul received the Gospel direct from God; and

(b) Peculiar, because he speaks of a great variety of miracles as wrought by himself and by others, and as admitted.

3. சத்தியத்திற்குச் சாட்சியான அற்புதச்செயலால் கிறிஸ்துமார்க்கம் உலகத்தில் நாட்டப்பட்டதென்று அந்த மார்க்கமே சாட்சியிடுகிறதுமல்லாமல், அந்த அற்புதங்களைக் கண்ணாலே கண்டவர்கள் அதை ஏற்றுக்கொண்டு அந்தமார்க்கத்தாரானார்களென்றும் விளங்குகிறது. (a) மகம்மதுமார்க்கம் இவ்வித அத்தாட்சிகளோடு உலகத்தில் ஸ்தாபிக்கப்படவில்லை. அது பட்டயத்தினாலும் கட்டாயத்தினாலும் ஸ்தாபிக்கப்பட்டது. வெள்ளிரூபாயிருக்கிறபடியினாலேயே ஈயரூபாய்ச் செய்யப்பட இடமுண்டாயிருக்கிறது. சத்திய வேதம் இருக்கிறபடியாலும், அதற்குரிய மெய்யான அற்புதங்கள் விளங்கினபடியாலும், பொய்வேதங்களும் உண்டாகி,

3. Christianity demands to be received for its miracles—a fact peculiar to it—and it was received at first on that ground.

(a) The demand is peculiar, for Mahomedanism was not founded upon miracles; and other systems, whether of popery or of paganism, were founded upon alleged miracles; only *after* they had been instituted, and not *before*.

* கலா. 1. 1. 1 கொரி. 11. 23. ழு; 15. 8.
† ரோ. 15. 19. 1 கொ. 12. 8—28. 2 கொ. 12. 12, 13. கலா. 3. 2, 5.

அவற்றிற்குரிய பொய்யான அற்புதங்களும் விளங்கினதென்று கூறப்பட்டிருக்கிறது. பொய்மதங்களுக்குரிய பொய்யான அற்புதங்கள் அந்த மார்க்கங்கள் ஸ்தாபிக்கப்படுமுன் நடக்காமல், அவைகள் ஸ்தாபிக்கப்பட்டபின் நடந்ததாகச் சொல்லியிருக்கிறதென்று விசாரணையினாலே விசிதமாய் விளங்கும். இந்த அற்புதவரம் அப்போஸ்தலமார்களுக்கு இராமற்போனால் ஏழைகளும் பேதைகளுமாகிய அவர்களால் கிறிஸ்துமார்க்கம் உலகத்தில் ஸ்தாபிக்கப்படக்கூடாது. மேலும் அற்புதங்களைக் கவனிக்கும்போது அதற்கடுத்த வேதஉபதேசங்களையும் கவனிக்கவேண்டும்; அவைகள் ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டு ஒன்றுக்கொன்று சாட்சியாயிருக்கிறது.

(b) In part Christianity was received on the ground of its miraculousness, a fact which, under the circumstances, proves the reality of these miracles, and is testimony for them, additional to the testimony of history.

(b) அற்புதவரம் கிறிஸ்துமார்க்கத்துக்கே உரியது; சத்திய உபதேசமும் அதற்கே உரியது. அற்புதத்தைக் கண்டு உபதேசத்தைக் கேட்டவர்களுக்குப் போந்த அத்தாட்சியிருந்தபடியினால் அவர்கள் தங்கள் பழைய மார்க்கங்களையும் அவற்றிற்குரிய நியமநிஷ்டைகளையும் விட்டு, படாதபாடுகளெல்லாம் பட்டு, விசுவாசித்து, புதியமார்க்கத்தை அநுசரித்தார்கள். அக்காலத்தில் கிறிஸ்துமார்க்கம் அதிகமாய் விரோதிக்கப்பட்டு, கிறிஸ்தவர்கள் அதிகமாய்த் துன்பப்படுத்தப்பட்டாலும் கண்ணாரக்கண்டு காதாரக் கேட்டவர்கள் உத்தமகுணமுள்ளவர்களாகி, வருகிறதெல்லாம் வரட்டுமென்று உறுதிகொண்டு கண்டதையும் கேட்டதையும் மனதார ஏற்றுக்கொண்டார்கள்.

Conclusion. Hence there is large historical evidence in favour of Christianity which ought to be credited.

ஆதலால், அற்புதங்கள் வேதஉபதேசங்களின் உண்மையைத் திருஷ்டாந்தப்படுத்துகிறதற்கு அத்தாட்சியாயிருக்கிறதென்று சத்தியவேதத்தில் அடங்கிய மெய்யான சரித்திரமே சாட்சியிடுகிறது.

ஆதிக்கிறிஸ்தவர்கள் மார்க்கவைராக்கியத்தினால் தங்கள் உயிரையுங் கொடுத்ததுபோலவே, புறமதஸ்தர்களும் தாங்கள் கொள்ளும் வியர்த்தமான கொள்கையையும் அநுசரிக்கும் வீணான மதாசாரத்தையும் ஸ்தாபிக்கும்பொருட்டு மதவைராக்கியம் பாராட்டித் தங்கள் உயிரையுங் கொடுப்பதுண்டு. என்றாலும் அருளுக்கும் மருளுக்கும், அதாவது மெய்க்கும் பொய்க்கும் இருக்கும் வித்தியாசத்தைப் பகுத்தறிந்து யதார்த்தமானதைச் சாதிக்கும் மெய்ச்சாட்சிக்கும், யதார்த்தமில்லாததைச் சாதிக்கும் பொய்ச்சாட்சிக்கும் அனந்த வித்தியாசமுண்டென்று அறியவேண்டும். தங்கள் கொள்கைக்காகத் தங்கள் உயிரையுங் கொடுக்கத்தக்க உத்தமசாட்சிகள் மருளாகிய பொய்யைக்குறித்துச் சாட்சியிடாமல் அருளாகிய மெய்யைக் குறித்தே சாட்சியிடுவார்கள். கண்ணால் கண்டதையும், காதால் கேட்டதையும், மனதால் உணர்ந்ததையும் உள்ளபடி சொல்லுதலே உத்தமசாட்சிகளின் லட்சணம். அப்படிப்பட்ட சாட்சிகள் தாங்கள் கண்டதையும் கேட்டதையும் அறிந்ததையும் ஐயமின்றி யதார்த்தமாய்ச் சொல்லி, அந்த சத்தியத்துக்காகத் துன்பப்பட்டு, தங்கள் ஜீவனையும் கொடுப்பார்களானால் அவர்களே உத்தமரும் சத்தியருமான சாட்சிகளென்று விளங்கும். சத்தியவேதத்தை எழுதின நிறைமொழிமாந்தராகிய மகாத்துமாக்கள் இவ்வித சாட்சிகளாயிருந்தார்கள். அவர்கள் சாட்சியை ஐயமின்றி ஏற்றுக்கொண்டவர்களுடைய பின்னடியார்களும் சத்தியசாட்சிகளானார்கள். அவர்கள் இட்ட சாட்சிகள் யாவராலும் அங்கிகரிக்கப்படவேண்டியதே.

B. The *objections* to this reasoning are obvious:

1. Under the influence of enthusiasm men lay down their lives for every kind of folly: Answer,

*(a)* Perhaps so' when the follies are matters of opinion; but here the thing attested, in the case of the first Christians, is fact, and for testimony to the reality of facts enthusiasm cannot account.

வேதவிஷயங்களைப்பற்றிச் சாட்சிசொல்லுகிறவர்கள் யதார்த்தமாய் நடந்தகாரியங்களையே சொன்னாலும், அவர்கள் மருள்கொண்ட மத

*(b)* And, if it be said that the evi-

dence of *religious facts* is weakened by enthusiasm, answer.

வைராக்கியத்தினால் சொல்லுவார்களாகையினால், அது அங்கீகாரத்துக்குரிய பலமான சாட்சியல்லவென்று சிலர் சொல்லுவார்கள். வியாதி உடலை விகாரப்படுத்துகிறதுபோல, மருளாகிய மதவைராக்கியம் மனதை விகாரப்படுத்துகிறதுண்டு. என்றாலும் நம்

1. Yes, if the facts are in themselves incredible, a thing not shown; and, besides,

பத்தக்க யாதொரு விஷயத்தைப்பற்றி விவேகமும் பலமுமில்லாத ஒரு சாட்சி மாத்திரமல்ல, விவேகமும் பலமுமுள்ள அநேக சாட்சிகள் மனமும் வாக்கும் ஒன்றுபடக் கண்டதையும் கேட்டதையும் உள்ளபடி சத்தியமாய்ச் சொல்வார்களானால் அவர்கள் சாட்சியை நாம் ஏற்றுக்கொள்ளவேண்டியது நியாயம்.

முற்றிலும் நம்பத்தகாத விபரீதமான விஷயங்களைப்பற்றிச்

2. Religious facts, as attested, are not more liable to the influence of enthusiasm than common facts are to other influences, party spirit, &c, which yet are believed.

சாட்சிகள் என்னசொன்னாலும் அவர்கள் சாட்சி செல்லாது. எவ்வளவேனும் நம்பத்தக்க நியாயமான காரியங்களைப்பற்றிச் சொல்லப்படும் பலமான உத்தமசாட்சி நம்முடைய புத்திக்கு எட்டாததும் நம்முடைய அநுபவத்துக்குப் படாததுமாயிருந்தாலும் அதை ஏற்றுக்கொள்ளவேண்டியதே. சத்தியவேதத்தில், அதாவது கிறிஸ்துமார்க்கத்தில் நம்பத்தகாததும் புத்திக்கு விரோதமானதுமாகிய விபரீதவிஷயங்கள் ஒன்றுமில்லை. உலககாரியங்களும் வியாபாரங்களும் வியாஜ்யங்களும் பலவித நோக்கங்களுமுள்ள சாட்சிகளின் வாக்கினால் நடந்தேறிவருகிறது. இரண்டுமூன்று சாட்சிகளுடைய வாக்கினாலேயே எந்தக் காரியமும் நிலைவரப்படவேண்டும் என்று வேதமே கூறுகின்றது.* ஆகையால் லௌகிக காரியங்களில்மாத்திரமல்ல, வைதீககாரியங்களிலும் உத்தமசாட்சிகளின் வாக்கை அங்கிகரிக்கவேண்டியது நியாயமே.

* உபா. 19. 15.

மனுஷர்களிடத்தில் மருளாகிய மதவைராக்கியத்தோடு தந்திரமும் கலந்திருப்பது சகஜமான காரியமானபடியால், அப்படிப்பட்டவர்கள் சொல்லும் சாட்சியை எளிதில் ஏற்றுக்கொள்ளாமல் ஆய்ந்தோய்ந்து பகுத்தறிந்தே ஏற்றுக்கொள்ளவேண்டியது. மருள்கொண்ட சாட்சிகள் தாங்களே வஞ்சிக்கப்பட்டு மோசம்போவதுமன்றி, மற்றவர்களையும் வஞ்சித்து மோசம்போக்குவார்கள். பொய்யைப்பற்றி மோசஞ்செய்யும் வைராக்கியமுமுண்டு, மெய்யைப்பற்றி நன்மையை நாடும் வைராக்கியமுமுண்டு.* ஆனாலும் மனுஷருக்குப் பொய்யும் மெய்யும் இன்னதென்று பகுத்தறியத்தக்க இயல்பான புத்தியுண்டு; உண்மையானபட்சத்தில் இயல்பாய்ச் சாருகிற குணமுமுண்டு. பொய்யானது மெய்யான வாசனையினால் பயன்படநாடுகிறபடியால் பொய்யையும் மெய்யையும் மனமாகிய உரைகல்லில் உரைத்தறியவேண்டும்.

2. A mixture of enthusiasm and knavery, it is objected, weakens the evidence for miracles.

That there is this mixture in human nature is certain, but it is seen also in common matters, which yet are believed on testimony. (The apostles and early Christians were not such as could easily be deceived, or would deceive others.)

பொய்யான அற்புதம் அதிசயம்முதலிய விஷயங்களிலும் பற்பல காலங்களிலும் பற்பல இடங்களிலும் ஜனங்கள் மோசம்போவதுண்டே என்றுசொல்லக்கூடுமாகில், மற்ற அநேக விஷயங்களில் வஞ்சகரால் ஜனங்கள் மோசம்போவதுபோலவே இவ்விஷயங்களிலும் பகுத்தறிவில்லாதவர்கள் மோசம்போவது சகஜமென்றே சொல்லக்கூடும்.

3. However, men have been themselves deluded by pretences to miracles.

Answer, Not more so than by other pretences.

---

* வஞ்சகஞ்செய்த பாலாம்ரிஷியின் துர்க்குணத்தைப்பற்றி எண்ணாகமம் 23-ம் அதி. 10-ம் வசனத்தின்பேரிலும், இரண்டகஞ்செய்த தாவீதுராஜாவின் அக்கிரமத்தைப்பற்றி 2 சாமுவேல் 12-ம் அதிகாரம் 7-ம் வசனத்தின்பேரிலும் பட்லர் என்பவர் இரண்டு பிரசங்கஞ்செய்திருக்கிறார். பாலாம் பொன்னாசையினால் மனச்சாட்சிக்கு விரோதமாய் நடந்து மோசஞ்செய்து மோசம்போனான். தாவீது பெண்ணாசையினால் தகாத மோகத்துக்கிடங்கொடுத்து கிரமந்தப்பி நடந்து மகா பாதகனாகித் தீர்க்கதரிசியினால் கண்டிக்கப்பட்டு, உத்தம மனஸ்தாபமடைந்து குணப்பட்டான். பாலாம் உலகப்பொருளாதி தேவனுக்கும் மம்மோனுக்கும் ஊழியஞ்செய்யப்பார்த்தான், கூடாமற்போயிற்று. தாவீது காமமயக்கத்தால் தன்னை மறந்து, வெளிச்சத்துக்கும் இருளுக்கும் சம்பந்தமுண்டென்று நினைத்தான், அதுவும் கூடாமற்போயிற்று.

4. Fabulous miracles have historical evidence; yet,

Answer, Even if this be admitted, that would not prove the falsehood of Christian miracles, even though they furnish a precisely analogous example.

பொய்யான அற்புதங்களைப்பற்றி அவைகள் நடந்ததாக ஜனங்கள் சாட்சிசொன்னாலும் அவைகளை நம்பும்படிக்குப் போதுமான அத்தாட்சிகளிராது; அவைகள் நம்பப்படத்தக்கவைகளுமல்ல. கிறிஸ்துமார்க்கத்துக்குரிய அற்புதங்களோ அவற்றிற்குரிய தன்மையினாலும், அவைகள் செய்யப்பட்ட நோக்கத்தினாலும், அவைகளைப்பற்றிச் சொல்லிய சாட்சிகளினாலும் உண்மையென்று விளங்கும். சாட்சிசொல்லவந்த இருவரில் ஒருவன் பொய்ச்சாட்சி சொல்லிப் பொய்யனென்று தீர்மானிக்கப்பட்டதினால் மெய்ச்சாட்சிசொன்ன மற்றவனும் பொய்யனென்று தீர்மானிக்கப்படலாமா? கூடாதே.

C. Conclusion:—

1. From objections, note

(a) They weaken the evidence but cannot destroy it.

(b) Nor can that evidence be destroyed but by proof of the untrustworthiness of the witnesses.

(c) This very mode of speaking implies that there is *something* in the evidence itself; an important reflection on such a subject.

(d) It should be remembered that the importance of Christianity and its precepts on veracity

மருளினாலும் வீணான மதவைராக்கியத்தினாலும் வேதவிஷயங்களில் ஜனங்கள் மோசஞ்செய்கிறதும் மோசம்போகிறதும் சகஜமான காரியங்களானாலும், (a) இதினால் சாட்சிகள் சொல்லும் அத்தாட்சி பலவீனப்படுமே ஒழிய அது முற்றிலும் அழிந்துபோகாது. (b) சாட்சிசொல்லுகிறவர்கள் தகுமான சாட்சிகளல்லவென்றும், ஏதோ சுயப்பிரயோஜனத்தை நாடிப் பாரபட்சமாய்ச் சாட்சிசொல்லுகிறார்களென்றும், அல்லது தாங்களே அந்த விஷயத்தில் மோசம்போனார்களென்றும் விளங்கினால் அவர்கள் சாட்சி ஒன்றுக்கும் உதவாது. சில பொய்ச்சாட்சிகள் ஏற்பட்டு மோசம்போக்கினாலும் அதினிமித்தம் மற்ற சாட்சிகளையெல்லாம் பொய்ச்சாட்சிகள் என்று தீர்மானிக்கலாகாது. (c) மெய்ச்சாட்சிகளிருக்கிறபடியினாலேயே பொய்ச்சாட்சிகளுக்கும் இடமுண்டு. (d) ஆதிக்கிறிஸ்தவர்கள் எளிதாய் மோசம்போக

த்தக்கவர்களல்ல, அவர்கள் தங்கள் புத்தியைக் கையாடினார்கள். பொய்சொல்லக் கூடாதென்றும், பிறனுக்கு விரோதமாய்ப் பொய்ச்சாட்சி சொல்லக்கூடாதென்றும் அவர்களுடைய வேதம் அவர்களுக்குப் படிப்பிக்கிறபடியினால், அவர்கள் எளிதாய் மோசம்போகவும் மற்றவர்களை மோசம்போக்கவும் ஏதுவில்லை. ஆகையால் மோசம்போக்குகிறவர்களும் உலகத்தில் அநேகர் இருக்கிறபடியினால், யாரை நம்புகிறது ஒருவரையும் நம்பக்கூடாதென்று நாம் சொல்லாமல்; புத்தியைக் கையாடி நம்பத்தக்கவர்களை நம்பி நம்பத்தகாதவர்களை நம்பாமலிருப்பதே உத்தமம்.

must have made the early christians peculiarly careful not to deceive or be deceived.

நியாயம் இப்படியிருக்கிறபடியால், கிறிஸ்துமார்க்கத்துக்குரிய புற உதாரணங்களாகிய அற்புத அத்தாட்சிகளை நிராகரிக்கக்கூடாதபடியினாலும், அவைகள் நம்பப்படத்தக்கவைகளாயிருக்கிறபடியினாலும், அவைகளை உறுதிப்படுத்த நேரான சரித்திர சாட்சிகள் இருக்கிறபடியினாலும், அவைகளை அங்கிகரிக்கவேண்டியது நியாயமே.*

2. From the *whole argument* it is plain that the proof of miracles is of real weight and sufficient: and so men ought to admit it where there is nothing in religion itself incredible.

## II. தீர்க்கதரிசன அத்தாட்சி.

பின்வருங்காரியங்களை முன்னறிவிக்கும் தீர்க்கதரிசனத்தினால் உண்டாகிய அத்தாட்சியைப்பற்றி உலகஇயலில் விளங்கும் ஒப்புமைநியாயங்களைக்கொண்டு சில விசேஷங்களைக் கவனிப்போம். சாதாரண காரியங்களைக்குறித்து நிதானித்து அறிந்துகொள்ளுகிறதுபோலவே இந்தக் காரியத்தைக்குறித்தும் நிதானித்து அறிந்துகொள்ளலாம்.

D. On evidence from prophecy the following remarks are important:—

---

* "உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்
அலகையா வைக்கப்படும்."

இ—ள். பெரியோர் உண்டென்னும் காரியங்களை இல்லையென்னும் புல்லறிவாளன் உலகத்தில் பேயென்றெண்ணப் படுவான் என்று குறளில் சொல்லியிருக்கிறது.

"He is to be considered a demon in this world who negative what others affirm."

1. Not perceiving the *whole sense* of a prophecy does not weaken the proof of foresight, nor does the not understanding the whole fulfilment.

1. தீர்க்கதரிசனத்தில் ஒருபங்கு எளிதில் விளங்கும், ஒரு பங்கு எளிதில் விளங்காது. விளங்காத பங்கைக்கொண்டு விளங்குகிற பங்கை நிதானித்து, ரூபகாரப்படாததை ரூபகாரப்படுகிறதைக்கொண்டு தீர்மானிக்கவேண்டும். ஒரு விஷயத்தைப்பற்றி ஒரு மனுஷன் ஒரு பிரபந்தம் எழுதத்தொடங்கி, ஒருபங்கை எளிதாய் விளங்கும் ஒரு பாஷையிலும், மற்றொரு பங்கை எளிதாய் விளங்காத மறுபாஷையிலும் எழுதினால் அதை வாசிக்கிறவர்கள் விளங்காத காரியத்தினிமித்தம் விளங்குங்காரியத்தையும் தள்ளிப்போடலாமா? அல்லது ஒரு மனுஷன் ஒரு சங்கதியை எழுதத்தொடங்கி, ஒரு பங்கை எழுத்துக்களாகிய வரிவடிவினாலும், மற்றொரு பங்கை அறிகுறிகளாகிய வரிவடிவினாலும் எழுதுவானானால் குறிப்புவாசனை அறியாதவர்கள் எழுத்துவாசனையையும் தள்ளலாமா? நமக்கு விளங்காத பங்கைக்கொண்டு விளங்கும் பங்கும் எழுதினவனுக்கு முதலாய்த் தெரியாதே என்று சொல்லலாமா?

ஒருவன் இந்த விஷயத்தைப்பற்றி முயற்சியில்லாதவனும், இந்த சங்கதிகளை ஆராய்ச்சிசெய்ய சக்தியில்லாதவனுமாயிருந்து, யாதொரு விசேஷித்த தீர்க்கதரிசனம் முற்றிலும் நிறைவேறினதென்று அறிந்துகொள்ளக்கூடாதவனாயிருந்தாலும், அந்தத் தீர்க்கதரிசனம் எவ்வளவாகிலும் நிறைவேறியிருக்கிறதைக் கண்டறிந்து அந்தத் தீர்க்கதரிசனத்தினால் குறிக்கப்பட்ட சங்கதிகள் மனுஷர் புத்திக்கெட்டாத சங்கதிகளென்று அறிந்து உணர்ந்துகொள்ளக்கூடுமல்லவா?

If a long series of prophecies be applicable to certain events, the applicability proves such an application is intended. This meets the objection, that

2. ஒவ்வொரு தீர்க்கதரிசனத்தையும் தனித்தனியாய்க் கவனிக்கும்போது, கிறிஸ்தவர்கள் அதைப்பற்றிச்சொல்லிய வியாக்கியானங்களில் சில பொருந்தவில்லையென்று சிலர் ஆட்சேபிப்பார்கள். யாதொரு விஷயத்தைப் பற்றித் தொடர்ச்சியான அநேக தீர்க்க

தரிசனங்கள் சொல்லப்பட்டிருக்குமாகுல் அவைகளைத் தனித்தனியாகவல்ல, பொதுப்பட கவனித்து சமரசப்படுத்தி அதன் பொருளை அறியவேண்டும்.

the application of each prophecy apart may not be apparent, and so was not intended.

எப்படியெனில், புராணக் கட்டுக்கதைகள், வசைப்பாட்டுகள், சிலேடைமொழிகள் முதலானவைகள் பொருளை வெளிப்படையாய்க் காட்டாமல் மறைவாய்க் காட்டினலும், அவைகளை அறியக்கூடியவர்கள் சம்பந்தாசம்பந்தங்களை ஒத்திட்டு எளிதில் அறிந்துகொள்ளுவார்கள். அப்படியே வெகு காலத்துக்குப்பின் திருச்சபைக்கும் கிறிஸ்துவுக்கும் அடுத்ததாக சம்பவிக்கப்போகிற காரியங்கள் முன்னதாகச் சொல்லப்பட்டிருக்கிறபடியால் அவற்றின் சம்பந்தாசம்பந்தங்களை ஒத்திட்டுப் பொருளை அறிந்து கிரகித்துக்கொள்ளவேண்டும். மேலும் உலகரட்சகராகிய மேசியாவின் வருகையைக்குறித்துச் சொல்லப்பட்ட தீர்க்கதரிசனங்களைப் பூர்வ யூதர்கள் வியாக்கியானம்பண்ணினபடியே இப்பொழுது இருக்கிற கிறிஸ்தவர்களும் வியாக்கியானம்பண்ணுகிறார்கள். திருச்சபையிலும் உலகத்திலும் சம்பவிக்குங்காரியங்களைப்பற்றிச் சொல்லிய தீர்க்கதரிசனங்களைப் பூர்வகிறிஸ்தவர்கள் வியாக்கியானம்பண்ணினபடியே அவைகள் நிறைவேறிவந்து இப்பொழுது யாவருக்கும் திருஷ்டாந்தப்படுகிறது.

Note the analogous case of mythological or satirical writings; and mark, that Old Testament prophecy was understood by the Jews generally as it now is by Christians.

3. உரைக்கப்பட்டிருக்கிற தீர்க்கதரிசனங்களுக்குக் கிறிஸ்தவர்கள் செய்யும் வியாக்கியானம் ஒத்துவராமல் வேறு அர்த்தங்கொண்டு அவைகளுக்கு விகற்பமாயிருந்தாலும் அதினுல் தீர்க்கதரிசனத்தின் உண்மைக்குக் குறைவில்லை. சுயமாய் எழுதுகிறவர்கள் சாமர்த்தியராஞல் தாங்கள் எழுதும் பொருள் தங்களுக்கு விளங்காமலிராது, சுயமாய் எழுதாமல் அரும்பொருள் அடங்கிய மற்ற கிரந்தங்களைப்

3. A prophecy may be completed in a sense different to the sense of the prophet, and a prophecy may seem applicable to other events than the alleged completion; but neither weakens the evidence, for

பார்த்து எழுதுகிறவர்கள் தங்களுக்கு விளங்காத பொருள்களையும் எழுதுவதுண்டு. தீர்க்கதரிசனம் தேவாவியின் ஏவுதலினால் எழுதப்பட்டபடியால், தீர்க்கதரிசிகள் திருவுளத்தை வெளிப்படுத்தும் கர்த்தாக்களாயிராமல் அதற்குரிய துணைக் கருவிகளாய்மாத்திரம் இருந்தார்கள் என்று அறியவேண்டும்.

(a) The Scriptures are the work, not of the man who wrote them, but of the Spirit, and the writer may not have known all the meaning.

(a) தேவாவியினால் ஏவப்பட்டு வேதாகமங்களை எழுதினவர்கள் சுயமாய் எழுதாமல் பரமஅருளால் எழுதினபடியால் அவர்கள் எழுதினவைகளின் அரும்பொருள்கள் அவர்களுக்கே முற்றிலும் விளங்காமலிருக்கலாம். (b) மேலும் தீர்க்கதரிசனங்களெல்லாம் வெளிப்படையாயிராதபடியால் பதப்பொருள் கருத்துப்பொருள் மூலகர்ப்பார்த்தம் சாமானிய அர்த்தம் இவைமுதலானவைகளை விசாரித்துப் புறத்துறை இன்னது உட்கருத்து இன்னது என்று பகுத்தறியவேண்டும்.

(b) The applicability to more than one event may have been intended by the Spirit.

Interpretation of Dan. 7. 7.

தானியேல் தீர்க்கதரிசனம் 7-ம் அதிகாரம் 7-ம் வசனத்தில் கண்டிருக்கிற தீர்க்கதரிசனங்கள் உண்மையென்று இயேசுநாதரே உரைத்திருக்கிறார். இந்த வசனம் கிறிஸ்துவின்காலத்தில் வரப்போகிற காரியங்களைக் குறிக்கிறதென்று பூர்வ கிறிஸ்தவர்கள் வியாக்கியானம்பண்ணினார்கள். வேறு சிலர் இது அந்தியோகு பிரகாசனைப்பற்றிய தற்கால சரித்திரத்தைக் குறிக்குமென்றும், இது நிறைவேறிவிட்டதென்றும் சொன்னார்கள். இந்தத் தீர்க்கதரிசனம் நிகழ்காலத்தையும் எதிர்காலத்தையும் குறித்தாலும் குறிக்கலாம்; என்றாலும் கர்ப்பார்த்தம் ஒரு பொருளையே விசேஷமாய்க் குறிக்கும்.

Conclusion. The conclusion is, that this evidence is real, though not perfect,

காரியம் இப்படியிருக்கிறபடியால் தீர்க்கதரிசன அத்தாட்சி பூரண அத்தாட்சியாயிராமற்போனாலும் போதுமான அத்

தாட்சியென்றும், அதை உத்தமகருத்தோடும் விநயத்தோடும் விசாரித்து அறிய வேண்டியதென்றும் ஒப்புக்கொள்ளவேண்டும்.*

and needs fairness and modesty in weighing it.

## PART II.

## இரண்டாம் பங்கு.

---

கிறிஸ்துமார்க்கத்துக்குப் பொதுவான அத்தாட்சியாகிய வேறே நேரான காரியங்களையும் சவிஸ்தாரநியாயங்களையும் (துணைநியாயங்களையும்) கவனித்துப்பார்க்கும்போது, அவைகள் வெவ்வேறான நியாயங்களாயினும் வேத உதாரணத்துக்கு ஏகத்திரட்டான நியாயங்களாயிருந்து உண்மையை விளக்குவிக்கும். ஒன்றையொன்று உறுதிப்படுத்துகிற பொருத்தமான நியாயங்களைக் கொண்டுதான் மனுஷருக்கடுத்த வியாபாரங்களும் காரியங்களும் நடந்தேறிவருகிறது. இவ்விதமான அத்தாட்சி சவிஸ்தாரமான நியாயங்களையும் சார்புநியாயங்களையும் தழுவுகிறபடியினால், இவைகளையெல்லாம் ஒருமைப்படுத்திக் கவனிக்கும்போது உறுதியான உதாரணத்திரட்டாய் விளங்கும். இவைகளை ஒவ்வொன்றாய்க் கவ

E. On other direct and collateral evidence, note

I. *Introduction.*—This evidence is peculiarly important, for

*(a)* It is what is commonly given us in practice; and

*(b)* Such evidence, being *circumstantial*, is, when taken together, of great weight, and

*(c)* Would, if *considered* simply *as matter of fact*, have great influence with unbelievers.

---

* தீர்க்கதரிசனத்துக்குரிய நான்கு அத்தாட்சிகளாவன: (1) சம்பவிக்குமென்று தீர்க்கதரிசனமாகச் சொல்லப்படும் காரியம் சம்பவிக்க வெகுகாலத்துக்கு முன்னமே சொல்லப்பட்டிருக்கவேண்டும். (2) தீர்க்கதரிசனம் சொல்லும் காரியத்துக்கும் அதின் சம்பவத்துக்கும் பொதுப்பட்ட சம்பந்தங்கள்மாத்திரமல்ல, அவற்றிற்கே உரிய நேரான சிறந்த சம்பந்தங்களும் இருக்கவேண்டும். (3) தீர்க்கதரிசனமாகச் சொல்லப்பட்ட காரியம் மனுஷருடைய சுயபுத்தியினாலும் யுத்தியினாலும் சொல்லப்படத்தக்கதாயிராமல் மனுஷபுத்திக்கும் யுத்திக்கும் மேற்பட்டதாயிருக்கவேண்டும். (4) தீர்க்கதரிசனம் திருவுளத்தை வெளிப்படுத்தும் வேதத்துக்கு அத்தாட்சியாக அருளப்பட்டிருக்கவேண்டும்.

[Prophecy should have the four following characteristics:

1. That it shall have been delivered *before* the event said to be a fulfilment of it.

2. That it shall have a *particular* and not a general agreement with that event.

3. That the event shall be such as no human *sagacity* or foresight could possibly conjecture or foretell.

That these predictions shall be so connected with the promulgation of a professed Revelation as clearly to be *designed* to authenticate it.

னித்துப்பார்த்து இவைகளை ஒருமைப்படுத்தி நிதானிக்கிறவர்கள் இவைகளின் உண்மையை அறிந்துகொள்ளுவார்கள்.

(d) It is intended then to prove that God has given us a system of natural religion and of revealed; the first ascertainable by reason, and the second not; the latter intended to secure our recovery and holiness.

எப்படியெனில், காரியங்களை நிதானித்து அறியவும், ஒழுக்கமாய் நடந்துகொள்ளவும் கடவுள் நமக்கு மனம் புத்தி சித்தத்தைக் கொடுத்திருக்கிறதுமல்லாமல், இயல்வேதத்தின் மூலமாய் தம்மைப்பற்றியும் தாம் ஆண்டு நடத்துகிற உலகத்தைப்பற்றியும், இம்மை மறுமைக்குரிய பலாபலன்களைப் பற்றியும் அறிந்துகொள்ளவேண்டியவைகளை அறிவித்திருக்கிறார்; இவைகள் மனதுக்கு எட்டுகிற காரியங்கள். பாவியான மனுஷன் குணப்பட்டு பாவநிவாரணம் அடைந்து இரட்சிக்கப்பட்டு பரகதிக்குரியவனாகும்பொருட்டு மனதுக்கு எட்டாதபொருள் அடங்கிய அருள் வேதத்தைக் கடவுள் அநுக்கிரகஞ்செய்து தர்ம மார்க்கத்தை வெளிப்படுத்தியிருக்கிறார்.

2. Note what this religion is, as a real or supposed history.

இந்த வேதமானது சம்பவித்த காரியங்களைப்பற்றிய சரித்திரவரலாறாயிருக்கிறது; அதில் அடங்கிய தீர்க்கதரிசன வாக்கியங்கள் இனி சம்பவிக்கப்போகிற காரியங்களை முன்னறிவிக்கிற சரித்திரவரலாறாயிருக்கிறது; வேதத்தில் அடங்கிய உபதேசங்களும் நியாயப்பிரமாணங்களும் நியமப்பிரமாணங்களும் சம்பவிக்கத்தக்க காரியங்களாயிருக்கிறது.

(a) It teaches the creation of the world as God's world, reveals the Son as Creator.

(a) இந்த வேதம் காரணகாரியங்களைக் காட்டி, உலகத்தையும் அதைப் படைத்து நடத்துகிற கர்த்தாவையுங்குறித்துச் சொல்லுகிற வேதமென்னப்படும்; மற்றெந்தவேதமும் இந்த லட்சணமுடையதல்ல. இந்த உலகம் ஆதிகாரணக்கடவுளால் உண்டாக்கப்பட்டதென்றும், அதை உண்டாக்கின கர்த்தாவே நாம் செய்யும் ஆராதனைக்குரியவராதலால் அவரை வழிபட்டுப் பற்றிக்கொள்ளவேண்டுமென்றும்

கற்பிக்கிறது. சிருஷ்டிதொழில் தேவனுகிய பிதாவுக்கே உரியதாயினும், உலக சற்குருவாகிய ரட்சகர் தெய்வத்துவமுடையவராகையால் அவராலும் அவர்மூலமாயும் சகலமும் உண்டாக்கப்பட்டதென்பதும் வேதசித்தாந்த சம்பிரதாயம்.* வேதம் ஆதிமுதல் உண்டான உலகசரித்திரத்தைச் சுருக்கமாய் எடுத்துச்சொல்லி, பாவம் வந்தவழியை அறிவித்து, இம்மை மறுமைக்குரிய தர்மநிலையை நாட்டி, பல ராஜ்யங்களுக்கும் ராஜநீதிகளுக்கும் அடுத்தவைகளையும், பற்பல ராஜ்யங்களில் நடந்த தாறுமாறுகளையும் காண்பித்து, திருவுளம் உரைத்தவைகளெல்லாம் நிறைவேறித் தீருங்காலங்களையும், தேவரகசியம் நிறைவேறுங்காலங்களையும், என்றென்றைக்கும் அழியாத ராஜ்யம் எழும்புங்காலத்தையும், ராஜரிகம் பரிசுத்தவான்களுக்குக் கொடுக்கப்படுங்காலத்தையும் அவர்கள் அரசாளுங்காலத்தையும், மகாத்மிய காலத்தையும் அறிவிக்கிறது. "உலகத்தோற்றமுதல் தேவன் தம்முடைய பரிசுத்த தீர்க்கதரிசிகள் எல்லாருடைய வாக்கினாலும் உரைத்தவைகளெல்லாம் நிறைவேறித் தீருங்காலங்கள் வருமளவும் பரலோகம் அவரை ஏற்றுக்கொள்ளவேண்டும்." (அப். 3. 21.) "அந்த ராஜாக்களின் நாள்களிலே, பரலோகத்தின் தேவன் என்றென்றைக்கும் அழியாத ஒரு ராஜ்யத்தை எழும்பப்பண்ணுவார்; அந்த ராஜ்யம் வேறே ஜனத்துக்கு விடப்படுவதில்லை. ஒரு கல் கையால் பெயர்க்கப்படாமல் மலையிலிருந்து பெயர்ந்து, உருண்டுவந்து, இரும்பையும் வெண்கலத்தையும் களிமண்ணையும் வெள்ளியையும் பொன்னையும் நொறுக்கினதை நீர் கண்டீரே, அப்படியே அது அந்த ராஜ்யங்களையெல்லாம் நொறுக்கி, நிர்மூலமாக்கி, தானே என்றென்றைக்கும் நிற்கும்." "இந்தக் கொம்பு பரிசுத்தவான்களோடே யுத்தம்பண்ணி, அவர்களை மேற்கொண்டது என்று கண்டேன்" வானத்தின் கீழெங்குமுள்ள ராஜ்யங்களின் ராஜரிகமும் ஆளு

(b) It teaches the history of religion in its various aspects.

(c) It teaches as much of politics as is needed to make the history of religion complete.

* யோவா. 1. 3. எபே. 3. 9.

மையும் மகத்துவமும் உன்னதமானவருடைய பரிசுத்தவான்களாகிய ஜனங்களுக்குக் கொடுக்கப்படும்; அவருடைய ராஜ்யம் நித்திய ராஜ்யம்; சகல கர்த்தத்துவங்களும் அவரைச் சேவித்து, அவருக்குக் கீழ்ப்பட்டிருக்கும்" என்று தானியேல் தீர்க்கதரிசனத்திலும், (2. 44: 7. 22, 27.) "வானத்தையும் அதிலுள்ளவைகளையும், பூமியையும் அதிலுள்ளவைகளையும், சமுத்திரத்தையும் அதிலுள்ளவைகளையும் சிருஷ்டித்தவரும், சதாகாலங்களிலும் உயிரோடிருக்கிறவருமானவர்மேல் ஆணையிட்டுச் சொன்னான்." "அவர்கள் சதாகாலங்களிலும் அரசாளுவார்கள்" என்று வெளிப்படுத்தின ஆகமத்திலும் சொல்லியிருக்கிறது. (10. 7: 22. 5.)

*(d)* It gives an account of the origin of mankind, and a thread of history extending over 4000 years, with many particulars which need to be carefully noted, and ending in the establishment of the Christian faith.

வேதத்தில் கடந்துபோன 4000 வருஷ சரித்திரம் அடங்கியிருக்கிறதுமல்லாமல், பற்பல காலத்துக்கடுத்த காரியங்களும் விஷயங்களும் அதில் அடங்கியிருக்கிறது; அவைகள் பொய்யானால் நிராகரிக்கப்பட்டிருக்கும். புத்திசாலிகளால் அவைகள் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறபடியால் அவைகள் மெய்யென்றே விளங்குகிறது.

வேதம் தர்மஇயலைக் காட்டுகிறதுமல்லாமல், மற்றெந்த சரித்திரத்திலும் இராதவண்ணமாய் மனுஷருக்குரிய வரலாற்றையும் எடுத்துக்காட்டுகிறது. மனுஷருடைய சரித்திரத்துக்குரிய நாலாயிரம் வருஷத்துக் காலக்கணக்கு இதில் கண்டிருக்கிறதுமல்லாமல், விசேஷமாய்க் கடவுள் தமக்குச் சொந்தமாகத் தெரிந்துகொண்ட இஸ்ரவேல் ஜனங்களின் வரலாற்றையும், அவர்களோடே அவர் செய்த வேத உடன்படிக்கையையும், அவர்களுக்கு நேரிட்ட எல்லாத் துன்பங்களிலும் அவர்களைக் காத்து நடத்தி வேதத்தை அருளிச்செய்து அவர்களைக் கானான்தேசத்தில் நிலைநிறுத்தி வேண்டிய நன்மைகளையெல்லாம் அவர்களுக்குச் செய்தார். என்றாலும், "அவர்கள் அவருடைய உடன்படிக்கையை விரோதித்து, அவருடைய கட்டளைகளை மீறிப் பாவஞ்செய்தபடியால் பூமியின் ஒரு முனைதுவக்கிப்

பூமியின் மறுமுனைமட்டும் இருக்கிற எல்லா ஜனங்களுக்குள்ளும் சிதறடிக்கப்படுவோர்கள்' என்றும், அவர்கள் குணப்பட்டு முழு இருதயத்தோடும் அவரைப் பற்றிக்கொள்வார்களானால் அவர்களைத் தம்மிடம் சேர்த்துக்கொள்வார்' என்றும், அவர்கள் சகல ஜாதிகளுக்குள்ளும் முக்கியமானவர்களாயிருப்பார்கள்" என்றும் வேதம் திருவுளம்பற்றுகிறது. (உபா. 28. 64: 30. 2, 3.)

மேலும் "இஸ்ரவேலோ, கர்த்தராலே நித்திய ரட்சிப்பினால் ரட்சிக்கப்படுவான்; நீங்கள் என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களிலும் வெட்கப்படாமலும் கலங்காமலும் இருப்பீர்கள். உன் ஜனங்கள் யாவரும் நீதிமான்களும், என்றென்றைக்கும் பூமியைச் சுதந்தரிக்கும் குடிகளும், நான் நட்ட கிளைகளும், நான் மகிமைப்படும்படி என் கரங்களின் கிரியைகளுமாயிருப்பார்கள்." (எசா. 45. 17: 60. 21.) "உன்னை ரட்சிப்பதற்காக நான் உன்னோடே இருக்கிறேன் என்று கர்த்தர் சொல்லுகிறார்; உன்னைச் சிதறடித்த எல்லா ஜாதிகளையும் நான் நிர்மூலமாக்குவேன்; உன்னையோ நான் நிர்மூலமாக்காமலும், முற்றிலும் தண்டியாமல் விடாமலும், மட்டாய்த் தண்டிப்பேன்." "என் தாசனாகிய யாக்கோபே! நீ பயப்படாதே என்று கர்த்தர் சொல்லுகிறார்; நான் உன்னுடனே இருக்கிறேன்; உன்னைத் துரத்திவிட்ட எல்லா ஜாதிகளையும் நான் நிர்மூலமாக்குவேன்; உன்னையோ நான் நிர்மூலமாக்காமல், உன்னை மட்டாய்த் தண்டிப்பேன்; ஆனாலும் உன்னை நான் குற்றமில்லாமல் நீங்கலாக விடுவதில்லையென்கிறார்" என்று தீர்க்கதரிசனம் விளம்புகிறது. (எரே. 30. 11: 46. 28.)

The Messiah.

மேலும், வேதத்தில் இஸ்ரவேல் ஜனங்களுக்கு அதிபதியும் ரட்சகருமான மேசியாவாகிய ஒரு அற்புதமூர்த்தி உலகத்தில் அவதரிப்பதைக் குறித்து விபரமாய்த் தீர்க்கதரிசனம் உரைத்திருக்கிறது. அவர் வருகையைச் சகல ஜனங்களும் எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். அவர்கள் விரும்பின அவருடைய சொந்தமானவர்களுக்குள் அவர் வந்தாலும், அவருடைய சொந்தமானவர்கள்

அவரை ஏற்றுக்கொள்ளமாட்டார்கள் என்று வேதம் சொன்னபடியே யூதர்கள் மேசியாவை அங்கீகரிக்காமல் அவரைத் தள்ளிப்போட்டார்கள். "அவர் உங்களுக்குப் பரிசுத்த ஸ்தலமாயிருப்பார்; ஆகிலும் இஸ்ரவேலின் இரண்டு கோத்திரத்துக்கும் தடுக்கலின் கல்லும் இடறுதலின் கன்மலையும், எருசலேமின் குடிகளுக்குச் சுருக்கும் கண்ணியுமாயிருப்பார். அவர்களில் அநேகர் இடறிவிழுந்து நொறுங்கிச் சிக்குண்டு பிடிபடுவார்கள்." "யாக்கோபைத் தம்மிடத்தில் திருப்பும்படி நான் தாயின் கர்ப்பத்திலிருந்ததுமுதல் கர்த்தர் தமக்குத் தாசனாக என்னை உருவாக்கினார்; இஸ்ரவேலோ சேராதேபோகிறது, ஆகிலும் கர்த்தருடைய பார்வையில் கனமடைவேன்; என் தேவன் என் பெலனாயிருப்பார்." (ஏசா. 8. 14, 15: 49. 5.) "உங்களில் எவன் கூலியில்லாமல் கதவுகளைப் பூட்டுவான்; என் பலிபீடத்தின்மேல் அக்கினியைக் கூலியில்லாமல் கொளுத்தவுமாட்டீர்கள். உங்கள்பேரில் எனக்குப் பிரியமில்லை என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்; உங்கள் கைகளிலுள்ள காணிக்கை உகந்ததல்ல. சூரியன் உதிக்கிற திசை தொடங்கி, அது அஸ்தமிக்கிற திசைவரைக்கும், என் நாமம் ஜாதிகளுக்குள்ளே மகத்துவமாயிருக்கும்; எல்லா இடங்களிலும் என் நாமத்துக்குத் தூபமும் சுத்தமான காணிக்கையும் செலுத்தப்படும்; என் நாமம் ஜாதிகளுக்குள்ளே மகத்துவமாயிருக்கும்" என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார். (மல். 1. 10, 11.) "யாக்கோபின் கோத்திரங்களை எழுப்பவும் இஸ்ரவேலில் காக்கப்பட்டவர்களைத் திருப்பவும், நீர் எனக்குத் தாசனாயிருப்பது அற்பகாரியமாயிருக்கிறது; நீர் பூமியின் கடைசிபரியந்தமும் என்னுடைய ரட்சிப்பாயிருக்கும்படி, உம்மை ஜாதிகளுக்கு ஒளியாகவும் வைப்பேன் என்கிறார்." "நான் என் பரிசுத்த பர்வதத்துக்குக் கொண்டுவந்து, என் ஜெபவீட்டிலே அவர்களை மகிழப்பண்ணுவேன்; அவர்களுடைய சர்வாங்கதகனங்களும் அவர்களுடைய பலிகளும் என் பலிபீடத்தின்மேல் அங்கீகரிக்கப்பட்டிருக்கும்" என்னுடைய வீடு சகல ஜனங்களுக்கும் ஜெபவீடு என்னப்

படும்." "கடைசிநாட்களில் கர்த்தருடைய ஆலயமாகிய பர்வதம் பர்வதங்களின் கொடுமுடியில் ஸ்தாபிக்கப்பட்டு, மலைகளுக்கு மேலாய் உயர்த்தப்படும்; எல்லா ஜாதிகளும் அதற்கு ஓடிவருவார்கள். திரளான ஜனங்கள் புறப்பட்டு வந்து, நாம் கர்த்தரின் பர்வதத்துக்கும், யாக்கோபின் தேவனுடைய ஆலயத்துக்கும் போவோம் வாருங்கள்; அவர் தமது வழிகளை நமக்குப் போதிப்பார்; நாம் அவர் பாதைகளில் நடப்போம் என்பார்கள்; ஏனெனில் சீயோனிலிருந்து வேதமும், எருசலேமிலிருந்து கர்த்தரின் வசனமும் வெளிப்படும். விக்கிரகங்கள் கட்டோடே ஒழிந்துபோம்." (எசா. 49. 6: 56. 7: 2. 2, 3, 18.) என்று வேதம் கூறுகிறது. மேசியா வருவார் என்று ஜனங்கள் எதிர்பார்த்துக்கொண்டிருந்தபோது ஒரு பெரியவர் தோன்றி, தீர்க்கதரிசிகள் உரைத்த மேசியா தாமே என்று கூறி, அதற்குத் திருஷ்டாந்தமாக அற்புதஞ்செய்து, சத்தியத்தை உபதேசித்து, தாம் பரத்திலிருந்து வந்தவரென்று வெளிப்படுத்தி, சத்தியசாட்சிகளாக சீஷர்களை ஏற்படுத்தி, அவர்களுக்கு அற்புதவரங்களை அளித்து, தம்முடைய வேதத்தை சகல ஜனங்களுக்கும் போதிக்கும்படிக் கட்டளையிட்டு, உலகத்தில் தம்முடைய வேதத்தைக் கைக்கொள்ளும் திருச்சபையை நாட்டி, அந்த வேதத்தில் உலகமுடிவுபரியந்தம் சம்பவிக்கப்போகிற காரியங்களை முன்னறிவித்து, தர்மத்தை நிலைநிறுத்தினர்.

சரித்திரம் இன்னதென்று முற்றிலும் அறியாதவனுக்கு வேதத்தில் அடங்கிய இந்த விஷயங்களை முதல்முதல் சொல்லிக் காண்பித்தால், அல்லது வேதத்தை அவன் வாசித்துப் பார்த்தால், அவன் வியப்புகொண்டு இவைகள் யதார்த்தமாய் நடந்தவைகளோ, கட்டுக்கதைகளோ என்று சந்தேகிக்க இடமாகும். அப்படியிருக்கும்போது அவனுக்குப் பின்வரும் விசேஷங்களை விபரமாய எடுத்துச் சொல்லி அவைகளை அவன் மனதில் அநுவயப்படுத்தி நிதானித்து அறிந்துகொள்ளும்படி சொல்லவேண்டியது, அவையாவன:

3. Let it be asked· "Is this true?" and take, as answer, the following facts; first separately, and then unitedly,

(a) முதலாவது, ஒரு ஆதிகாரணக்கடவுள் உண்டு என்றும், அவரை வணங்கி மனதாரத் தீவினை அகற்றி நல்வினை செய்வதே தர்மமென்றும், இம்மையில் செய்யும் நன்மைதிமைக்குத்தக்க பலன் மறுமையில் கிடைக்கும் என்றும், உலகத்திலுள்ள மனுஷர் யாவரும் சாதாரணமாய் ஒப்புக்கொள்ளுகிற இயல்வேதமாகிய கோட்பாடுகளுக்கு ஆதாரம் அருள்வேதத்தில் உண்டென்றும், அருள்வேதத்தினால் இயல்வேதம் உண்மைபெற்றுத் திருஷ்டாந்தப்படுகிறதென்றும், இந்த வேதம் அருளப்பட்டதே மனுஷர்களுக்குரிய இகபரநன்மைக்கடுத்த முக்கியமான காரணமென்றும், உலகத்திலுள்ள பற்பல ஜாதிஜனங்கள் அருள்வேதத்தை ஒப்புக்கொண்டு அதின் விதிவிலக்குகளை அநுசரிக்கவேண்டியதென்றும், அதை அநுசரிக்கிறதினால் பலன் உண்டென்றும், அது நம்முடைய விசேஷித்த அங்கிகாரத்துக்குரியதாகையால் அதை ஆய்ந்தோய்ந்து விசாரித்து அறிந்துகொள்ளவேண்டியதென்றும் அவனுக்குச் சொல்லவேண்டியது.

(a) Natural religion has owed its establishment in a large degree to the Scriptures, as many allow, so that Scripture has claims upon our natural piety. Nor must it be thought that the establishment of natural religion by revelation destroys the proof of reason.

(a) Revelation—Bible.

இரண்டாவது, வேதத்திலுள்ள ஆதி ஆகமங்கள் மனுஷர்களுடைய பூர்வ சரித்திரத்தையும், காலஅட்டவணையையும் தொகுப்பாயும் தெளிவாயும் காண்பிக்கிறதென்றும், அவைகள் பூர்வ கிரந்தகர்த்தாக்களும் வித்துவான்களும் யதார்த்தமாய் எழுதிவைத்த சரித்திரங்களுக்கும் சம்பவங்களுக்கும் விகாரமாயிராமல் அவைகளுக்கு ஒத்திருக்கிறதென்றும் சொல்லவேண்டியதுமன்றி, வேதத்துக்கு இந்தப் புறச்சாட்சியல்லாமல் அகச்சாட்சியும் உண்டென்றும்; வேதத்தில் கண்டிருக்கிற காரியங்கள் மனதிற்கு விகற்பமாயிராமல் இயல்பாயிருந்து உண்மையாய்த் தோன்றுகிறதென்றும், விசேஷமாய்ப்

(b) The first parts of Scripture are of acknowledged antiquity, and its history and chronology credible, both from,

1. Common (profane) history, and

2. Internal evidence.

புதிய ஏற்பாட்டில் அடங்கிய சரித்திரம் அக்காலத்தில் இருந்த வித்துவான்கள் எழுதிவைத்த நூல்களினால் உண்மை பெற்று விளங்குகிறதென்றும், சாதாரண சம்பவங்களோடு அற்புதசெயல்களும் கண்டிருக்கிறபடியால் அவைகள் ஒன்றையொன்று திருஷ்டாந்தப்படுத்துகிறதென்றும் சொல்லவேண்டியது.

மூன்றாவது, யூதர்கள் என்னப்பட்ட ஜனங்கள் பூர்வம் முதல் இருந்திருக்கிறார்களென்பது பிரத்தியட்சமான காரியமென்றும், அவர்களுடைய தர்மமும் நியமமும் தேவ அருளினால் மோசே எழுதின நியாயப்பிரமாண வேதாகமத்தில் அடங்கியிருக்கிறதென்றும், அவர்களுக்கும் மற்ற உலகத்தார்களுக்கும் வேதக்கொள்கைகளிலும் ஆசாரங்களிலும் அதிக வித்தியாசமுண்டென்றும், அவர்கள் மற்ற ஜனங்களோடே சேராமல் பிரத்தியேகமான வேதக்காரராயிருந்து விக்கிரகாராதனையைத் தவிர்த்து அரூபியாகிய ஒன்றான மெய்க்கடவுளையே நமஸ்கரித்துவந்தார்களென்றும் சொல்லவேண்டியது.

(c) The Jews, the peculiar people of God, owed most of their history to their religion, and preserved (and they alone) the truths of natural religion uncorrupted.

நான்காவது, திறைமொழியாளராகிய மோசேயானவர் யூத ஜனங்களை நோக்கி: "உங்கள் தேவனாகிய கர்த்தர் என்னைப்போல் ஒரு தீர்க்கதரிசியை உங்களுக்காக உங்கள் நடுவே உங்கள் சகோதரரிலிருந்து எழும்பப்பண்ணுவார், அவருக்குச் செவிகொடுப்பீர்களாக" என்று சொல்லி, யூதர்களுக்கு அருளப்பட்ட பூர்வ வேதத்தில் அவர்களுடைய மேசியாவைக்குறித்து எழுதிவைத்தாரென்றும், *இந்தத் தீர்க்கதரிசனத்தின்படியே வருவாரென்று யூதர்கள் எதிர்பார்த்திருந்த மேசியாவானவர் ஜெகத்குருவாக வந்து உதித்தாரென்றும்,

(d) A Messiah that was expected appeared, fulfilling ancient prophecies, whose religion, sometimes above, but never contrary to reason, became the religion of the world; the Jewish polity in the mean time destroyed, and the Jews scattered yet preserved; each part, and much more the whole, in fulfilment of prophecies, supplying fresh evidence.

* உபா. 18. 15.

(a) Natural religion has owed its establishment in a large degree to the Scriptures, as many allow, so that Scripture has claims upon our natural piety. Nor must it be thought that the establishment of natural religion by revelation destroys the proof of reason.

(a) Revelation—Bible.

(a) முதலாவது, ஒரு ஆதிகாரணக்கடவுள் உண்டு என்றும், அவரை வணங்கி மனதாரத் தீவினை அகற்றி நல்வினை செய்வதே தர்மமென்றும், இம்மையில் செய்யும் நன்மைதின்மைக்குத்தக்க பலன் மறுமையில் கிடைக்கும் என்றும், உலகத்திலுள்ள மனுஷர் யாவரும் சாதாரணமாய் ஒப்புக்கொள்ளுகிற இயல்வேதமாகிய கோட்பாடுகளுக்கு ஆதாரம் அருள்வேதத்தில் உண்டென்றும், அருள்வேதத்தினால் இயல்வேதம் உண்மைபெற்றுத் திருஷ்டாந்தப்படுகிறதென்றும், இந்த வேதம் அருளப்பட்டதே மனுஷர்களுக்குரிய இகபரநன்மைக்கடுத்த முக்கியமான காரணமென்றும், உலகத்திலுள்ள பற்பல ஜாதிஜனங்கள் அருள்வேதத்தை ஒப்புக்கொண்டு அதின் விதிவிலக்குகளை அநுசரிக்கவேண்டியதென்றும், அதை அநுசரிக்கிறதினால் பலன் உண்டென்றும், அது நம்முடைய விசேஷித்த அங்கீகாரத்துக்குரியதாகையால் அதை ஆய்ந்தோய்ந்து விசாரித்து அறிந்துகொள்ளவேண்டியதென்றும் அவனுக்குச் சொல்லவேண்டியது.

(b) The first parts of Scripture are of acknowledged antiquity, and its history and chronology credible, both from,

1. Common (profane) history, and

2. Internal evidence.

இரண்டாவது, வேதத்திலுள்ள ஆதி ஆகமங்கள் மனுஷர்களுடைய பூர்வ சரித்திரத்தையும், காலஅட்டவணையையும் தொகுப்பாயும் தெளிவாயும் காண்பிக்கிறதென்றும், அவைகள் பூர்வ கிரந்தகர்த்தாக்களும் வித்துவான்களும் யதார்த்தமாய் எழுதிவைத்த சரித்திரங்களுக்கும் சம்பவங்களுக்கும் விகார்மாயிராமல் அவைகளுக்கு ஒத்திருக்கிறதென்றும் சொல்லவேண்டியதுமன்றி, வேதத்துக்கு இந்தப் புறச்சாட்சியல்லாமல் அகச்சாட்சியும் உண்டென்றும்; வேதத்தில் கண்டிருக்கிற காரியங்கள் மனதிற்கு விகற்பமாயிராமல் இயல்பாயிருந்து உண்மையாய்த் தோன்றுகிறதென்றும், விசேஷமாய்ப்

புதிய ஏற்பாட்டில் அடங்கிய சரித்திரம் அக்காலத்தில் இருந்த வித்துவான்கள் எழுதிவைத்த நூல்களினால் உண்மை பெற்று விளங்குகிறதென்றும், சாதாரண சம்பவங்களோடு அற்புதசெயல்களும் கண்டிருக்கிறபடியால் அவைகள் ஒன்றையொன்று திருஷ்டாந்தப்படுத்துகிறதென்றும் சொல்லவேண்டியது.

(c) The Jews, the peculiar people of God, owed most of their history to their religion, and preserved (and they alone) the truths of natural religion uncorrupted.

மூன்றாவது, யூதர்கள் என்னப்பட்ட ஜனங்கள் பூர்வம் முதல் இருந்திருக்கிறார்களென்பது பிரத்தியட்சமான காரியமென்றும், அவர்களுடைய தர்மமும் நியமமும் தேவ அருளினால் மோசே எழுதின நியாயப்பிரமாண வேதாகமத்தில் அடங்கியிருக்கிறதென்றும், அவர்களுக்கும் மற்ற உலகத்தார்களுக்கும் வேதக்கொள்கைகளிலும் ஆசாரங்களிலும் அதிக வித்தியாசமுண்டென்றும், அவர்கள் மற்ற ஜனங்களோடே சேராமல் பிரத்தியேகமான வேதக்காரராயிருந்து விக்கிரகாராதனையைத் தவிர்த்து அரூபியாகிய ஒன்றான மெய்க்கடவுளையே நமஸ்கரித்துவந்தார்களென்றும் சொல்லவேண்டியது.

(d) A Messiah that was expected appeared, fulfilling ancient prophecies, whose religion, sometimes above, but never contrary to reason, became the religion of the world; the Jewish polity in the mean time destroyed, and the Jews scattered yet preserved; each part, and much more the whole, in fulfilment of prophecies, supplying fresh evidence.

நான்காவது, நிறைமொழியாளராகிய மோசேயானவர் யூத ஜனங்களை நோக்கி: "உங்கள் தேவனுகிய கர்த்தர் என்னைப்போல் ஒரு தீர்க்கதரிசியை உங்களுக்காக உங்கள் நடுவே உங்கள் சகோதரரிலிருந்து எழும்பப்பண்ணுவார், அவருக்குச் செவிகொடுப்பீர்களாக" என்று சொல்லி, யூதர்களுக்கு அருளப்பட்ட பூர்வ வேதத்தில் அவர்களுடைய மேசியாவைக்குறித்து எழுதிவைத்தாரென்றும், *இந்தத் தீர்க்கதரிசனத்தின்படியே வருவாரென்று யூதர்கள் எதிர்பார்த்திருந்த மேசியாவானவர் ஜெகத்குருவாக வந்து உதித்தாரென்றும்,

* உபா. 18. 15.

மோசேக்குப் பிற்காலத்தில் யூதர்களுக்குள் தோன்றின ஏசாயா முதலான தீர்க்கதரிசிகள் மேசியாவைக்குறித்து முன் உரைத்திருக்கிறபடியே யூதஜனங்கள் அவரை ஏற்றுக்கொள்ளாமல் விரோதித்துப் புறக்கணித்துத் தள்ளிவிட்டார்களென்றும், அவருடைய பரம உபதேசங்களைக் கேட்டு, அவருடைய திவ்வியமான அற்புதங்களைக் கண்டு, அவருடைய மாசில்லாத நடக்கையைக் கவனித்த புறஜாதிகள், தீர்க்கதரிசனத்தில் முன்னமே சொல்லியிருக்கிறபடியே, அவரைத் தங்களுக்குரிய ரட்சகராக ஏற்றுக்கொண்டார்களென்றும், இந்த ஜெகத்குருவானவர் ஸ்தாபித்த மார்க்கம் மனுஷர்களுடைய புத்திக்கும் அநுபவத்துக்கும் ஸ்திதிக்கும் ஏற்றிருந்தபடியினால் உத்தமமான சத்தியமார்க்கமென்று விளங்கி எங்கும் பரவி, எதார்த்தம் உலக விரோதமானபடியால், தங்களை அறியாத கொடிய பாதகரால் சத்தியமார்க்கம் துன்பப்படுத்தப்பட்டாலும் உலகமுழுதுக்கும் ஏக பொதுமார்க்கமாய் விளங்குகிறதென்றும், இப்படியிருக்கும்போது யூதஜனங்களும் அவர்களுடைய ராஜாங்கமும் அழிந்து, தப்பி மீந்திருந்த யூதர்கள் பல தேசங்களுக்குச் சிறைகளாகக் கொண்டுபோகப்பட்டு இந்த ஆயிரத்தெண்ணூறு வருஷகாலமாய் அந்நிய தேசங்களில் பரதேசிகளாகச் சஞ்சரித்து, "கர்த்தர் உங்களைக் கொண்டுபோய்விடும் எல்லா ஜனங்களுக்குள்ளும் பிரமிப்பும் பழமொழியும் பரியாசச் சொல்லுமாவீர்கள்"* என்று திருவுளத்தை வெளிப்படுத்தும் நிறைமொழி மாந்தர் வாக்கின்படியே சகல ஜனங்களோடும் கலந்திருந்தாலும் பிரத்தியேகமாய்த் தங்கள் வேதாசாரங்களையும் நியமநிஷ்டைகளையும் கைக்கொண்டுவந்து, தாங்களே வேதத்துக்குச் சாட்சியாக உலகத்தில் அற்புதமாய் விளங்குகிறார்களென்றும் நிறைவேறின இவைமுதலான

1. Note further, That, though the immediate facts may be explained on natural principles, the correspondence between these facts and predictions cannot, as in the case of the dispersion of the Jews and the birth of the Messiah.

2. There are to be added many prophecies still in course of fulfilment, the fulfilment of which

* உபா. 20. 37.

தீர்க்கதரிசனங்களும் தவிர, இன்னும் நிறைவேறிவரும் தீர்க்கதரிசனங்களும் வேதத்துக்கு அத்தாட்சிகளாயிருந்து, சிதறியிருக்கிற யூதஜனங்கள் மறுபடியும் மேசியாவின் ஆளுகைக்குட்பட்டு புறஜாதிகளோடு கலந்து ஏக ஐக்கியமுள்ளவர்களாய் இகபரசுகமடைவார்களென்றும் சொல்லவேண்டியது.

is highly probable from the fulfilment of prophecy in the past.

இவைமுதலான வேத நியாயங்களையும், அவைகளின் சம்பந்தங்களையும் உற்றாராய்ந்துபார்க்கிறவன், இது மனுஷ சக்தியினால் உண்டானதல்ல, தேவசக்தியினால் உண்டானதென்றே தீர்மானித்து அங்கீகரிக்கவேண்டியதாகும்.

c. Let all this be examined apart and together, and then add other obvious examples of harmony between prophecy and facts.

இந்த அதிகாரத்தில் சொல்லப்படும் காரியங்களின் தொகுப்பு என்னவென்றால், ஒரு விஷயத்தைப் பற்றிப் பலவிதமாக அநேக சாட்சிகள் இருக்குமானால், அவைகளையெல்லாம் சீர்தூக்கிப் பார்க்கவேண்டும். தனித்தனியான இரண்டுமூன்று சாட்சிகளினால் விளங்காத காரியம், பல சாட்சிகளின் சம்பந்தத்தினால் விளங்கும். பிரத்தியட்சமும் நேர்மையுமான இரண்டொரு சாட்சியினால் ஒரு காரியம் விளங்குகிறதுபோலவே, சவிஸ்தாரமும் சார்பும்பொருத்தமுமான பல சம்பந்தசாட்சிகளினாலும் ஒரு காரியம் விளங்கும். அற்புதம் தீர்க்கதரிசனம் முதலான சாட்சிகள் வேதமானது மனுஷசக்தியினாலல்ல, தேவசக்தியினால் உண்டாயிற்றென்று விளக்கும். பல சாட்சிகளினால் விளங்கும் ஒரு காரியத்துக்கு விரோதமாக வேறே சாட்சிகள் இருந்தாலும் அந்தக் காரியத்தின் தன்மையை அறிந்து, தர்மத்தையும் ஒழுக்கத்தையும் பற்றின காரியம் முக்கியமான காரியமானபடியினால் எந்தப்பட்சத்தில் சார்வதினால் இகபரநன்மை உண்டோ அந்தப்

*F* In conclusion, let it be remembered,

1. The force of this evidence depends on the whole taken unitedly, and must be admitted to have great weight.

2. Even as far as it has been here given, the evidence is more than human—miracles, prophecies, other proofs.

3. These proofs taken together, not only add to the evidence—they multiply it.

4. And, though proofs to the contrary may also be set down, yet in matters and conduct (not in case of events or of speculation) the question of which view is safer is important. A mistake on the one side, in rejecting

Christianity, is more dangerous than a mistake on the other, in accepting it: and the more so, as,

பட்சத்தில் சார்வதே உத்தமமாகையால், ஆத்துமலாபத்தை நாடுகிற வைதீகபட்சத்தை நாடாமல் அதற்கு விரோதமான லௌகீகபட்சத்தை நாடுவது பெருநஷ்டத்துக்கு ஏதுவாகுமென்பதே இந்த அதிகாரத்தில் சொல்லப்படும் காரியங்களின் தொகுப்பு.

5. Christianity is true, not only if one particular fact prove it, but unless all the things herein alleged can reasonably be supposed to be accidental.

வேதத்தில் கண்டிருக்கிற காரியங்கள் தெய்வ எத்தனமாய் உண்டாகாமல் தற்செயலாய் உண்டானதென்று சொல்லக்கூடாதாகையால், ஒரு சாட்சியினால்மாத்திரமல்ல, பல சாட்சிகளினால் விளங்குகிற கிறிஸ்துமார்க்கத்தை உண்மையென்றே அங்கீகரித்துக்கொள்ளவேண்டும். வேத அத்தாட்சிகளாகிய அற்புதங்களும் தீர்க்கதரிசனங்களும் அவைகளுக்குச் சார்பான புறச்சாட்சி அகச்சாட்சியாகிய

6. There being no presumption against Christianity as miraculous, or against its scheme or parts, this evidence, though it may be lessened, cannot be destroyed.

பல அத்தாட்சிகளும் நிராகரிக்கப்படாமலிருக்கிறபடியினால் வேத விரோதிகள் குயுக்தியினால் வீணான ஆட்சேபனைகளைச் செய்யாமல் அத்தாட்சிகளைச் சீர்தூக்கிப்பார்த்து எந்தப்பட்சத்தில் சார்வதினால் ஆத்மலாபமுண்டென்பதைப் பகுத்தறிந்து, சாரவேண்டிய பட்சத்தில் சார்ந்து வேத சத்தியத்தையும் தங்கள் உத்தமத்தையும் விளங்கப்பண்ணவேண்டும். *

* இந்த அதிகாரத்தில் சேரான புற அத்தாட்சிகள் (External or positive evidence) சொல்லப்பட்டது. சேரான அக அத்தாட்சிகளுமுண்டு. (Internal or subjective evidence). தீர்க்கதரிசன அத்தாட்சி நிலையுள்ள முதலாவது அத்தாட்சி. அற்புத அத்தாட்சி கண்டவர்களுக்குப் பிரத்தியட்சமாய் விளங்கின இரண்டாவது அத்தாட்சி; அது இயலுக்கு விரோதமாயிராமல், மனுஷசக்திக்கு மேற்பட்டதாயிருக்கிறது. (not supernatural but superhuman). வேறொருவரும் செய்யாதகிரியையை இரட்சகர் செய்தார்.(யோ.15.24.) மறுஜநநத்தால் உண்டாகும் மாறுதலும் குணப்படுதலும் அவைகளை அநுபவித்த யாவருக்கும் விளங்கும் மூன்றாவது அத்தாட்சி, கரும்புதின்னவனுக்கு அதின் ருசிதெரியும், "தேவனுடைய குமாரனிடத்தில் விசுவாசமாயிருக்கிறவன் சாட்சியைத் தனக்குள்ளே கொண்டிருக்கிறான். (1 யோ. 5. 10.) நாம் தேவனுடைய பிள்ளைகளாயிருக்கிறோமென்று ஆவியானவர் தாமே நம்முடைய ஆவியுடனே கூடச் சாட்சிகொடுக்கிறார்." (ரோ. 8. 16.) சமாரியத்தார் இரட்சகரைக் கண்டுபேசின ஸ்திரீயை நோக்கி: "உன் சொல்லினிமித்தம் அல்ல, அவருடைய உபதேசத்தை நாங்களே கேட்டு, அவர் மெய்யாய்க் கிறிஸ்துவாகிய உலகரட்சகர் என்று அறிந்து விசுவாசிக்கிறோம்" என்று சொன்னது சத்தியத்துக்குச் சாட்சியாய் வேதத்தில் எழுதியிருக்கிறது. (யோ. 4. 42.)

ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு
வையத்தின் வானநணிய துடைத்து.

சந்தேகம் தெளிந்தவர்களுக்கு இவ்வுலகத்தைப்பார்க்கிலும் மறு உலகம் சமீபமாயிருக்கும் என்று குறளில் சொல்லியிருக்கிறது.

"Heaven is nearer than earth to those men of clear minds who are freed from doubt."

# CHAPTER VIII.

*Of the objections which may be made against arguing from the analogy of Nature, to Religion.*

## 8—ம் அதிகாரம்.

### உலக இயலில் விளங்கிய ஒப்புமைநியாயத்தைக் கொண்டு வேதஉண்மையைத் திருஷ்டாந்தப்படுத்துகிறது தகுதியல்லவென்னும் ஆட்சேபனைகளைப் பற்றிச் சொல்லியது.

ஒப்புமைநியாயத்தைக்கொண்டு யாதொரு காரியத்தை ரூபிக்கிறது தகுதியல்லவென்று சிலர் நிதானிக்காமலும் தாங்கள் சொல்லுகிறது இன்னதென்று அறியாமலும் ஆட்சேபனை செய்வார்கள். அவர்கள் சொல்லுகிற சில ஆட்சேபனைகளும் அவைகளுக்குரிய சமாதானங்களுமாவன:

Against reasons founded on analogy some may raise objections; and a few of these it is intended here to consider.

A. (1) அருள்வேதத்திலுள்ள சம்சயங்களை இயல்வேதத்திலுள்ள சம்சயங்களோடு ஒத்திட்டு ஒப்புமைநியாயத்தினால் அந்த சம்சயங்களுக்குச் சமாதானம் சொல்வது தகாது, அது அற்பமான நியாயம்; இயலிலும் அருளிலுமுள்ள சம்சயங்கள் முழுவதையும் நிவிர்த்திசெய்வதே தகுதியென்றும்; (2) மனுஷருக்குரிய இம்மைக்கடுத்த லௌகீகவிஷயங்களில் தோன்றுகிற சங்கடங்கள் மறுமைக்கடுத்த பரத்துக்குரிய வைதீகவிஷயங்களிலும் தோன்றுமென்றும் சொல்லி தர்மத்தை நிலைநிறுத்துகிறது தகுதியல்லவென்றும்; (3) தேவசெயலையும் நடத்தலையும்பற்றி அருள்வேதத்திலுள்ள சம்சயங்கள் இயல்

A Enumerated 1—5. It is alleged, for example,

வேதத்திலும் உண்டென்று நியாயஞ்சொல்வது தேவநீதியை யும் தயவையும் விளங்கும்படி செய்யக்கூடிய தகுதியான நியா யமல்லவென்றும்; (4) இயலிலும் அருளிலும் உண்டாயிருக் கிற சம்சயங்களுக்கு ஒப்புமைநியாயம் எவ்வளவு சொன் னலும் அது மனதை ரம்மியப்படுத்தத்தக்க போதுமான நியா யமல்லவென்றும்; (5) இப்படிப்பட்ட சம்சயமுள்ள ஒப்பு மைநியாயத்தினால் மனுஷர் இம்மைக்கடுத்த பலனையும் இன் பத்தையும் நாடாமல், மறுமைக்கடுத்த பலனையும் இன்பத்தை யும் நாடித்தேடுகிறதற்கு இந்த ஒப்புமைநியாயம் போதுமான நியாயமல்லவென்றும் ஆட்சேபனைசெய்வார்கள். மனுஷர் கள், நியாயத்துக்குரிய இருபட்சத்தையும் கவனிக்காமல் ஒரு பட்சத்தைமாத்திரம் கவனித்துப்பார்க்கிறதினாலும், பகுத்தறி யக்கூடியதைப் பகுத்தறியாதிருக்கிறதினாலும், சரீர அசதியினா லும், உலகமயக்கத்தினாலும், உண்மையை அறியவேண்டுமெ ன்கிற விருப்பமும் முயற்சியும் இல்லாமையினாலும், செய்கிற இவ்வைந்து ஆட்சேபனைகளுக்கும் தக்க சமாதானங்களை ஒவ் வொன்றாய்ச் சொல்லுகின்றோம்.

1. It is a poor thing to meet difficulties in revealed religion by saying that there are the same difficulties in Nature, when we want to clear religion from all difficulties Answer,

*(a)* The thing wanted is, it seems, to *comprehend* Providence and God.

முதலாவது, இப்படி ஆட்சேபனை செய்கிறவர்கள் எல்லா சம்சயங்களிலுமுள்ளவைகளை ஒருமிக்க முற்றிலும் சிக்கறுத்து சந்தேகங்களையெ ல்லாம் நிவிர்த்திசெய்யவேண்டுமென்று கேட்கிறார்கள்; இப்படிக் கேட்கிறவர் கள், தனக்குவஸமயில்லாத பகாப்பொ ருளாகிய தேவதத்துவம் இன்னதென்று பகுத்தறிந்து ஆதிமுதல் அந்தம்வரைக் கும் நடந்தேறும் அவருடைய செயல் களை முற்றிலும் கிரகித்து மனோவாக்கு க்கு எட்டாத அவருடைய திருவுளத்தை ஆராய்ந்துணர்ந்துகொள்ளும்படி காரியங்களை மனதில் சீர் தூக்கிப்பாராமல் வாயில் வந்தபடியெல்லாம் துணிந்து ஆட் சேபிக்கிறார்கள்.

காணப்படுகிற புகையைக்கொண்டு காணப்படாத நெருப்பு உண்டென்று அநுமிக்கிறதுபோல, சந்தேகித்து ஆட்சேபிக்கப்பட்ட பொருளாகிய அருள்வேதத்தை யாவரும் பிரத்தியட்சமாய் உண்டென்று ஒத்துக்கொள்ளுகிற இயல்வேதத்தோடு ஒத்திட்டு அநுமானித்து நியாயஞ்சொல்லுகிறது தகுதியென்று புத்திசாலிகள் யாவரும் ஒப்புக்கொள்ளுவார்கள். இப்படியிருக்க, இது அற்பசொற்ப நியாயமென்று சொல்லலாமா? இந்தப் பொது அநுமான நியாயத்தினுலேதான் உலககாரியங்கள் நடந்தேறிவருகிறது. மரணத்துக்கேதுவான யாதொரு கொடியவியாதி நேரிட்டிருக்கும்போது பிரபலமான கைகண்ட வைத்தியர்கள்முதலாய் உத்தேசித்து அநுமானப்பிரயோகம் செய்யக்கூடுமே ஒழிய நிச்சயித்துத் தீர்மானப்பிரயோகம் செய்யக்கூடாமல், பிரயோகிக்கப்படும் மருந்து கேட்குமோ கேளாதோ என்கிற சந்தேகத்தோடேதான் பிரயோகிக்கிறுர்கள். உத்தேசமான இந்தப் பிரயோகத்தைத் துணிந்து செய்யக்கூடாமற்போனல் மன்னுயிர் பிழைத்து வாழக்கூடுமோ?

(b) To reason from the known (natural religion) to the unknown (revealed) is not a poor thing, compared with no knowledge; so it is allowed in science and medicine.

இப்படி ஆட்சேபிக்கிறவர்கள் அருள்வேதத்தைக்குறித்து மாத்திரம் தோஷம் சொல்ல நினைக்கிறுர்களே ஒழிய இயல்வேதத்தைக்குறித்துத் தோஷம் சொல்ல நினைக்கிறதில்லை. அருளைப்பற்றிச் சொல்லும் தோஷம் இயலையும் பற்றுமாகையால், வரிவடிவாகிய அருள்வேதத்தில் அடங்கிய அருமையான உபதேசங்களுக்குமாத்திரமல்ல, ஒலிவடிவாகிய இயல்வேதத்தால் விளங்கிய சாதாரண கொள்கைகளுக்கும் பின்னமுண்டாகும். இயல் உண்மையானல் அதனேடு சம்பந்தப்பட்ட அருளும் உண்மையென்று விளங்கவேண்டியதென்றே நம்முடைய அநுபவத்தில் பட்டிருக்கிறது.

(c) If natural religion is admitted to be true, it is important to show that objections to revealed religion apply equally to natural, for so revealed religion is vindicated.

2. But it is surely a strange way of convincing men of the obligations of religion to show that they have as little reason for their worldly pursuits. Answer,

இரண்டாவது, வியவகாரம் வியாபாரமுதலான லௌகிக விஷயங்களில் உலகஇயலின்படி அநேக சங்கடங்கள் நேரிடுகிறதுபோலவே, மனுஷர் இகபரசுகமடைவதற்கு தர்ம விஷயங்களைப்பற்றி அவசியமாய் அநுசரிக்கவேண்டிய விதிவிலக்குகளைப்பற்றிய வேதத்திலும் பல சங்கடங்கள் உண்டென்று சொல்வது மனுஷபுத்திக்கு விகாரமாய்த் தோன்றுமென்போமானால், லௌகிககாரியங்களின்படியே வைதிககாரியங்களும் நம்முடைய நடக்கையைப்பற்றினதாகையால் ஒன்றுக்குரிய நியாயம் மற்றொன்றிற்குமுரியதென்று கருதவேண்டும். இம்மைக்கடுத்த காரியங்கள் பயன்படும்படி மனுஷர் ஜாக்கிரதையுள்ளவர்களாயிருக்கிறதுபோலவே, மறுமைக்கடுத்த காரியங்களும் பயன்படும்படி அதிக ஜாக்கிரதையுள்ளவர்களாயிருக்கவேண்டியது விவேகிகளின் கடமையே. விதைத்தவன் அறுப்பான் என்பதற்குச் சந்தேகமில்லையே.

(*a*) Religion is a practical thing, as business is; and, like reasons, or any reasons, may be sufficient to guide us in both cases, and ought, from prudence, to guide us.

வேதம் மெய்யானால் பலவித சம்சயமான அத்தாட்சிகளுக்குரியதாயிருக்கலாகாது என்று ஆட்சேபிப்பவர்கள், நம்முடைய வாழ்வுக்கடுத்த வியவகாரம் வியாபாரம்முதலான உலகவிஷயங்களிலும் பலவித சமுசயமான காரியங்கள் உண்டென்பதை அறிந்தொத்துக்கொள்ளவேண்டியது. உலக இயலை நடத்துகிற கடவுளே வேதத்துக்கும் காரணரானபடியால் ஒன்றுக்குரிய அத்தாட்சியே மற்றொன்றுக்குமுரியதாகும். வாய்க்குமோ வாய்க்காதோ என்று சம்சயப்படத்தக்க உலககாரியங்களிலும் மனுஷர் முயற்சிசெய்வார்களானால் நிச்சய

(*b*) If the objection be that religion should not have doubtful evidence; then note that worldly pursuits are often doubtful, yet men follow them. Besides, the case of religion, though not free from all doubt, is much stronger than the case of worldly conduct.

மாய் வரக்கூத்தக்க பரமகாரியங்களில் விடாமுயற்சி செய்யவேண்டியது நியாயமல்லவா?

மூன்ருவது, தெய்வச்செயலையும் நடத்தலையும்பற்றிய ஆட்சேபனைகளுக்கு நேராய் உத்தரவு சொல்லாமல், இவைகளைப்பற்றி அருள்வேதத்திலுள்ள சம்சயங்கள் இயல்வேதத்திலும் உண்டென்று நியாயஞ்சொல்வது தெய்வநீதியையும் தயவையும் விளங்கும்படி செய்யத்தக்க தகுதியான நியாயமல்லவென்றும் ஆட்சேபிக்கிருர்கள்.

3. It is a strange way of vindicating God's character in religion for goodness and justice, to show that like objections lie against Providence, when we ought rather to answer the objections themselves. Answer,

தெய்வகுணமும் செயலும் நியாயமாயும் நீதியாயுமிருக்கிறதென்று தெளிவிக்கிறது இந்தப் பிரபந்தத்தின் நோக்கமல்ல; மனுஷர் செய்யவேண்டிய கடமைகளைச் சொல்வதே இதன் நோக்கம். இவ்விரண்டும் வெவ்வேருன காரியங்கள், இவைகளைக் கலக்கலாகாது. தெய்வாதீனத்தால் விளங்கும் தெய்வசெயலை நாம் பகுத்தறிந்து அளவிடக்கூடாதாகையால், அது நியாயத்துக்கும் நீதிக்கும் விரோதமென்று எப்படிச் சொல்லக்கூடும்? அவருடைய செயல்களில் சில காரியங்கள் நமக்கு முற்றும் விளங்காமற்போனுலும், அவர் குறைவற்ற ஞானமும் பூரண நன்மையுமுள்ளவரானபடியால் அவருடைய செயலெல்லாம் நீதியும் நியாயமுமாயிருக்குமென்று நாம் சந்தேகமில்லாமல் சொல்லக்கூடும். திருவுளத்தையும் திரிகால சம்பவங்களையும் முற்றிலும் அறிந்தவர்களுக்குமாத்திரம் பரமரகசியங்கள் விளங்கும்.

(a) The treatise does not profess to vindicate God's character, but to show men their obligations; and to do this, all that is needed is to show that, for ought we know, the objections are consistent with goodness and justice, and may be even proofs of them.

(b) நாம் கண்டறியும் காரியங்களைக்கொண்டு கண்டறியாத காரியங்களை அநுமானித்தறியவேண்டியிருக்கிறபடியால், உலகஇயல்வில் விளங்கும் காரியங்களிலுல் வேதத்தில் விளங்

(b) It is attempted to answer objections to God's goodness and jus-

tice, not by showing that the like objections (*supposed conclusive*), be against Providence, but by showing that the objections *are not conclusive*, applying equally to God's present government as a matter of fact.

கும் காரியங்களை அநுமானித்தறியவேண்டியது நியாயமே. இம்மையில் தேவன் மனுஷருடைய நல்வினை தீவினைக்குத்தக்கதாய்ப் பலன் அளித்துத் தண்டிக்கிறாரென்று பிரத்தியட்சமாய்க் காண்கிறோம்; இப்படியே மறுமையிலும் செய்வாரென்று இதினால் திருஷ்டாந்தமாய் விளங்குகிறது.

(*c*) Even if these objections are not answered in this way, the facts of religion remain as credible, in spite of the objections.

(*c*) சொல்லப்படும் ஆட்சேபனைகளுக்கு நம்மால் உத்தரவு சொல்லக்கூடாமற்போனாலும், மனுஷர் தாங்கள் செய்யும் நன்மைதீமைக்குத் தக்க பலனை அடைந்து தீரவேண்டுமென்பது நிச்சயமே; இம்மையில் மனுஷருடைய செயலுக்கும் அதனால் உண்டாகிற பலனுக்கும் சம்பந்தம் உண்டாயிருக்கிறபடியே மறுமையிலும் உண்டாயிருக்குமென்பதற்கு இதுவே அத்தாட்சியாயிருக்கிறது.

(*d*) Though objections to the reasonableness of religion cannot be answered without considering its reasonableness, objections against its credibility may: for

தர்மத்தின் தன்மையானது தகுதியோ அல்லவோ என்று விசாரியாமல் அதைக் குறித்து ஆட்சேபனை செய்யக்கூடாதாயினும், அது நம்பிக்கைக்குரியதோ அல்லவோ என்பதைக்குறித்து ஆட்சேபனை செய்யலாம்.

(1.) It is a system of facts, and

(2.) Though sometimes useful to show how reasonable any part is, this cannot always be necessary, and

வேதவிஷயங்கள் மனோராஜ்யமான பாவனைகளாயிராமல், பிரத்தியட்சமாய் நடந்த காரியங்களாயிருக்கிறது. (2) அவைகள் தகுதியோ அல்லவோ என்று கவனித்தறியக்கூடியதாயினும் அவைகள் அவசியமல்ல, அவைகள் நம்முடைய நம்பிக்கைக்குரியவைகளோ அல்லவோ என்று அறிவதே அவசியம். (3.) சாதனையில்லாத போதனை உபயோ

கப்படாதாகையால் வேதவிஷயங்கள் கருத்தில்மாத்திரமல்ல, நடக்கையிலும் விளங்கவேண்டியிருக்கிறது. ஆகையால் வேதவிதி ஒவ்வொன்றிற்கும் நாம் நியாயஞ்சொல்லத் துணியாமல், அந்த விதிகளை நடக்கையினால் விளங்கப்பண்ணவேண்டும்; அதினால் தகுதியுள்ளதும் தகுதியில்லாததும் தானாய் விளங்கும்.

(3.) The obligations of religion depend upon the reasonableness, not of the system, but of the practice, and so it is enough if in the system there be nothing unreasonable; and

ஆதலால், உலக இயலுக்குரிய ஒப்புமைநியாயமானது தேவஞானத்தையும் நீதியையும் தயவையும் மற்ற வேதவிதிகளையும் குறித்துச் சொல்லப்படும் ஆட்சேபனைகளுக்கு நேரான நியாயமாயிராமற்போனாலும், கடவுளின் ஞானம் நீதி முதலியவைகள் நம்பப்படத்தக்கவைகளல்ல என்னும் நோக்கத்தோடே சொல்லப்படும் ஆட்சேபனைகளுக்கு நேரான நியாயமாயிருக்கும்.

(c) Analogy may supply no answer to objections against the goodness of the system, but it does to objections against the credibility of the system as a matter of fact. This is what is meant in these remarks,

நான்காவது, இயலைக்கொண்டு அருளை ஒப்புமைநியாயத்தினால் எவ்வளவாய் திருஷ்டாந்தப்படுத்தினாலும், அது மனதை ரம்மியப்படுத்தப் போதுமான நியாயமல்லவென்று ஆட்சேபிப்பது ஒருவாறு சரியே. ஒப்புமை நியாயம் நிச்சயத்தை உண்டுபண்ணுகிற பிரத்தியட்சமான நியாயமாயிராமல் காரியத்தை உத்தேசித்து அறிந்துகொள்ளத்தக்க அநுமான நியாயமாயிருக்கிறது. நம்முடைய ஜீவனார்த்த விஷயங்களுக்குரிய எந்தக் கட்டுப்பாடும் ஏற்பாடும் பூரண நிச்சயத்தைக் கொடுக்கத்தக்க பிரத்தியட்சப் பிரமாணத்தின்பேரில் நாட்டப்படாமல், கூடியமட்டும் காரியத்தை அறிந்துகொள்ளத்தக்க பொது அநுமான பிரமாணத்தின்பேரில் நாட்டப்பட்டிருக்

4. Religion rests on unsatisfactory evidence; that is, on evidence not sufficient for certainty; but

(a) So is the evidence of any system of life—what is best-what rules will secure it? Religion, therefore, is like every other real thing in this world, its evidence real, but not certain; uncertainty belonging to our very condition.

கிறது. அப்படியே பரமார்த்த விஷயத்தைப்பற்றிய ஏற்பாடும் பூரண நிச்சயத்தைக் கொடுக்கும் பிரத்தியட்சப் பிரமாணத்தின்பேரில் நாட்டப்படாமல், கூடியமட்டும் காரியத்தை அறிந்துகொள்ளத்தக்க பொது அநுமானப் பிரமாணத்தின் பேரில் நாட்டப்பட்டிருக்கிறது. ஜீவனார்த்தவிஷயத்தைப் பற்றிய சுகதுக்கங்களைக்குறித்து உலகத்தாருக்குள் பலவித விகற்பமான கோட்பாடுகளுண்டு. சிலர் இல்லறத்தை நாடி உழுதுண்டு, அல்லது திரைகடலோடித் திரவியம் தேடி வாழவேண்டுமென்றும், சிலர் ஒன்றும் நிச்சயமல்ல எல்லாம் அநித்தியம், எல்லாம் மாயை, ஆகையால் துறவறமே பரம தர்மமென்றும் சொல்லுவார்கள். வியாதிமுதலான துன்பங்கள் நேரிடும்போது, அவைகள் நீங்கிச் சுகமடைகிறதற்கு யாவரும் செய்யத்தக்க பிரயோகங்களைச் செய்கிறார்கள்; செய்தாலும் காரியம் வாய்க்கும் என்கிற நிச்சயம் யாருக்காவது உண்டா? ஆத்மசுகத்தைப்பற்றின விஷயத்திலும் அறியத்தக்க காரியங்களையும் செய்யக்கூடிய காரியங்களையும் கையாடித் தன்னால் செய்யக்கூடியதைச் செய்யவேண்டியதே. ஆத்மஞானவிஷயத்தைப்பற்றிய நிச்சயம் இம்மையில் தொடங்கி மறுமையில் பூரணப்படும்.

(b) Moreover, religion is simply intended to try and discipline our virtue. It is a probation, as it would not be, if its evidence were overbearing.

மேலும், வேதமானது மனுஷருடைய குணத்தையும் உத்தமத்தையும் பரீட்சிக்கும்பொருட்டு அருளப்பட்டிருக்கிறது. பூரணநிச்சயமிருந்தால் பரீட்சைக்கு இடமிராது. சில போதுமான நியாயங்களிருந்தால் அவைகளைக் கையாடி தர்மநிலையில் நிற்கவேண்டும். வேதம் நம்முடையமனோராஜ்யத்துக்குத்தக்க நவீனமான விநோதவிஷயங்களை வெளிப்படுத்தாமல், நம்முடைய பரீட்சைக்கும் தேறுதலுக்கும் தக்கவைகளைமாத்திரம் வெளிப்படுத்துகிறது; அவைகளைக் கைக்கொண்டு விவேகமாய் நடக்கும்படி வேண்டிய

(c) So that the only question is, whether its evidence is sufficient in prudence to influence

அத்தாட்சியும் நமக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. உலகவிஷயங்களில் காரிய சித்தியாகும்படி எப்படி புத்தியைக் கையாடி நிதானித்து விவேகமாய் நடந்துகொள்ளுகிறோமோ அப்படியே தர்மவிஷயங்களிலும் நடந்துகொள்வது உத்தமம்.

the judgment and practice, while thus testing our virtue.

ஐந்தாவது, சம்சயமுள்ள இந்த ஒப்புமைநியாயத்தை மனுஷர் எளிதில் ஏற்றுக்கொண்டு அதின்படி நடக்கமாட்டார்களென்னும் ஆட்சேபனை பலமான ஆட்சேபனைதான். என்றாலும் மனுஷர் செய்கிறதைமாத்திரமல்ல, அவர்கள் செய்யத்தக்கதையும் விசேஷமாய்க் கவனிக்கவேண்டும். அதற்குப் பூரண அத்தாட்சியில்லாமற்போனாலும் போதுமான அத்தாட்சி உண்டென்றும், வேதமும் தர்மமும் மனுஷரைப் பரீட்சிக்கும்படி அருளப்பட்டிருக்கிறதென்றும், அதின் விதிவிலக்குகளைக் கைக்கொண்டு நடப்பதே மனுஷர்களுடைய கடமையென்றும் பலமுறை எடுத்துக் காண்பித்தோம். பானைசோற்றுக்கு ஒருசோறு பதம்.

5. In fact (it will be said) that men are not influenced by this evidence, and that is a fatal objection.

Answer:

(a) The question is not what men do, but what they ought to do in practice.

புத்திசாலிகளுக்கும் விவேகிகளுக்கும் வேதவிஷயத்தைப்பற்றிப் போதுமான அத்தாட்சி உண்டு. மனுஷர் வேதஅத்தாட்சியை ஏற்றுக்கொண்டால் பலனும், ஏற்றுக்கொள்ளாமற்போனால் நஷ்டமும் நேரிடும்; அதனால் வேதத்துக்கோ ஒரு நஷ்டமுமில்லை. மனிதர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிற இயற்கை அறிவுக்கும் வேதமாகிய செயற்கை அறிவுக்கும் தக்கதாய் நடப்பதே அவர்கள் கடமை. அநேகர் அப்படிச் செய்கிறதில்லை. என்றாலும், மனிதர் வேதத்தை ஏற்றுக்கொண்டாலும் ஏற்றுக்கொள்ளாமற்போனாலும் அது அவர்கள் பாடு; வேதம் தனக்கடுத்த காரியத்தை நிறைவேற்றி, தன் உண்மையை விளங்கப்பண்ணும்.

(b) The objection is nothing against religion, which answers its end in testing men, whether they are influenced by it or not.

(c) It is allowed that the evidence of religion has some weight, but so it ought to have some influence, and if such influence be allowed to this treatise, it has not missed its end.

வேத அத்தாட்சி எவ்வளவாவது விளங்கும்போது பரீட்சைநிலையிலுள்ள மனுஷர் அதை அங்கீகரித்து அதின் விதிவிலக்குகளை அநுசரித்து நடக்கவேண்டியது அவர்கள் கடமை. இந்தக் கடமையை உணர்த்துவதே இந்நூலில் சொல்லப்பட்ட நியாயங்களின் நோக்கம்.

B. On the arguments of the treatise Butler notes,

இந்த நூலில் கண்டிருக்கிற ஆட்சேபனைகளெல்லாம் பிறர் சொல்லுகிற நியாயங்களைக்கொண்டே சரியல்லவென்று ரூபிக்கப்பட்டிருக்கிறது. எப்படியெனில், விதிவசம் உண்டென்று சிலர் மதியீனமாய் சாதிக்கிறபடியால் அந்தக் கொள்கை மெய்யாயிருந்தாலும் அது வேதத்தினால் விளங்கிய

1. That he reasons, not upon his own principles, but upon (i. e., notwithstanding) the principles of his opponents; admitting fatalism, and affirming nothing of the moral fitness of moral acts, independent of the will of the Creator.

தர்மநிலை உண்டென்கிற சத்தியத்தை நிராகரிக்கமாட்டாது என்று முன்னமே ரூபிக்கப்பட்டிருக்கிறது. திருவுளத்தையும் அதினால் விளங்கும் விதிவிலக்குகளையும் கவனிக்குமுன் செய்வதற்குரியது நல்வினையென்றும், விடுவதற்குரியது தீவினையென்றும், தர்மநிலைக்கடுத்த தகுதி இன்னதென்றும், அறத்தைச் செய்வதினால் விளையும் இன்பமும் சுகமும் இன்னதென்றும், அதனைச் செய்யாமல் பாவத்தைச் செய்வதினால் விளையும் துன்பமும் துக்கமும் இன்னதென்றும் சுய மனதிற்கு ஏற்ற அபிப்பிராயத்தையும் அதற்கடுத்த நியாயங்களையும் எடுத்துக் காண்பிக்காமல், எதிரிகள் அபிப்பிராயத்தையும் அவர்கள் சொல்லும் நியாயங்களையுமே எடுத்துக் காண்பித்து தர்மநிலையை இந்த நூலில் நாட்டியிருக்கிறது.

2. He treats religion simply as a matter of fact; as a history which, more-

இந்த நூலில் மனுஷருடைய சுயாதீனம், அவர்களுக்குரிய நல்வினை தீவினைக்கடுத்த தர்மநிலை, இவைமுதலான விஷயங்களைக்குறித்து விசேஷமாய்க் கவனியாமல், உலகத்தை

ஆண்டுநடத்துகிற ஒரு காரணக்கடவுள் உண்டென்று இயல்வேதத்தில் சாதாரணமாய் விளங்குகிற காரியத்தைக் கவனித்திருக்கிறதுமன்றி, அருள்வேதமாகிய கிறிஸ்துமார்க்கத்தில் சம்பவித்திருக்கிற விஷயங்களையும் சரித்திரமாய்க் கண்டிருக்கிற சாதாரணகாரியங்களையும் கவனித்திருக்கிறது. கிறிஸ்துமார்க்கமும் அதின் அத்தாட்சிகளும் நடந்த சரித்திரசம்பவமாதலால் உள்ளங்கை நெல்லிக்கனிபோலப் பிரத்தியட்சமாய் விளங்கும். நன்மையைச் சரியென்று ஒத்துக்கொண்டு தீமையைச் சரியல்லவென்று தள்ளுகிற அகத்துப்பிரமாணமாகிய மனச்சாட்சியையும் கடவுள் நமக்குள் அமைத்திருக்கிறார். மறுமையில் நன்மைக்குப் பலனும், தீமைக்குத் தண்டனையும் உண்டு என்பது மதசம்பிரதாயமாயிருக்கிறதுமல்லாமல், யாவருக்கும் பிரத்தியட்சமாய் விளங்குகிற நியாயமுமாயிருக்கிறது. இந்த விஷயத்தோடு தர்மநிலையின் தகுதியையும் மனுஷசுயாதீனத்தையும் கவனித்துப்பார்ப்போமானால் அதின் உண்மை தெளிவாய் விளங்கும். என்றாலும், அதை உலக இயலோடு ஒத்திட்டுப்பார்க்கிறதினால், அதைக் கைக்கொண்டு நடக்கத்தக்க போதுமான நியாயம் விளங்குமென்று திருஷ்டாந்தப்படுத்தினோம். இது பிரத்தியட்சமான நியாயமல்லவென்று இடக்குச்சொல்லி இதைத் தவிர்க்க ஏற்படுகிறவர்களின் வீண்துணிவு சித்திக்காதென்பதற்குச் சந்தேகமில்லை. கடினமான விபரீத நியாயங்களைக்கொண்டு தர்மநிலை நாட்டப்படாமல் இலேசான நேர்நியாயங்களைக்கொண்டே நாட்டப்பட்டிருக்கிறபடியால் யாவருக்கும் அது அநுசரிக்கத்தக்கதென்று விளங்கும்.

over, reveals as facts God's moral government, present and future, &c, and which are proved, not demonstratively (a thing impossible in matter of fact) but practically—Abstract questions, and the principles of things involved in all those facts, are not discussed.

இதனால் இந்த நூலினுடைய தன்மையும் பிரயோஜனமும் இன்னதென்று தெளிவாய் விளங்கும். மனுஷசுயாதீனமும் தர்மநிலையின் தகுதியும் ஆகிய இவ்விரண்டு நியாயங்களும்

3. Hence the force of this treatise.

(a) To those who hold liberty and

moral fitness it is an additional proof of the truth of religion, and to those who deny them it is a new proof.

உண்டென்று அநுசரித்துக்கைக்கொள்ளுகிறவர்களுக்கு உலகஇயலில் விளங்கும் ஒப்புமைநியாயமானது மேற்சொல்லிய இரண்டு நியாயங்களையும் பலப்படுத்துகிற மூன்றாவது நியாயமாக அநுசரித்துக் கைக்கொள்ளப்பட்டு வேத உண்மையை ஸ்தாபிக்கும். அவ்விரண்டு நியாயங்களையும் ஒத்துக்கொள்ளாதவர்களுக்கு ஒப்புமை நியாயமானது சுயமான புதிய நியாயமாய்த் தோன்றும்.

(b) To believers it strengthens existing evidence, and answers objections; to unbelievers, it proves Christianity credible; and,

(b) வேத சத்தியத்தை விசுவாசிக்கிறவர்களுக்கு இந்த ஒப்புமைநியாயமானது மற்ற அத்தாட்சிகளை உறுதிப்படுத்தி, விரோதிகள் செய்யும் பல ஆட்சேபனைகளுக்கு உத்தரவுசொல்லும்; அவிசுவாசிகளுக்கு இந்த ஒப்புமை நியாயமானது கிறிஸ்துமார்க்கம் நம்பப்படத்தக்கதென்றும், அதை மெய்யல்லவென்று ரூபகாரப்படுத்தத் துணிகிறது வீணும் விபரீதமுமென்றும் திருஷ்டாந்தப்படுத்தும்.

(c) More generally, analogy confirms all facts to which it can be applied, and is the only proof of most. It is on the side of religion, and ought to be followed especially by all who profess to follow Nature.

(c) மேலும், இந்த ஒப்புமைநியாயத்தை உதவாத நியாயமென்று சிலர் பரியாசம்பண்ணி விபரீதமாய்ப் பேசினாலும், இது தகுமான நியாயம் என்பதற்கு யாதொரு சந்தேகமுமில்லை. இயல்வேதத்தையும் அருள்வேதத்தையும் பற்றிய தர்மமானது அநேக விஷயங்களைக் கொண்டிருக்கிறபடியினால் அவ்விஷயங்கள் ஒப்புமைநியாயத்தினால் உண்மையென்று விளங்கி, தர்மநிலையின் பட்சத்தில் சாட்சிசொல்லி, இயலுக்கும் அருளுக்குமுரிய தர்மத்தை நாட்டும். இயலை நாடுகிறவர்கள் இந்த ஒப்புமைநியாயத்தைக் கையாடி அருளை அநுசரித்து மெய்யை அறிந்துகொள்வார்கள்.

## CONCLUSION.

# முடிவுரை.

தர்மமே ஜெயம், தர்மமே உலகத்தில் சிறந்தது; என்றாலும் தர்மத்தைப் பூரணமாய் விளக்கும் கிறிஸ்துமார்க்கத்தை அநேகர் விசாரித்து அநுசரியாமல் மோசம்போகிறார்கள். உலகத்திலுள்ள சகல வஸ்துக்களும் தத்தமக்குரிய காரிய விருத்திக்கு உபயோகமாக உண்டாக்கப்பட்டிருக்கிறபடியால், அவைகள் தங்களை உண்டாக்கின ஞானமுள்ள காரணகர்த்தாவை வெளிப்படுத்துகிறது. மனுஷர் தங்களைச் சூழ நிறைந்திருக்கும் சராசரங்களின் இயல்பைக் காணுங்காட்சிகளாலும் தங்கள் உள்ளத்தில் விளங்கும் உணர்ச்சியினாலும், நீதியாய் அனைத்தையும் படைத்து ஆண்டு நடத்துகிற பிரத்தியேகமான காரணகர்த்தாவாகிய கடவுள் ஒருவர் உண்டென்கிற சத்தியம் விளங்குகிறது. அவருடைய சாயலில் உண்டாக்கப்பட்ட மனம் புத்தி சித்தமுள்ள மனுஷர் அவரை வழிபட்டு அவருக்குத் தொண்டு செய்து, அவருடைய விதிவிலக்குகளை அநுசரித்து பிறர்விஷயத்தில் நீதியையும் இரக்கத்தையும் கையாடி நடப்பதே அவர்களுடைய கடமை; இது இயல்வேதம் என்னப்படும், இதனை அநுசரித்து நடப்பது இயற்கைதர்மமாம்.

Natural Religion.

இயற்கை அறிவுக்கு மேலான அறிவாகிய செயற்கை அறிவை விளக்குவதே அருள்வேதம் என்னப்படும்; இது பல அத்தாட்சிகளைக் கொண்டு உண்மைபெறும். அற்புதம் தீர்க்கதரிசனம் முதலான அத்தாட்சிகளால் அருள்வேதம் உண்மையென்று விளங்குவதினால் பயபக்தியோடு அதனை அநுசரித்து நடப்பதே மனுஷருக்குரிய செயற்கை தர்மமாம். கிறிஸ்துமார்க்கம் திருவுளத்தை வெளிப்படுத்துகிறபடியால் அதற்குச் செவிகொடுப்பது மனுஷருடைய கடமையாயிருக்கிறது. அநேகர் பல முகாந்தரங்களினால் இந்த தர்மத்தை அநுசரித்து நடவா

Revealed Religion.

மல் இதை விரோதித்துத் தள்ளி இதைப்பற்றிப் பலவித ஆட்சேபனைகள் செய்து, கிறிஸ்துமார்க்கத்தையும் அதின் காரணகர்த்தாவையும் பகைத்து நிந்தித்து, அதினால் அளிக்கப்பட்ட அருளை அலட்சியம்பண்ணி, அதன் உபதேசங்களைப் பழித்துப்பேசுகிறார்கள். கிறிஸ்துமார்க்கத்தின் உண்மைக்குப் போதுமான அத்தாட்சிகள் இருக்க, விரோதிகள் அந்த அத்தாட்சிகளை ஒரு பொருட்டாக எண்ணாமல் இந்த மார்க்கத்தை விரோதித்து நடப்பது நியாயமல்ல; இப்படி விரோதித்து ஆட்சேபிக்கிறவர்கள் தர்மநிலையையும் உலக இயல்பையும் வேத அருளையும் அறியாதவர்கள். அருள் வேதமானது மனுஷர்களுடைய மனோராஜ்யத்துக்கும் வீண் தோற்றத்துக்கும் பொருந்தாமலிருக்கிறதுமன்றி, அவர்களுடைய சிற்றறிவுக்கு எட்டாத காரியங்களை வெளிப்படுத்தி, அவர்களுடைய சிற்றின்பங்களுக்கு இடங்கொடாதிருக்கிறபடியாலும், அதில் தங்கள் குயுக்திக்கேற்ற அத்தாட்சிகள் இல்லாதபடியாலும், அதற்கு உண்டாயிருக்கிற சாதாரண அத்தாட்சிகள் விபரீதமான தங்கள் மனதிற்கு விகாரமாய்த் தோன்றுகிறதினாலும், அதை வேண்டாவெறுப்பாய் விரோதித்துத் தள்ளுகிறார்கள். இது தகுதியா? விவேகமா? அல்லவே.*

The first part of this Treatise is intended for objections against natural Religion.

இப்படி விரோதித்து ஆட்சேபிக்கிறவர்களுக்காகவே இந்த நூல் இயற்றப்பட்டிருக்கிறது. இதன் முதலாம் பங்கில் இயல்வேதத்துக்கு விரோதமாய்ச் செய்யப்படும் பொதுவான ஆட்சேபனைகளுக்குச் சமாதானம் சொல்லப்பட்டிருக்கிறது. எப்படியெனில், உலக இயலில் விளங்குகிற காரியங்களுக்கும் நம்முடைய அநுபவத்தில் விளங்குகிற காரியங்களுக்கும் உண்டாயிருக்கிற சம்பந்தா

---

* "செய்தக்க வல்ல செயக்கெடுஞ் செய்தக்க
செய்யாமை யானுங் கெடும்."

அதாவது, செய்யத்தகாதவைகளைச் செய்தாலும், செய்யத்தக்கவைகளைச் செய்யாதிருந்தாலும் கேடுண்டாகும் என்று குறளில் சொல்லியிருக்கிறது.

"He will perish who does what is not fit to do, and he will perish who does not what is fit to do."

சம்பந்தத்தினாலே உலகத்தை ஆண்டுநடத்துகிற நீதியுள்ள காரணகர்த்தாவின் ஆளுகைக்கு நாம் உட்பட்டிருக்கிறோமென்றும், இம்மையில் அவர் நடத்துகிற நடக்கையின் ஒப்புமையினாலே மறுமை உண்டென்றும், மறுமையில் நல்வினைக்குப் பலனும் தீவினைக்குத் தண்டனையும் அளிக்கப்படுமென்றும், இம்மையில் தொடங்கினது மறுமையில் பூரணப்படுமென்றும், சிருஷ்டிகளாகிய மனுஷர்கள் சிருஷ்டிகர்த்தாவாகிய கடவுளை வழிபட்டு அவரைத் தொழுதுகொள்ளவேண்டுமென்றும் முதலாம் பங்கில் கண்டிருக்கிறது. "மனுஷருடைய ஆவி கர்த்தர் தந்த தீபமாயிருக்கிறது; அது உள்ளத்தில் உள்ளவைகளையெல்லாம் ஆராய்ந்துபார்க்கும்" என்று வேத வசனம் தெளிந்த புத்தியைக்குறித்துச் சொல்லுகிறபடியால்,* அந்த ஆவியாகிய தெளிந்த புத்தியே இயல்வேதத்துக்கு ஆதாரமாம்.

இரண்டாம் பங்கில் அருள்வேதத்தையும் அதில் அடங்கிய தர்மவிஷயங்களையும்பற்றிச் சொல்லிய ஆட்சேபனைகளுக்குச் சமாதானம் சொல்லப்பட்டிருக்கிறது. எப்படியெனில்,

The second part is intended to answer objections against Christianity.

முதலாம் அதிகாரத்தில் கிறிஸ்துமார்க்கமாகிய வேதத்தைக் கடவுள் அநுக்கிரகித்திருப்பது மனுஷருடைய இகபரசுகத்துக்குரிய முக்கியமான நன்மையாயிருக்கிறதென்று காண்பித்தோம்.

இரண்டாம் அதிகாரத்தில் அருள்வேதத்திலே அற்புதசெயல் கண்டிருக்கிறதினால் அது இயலுக்கு விரோதமென்று சொல்லுகிறவர்களின் ஆட்சேபனைகளுக்கடுத்த சமாதானங்களைச் சொன்னோம்.

மூன்றாம் அதிகாரத்தில் அருள்வேதத்திலே இன்னின்ன காரியங்கள் வெளிப்பட்டிருக்குமென்று நாம் முன்னர் கருதி நிதானிக்கத் திராணியற்றவர்களாயிருக்கிறபடியாலும், அதில் மனுஷருடைய புத்திக்கெட்டாத அநேக காரியங்கள் வெளிப்

* நீதி. 20. 27.

படுத்தப்பட்டிருக்கிறபடியாலும், அவைகள் சந்தேகத்துக்கும் ஆட்சேபனைக்கும் இடங்கொடுக்குமென்றும் ஒப்புமைநியா யத்தினால் காண்பித்தோம்.

நான்காம்அதிகாரத்தில் வேத உபதேசங்களாகிய தேவலட் சணங்களைப்பற்றும் ஞானம் நீதி தயைமுதலியவற்றிற்குரிய ஆட்சேபனைகளைக் கவனித்து, அவைகளைப்பற்றிச் சொல் லிய ஆட்சேபனைகள் உலகஇயலையும் பற்றுமென்று எடுத் துக் காண்பித்தோம். சிற்றறிவாளராகிய நம்முடைய சொற் பபுத்திக்கு உலகஇயலில் அநேக விஷயங்கள் விளங்கா மலிருக்கிறதுபோலவே, வேதத்திலுள்ள அநேக விஷயங் களும் நமக்கு விளங்காமலிருக்கிறது சகஜமென்றும்; ஒரு பொருளின் முழுமையையுங் கண்டறியாமல், அதின் ஒரு பங்கைமாத்திரங்கொண்டு முழுமையையும்பற்றி நிதா னித்தறிகிறது இயலாதகாரியமாகையால், அப்படியே உலக இயலில் தோன்றுகிற தெய்வச்செயலாகிய சில காரியங்க ளைக்கொண்டு தெய்வ எத்தனமுழுதையும் கண்டறிந்தவர்கள் போல் யூகிப்பது மதியல்லவென்றும்; காரணகர்த்தாவானவர் பல எத்தனங்களைக்கொண்டு உலகஇயலை நடத்துகிறதுபோல வே வேதஅருளையும் நடத்துகிறாரென்றும் காண்பித்தோம்.

ஐந்தாம் அதிகாரத்தில் தேவனுக்கும் மனுஷனுக்கும் நடுநின்று இரட்சணியத்தை நடத்துகிற ஒரு மத்தியஸ்தர் உண்டென்று அருள்வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிற சத் தியம் உலகஇயலில் நடக்கிற பற்பல காரியங்களினாலே விளங்குகிறதென்று காண்பித்தோம்; எப்படியெனில், பாவம் உண்டென்று உலகஇயலில் விளங்கி யாவரும் ஒத்துக்கொள் ளுகிறார்களென்றும், அந்தப் பாவம் நிவிர்த்தியாகிறதற்கு வழி காணோமென்றும், குற்றஞ்செய்கிறவர்களுக்குத் தண்டனை உண்டென்றுமாத்திரம் விளங்குகிறதென்றும்; வியாதிகளை விலக்க உலகத்தில் பல அவிழ்தங்கள் இருக்கிறபடியால், பாவநிவிர்த்திக்கும் யாதொரு எத்தனம் கடவுளால் நியமிக் கப்பட்டிருக்குமென்றும், "தேவன், தம்முடைய ஒரேபேறான குமாரனை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப் போகாமல் நித்தியஜீவனை அடையும்படிக்கு அவரைத்

தந்தருளி, இவ்வளவாய் உலகத்தில் அன்புகூர்ந்தார்," "தேவ குமாரன் தாம் பூரணரானபின்பு, தமக்குக் கீழ்ப்படிகிற யாவரும் நித்திய ரட்சிப்பை அடைவதற்குக் காரணரானார்,"* என்று வேதத்தில் திருவுளம்பற்றியிருக்கிறதே அந்த எத்தனமென்றும் காண்பித்தோம்.

ஆறும் அதிகாரத்தில் கிறிஸ்துமார்க்கமாகிய வேதம் சாதாரணமாய் யாவருக்கும் ஒரே வேளையில் அருளப்படவில்லையென்றும், அது கடவுளால் அருளப்பட்டதென்பதற்குப் போதுமான அத்தாட்சிகள் இல்லையென்றும் சொல்லப்படும் ஆட்சேபனைகளை எடுத்துச் சொன்னோம். இதற்கும் உலகஇயலில் சமாதானம் விளங்குமென்றும், தேவன் பலவிதமான வரங்களைப் பலருக்கு அருளுகிறாரென்றும், ஜீவனார்த்த விஷயங்களைப்பற்றி நாம் நடந்துகொள்ளவேண்டிய காரியங்களில் நமக்குப் போதுமான நிச்சயத்தை உண்டுபண்ணும் நியாயமும் அத்தாட்சியுமில்லாமல், லௌகீகவிஷயங்களில் சம்சயமும் சந்தேகமும் நம்மைச் சூழ்ந்திருக்கிறதுபோலவே, வைதீகவிஷயங்களிலும் நம்முடைய உத்தமம் விளங்கி நாம் பரீட்சிக்கப்படும்பொருட்டு அநேக சங்கடங்கள் நேரிடுகிறதென்றும், நமக்கு அருளப்பட்டிருக்கிற வேத அத்தாட்சி போதுமானதென்று கைக்கொண்டு நடக்கவேண்டியது நம்முடைய கடமையென்றும் காண்பித்தோம்.

ஏழாம் அதிகாரத்தில் இயல்வேதத்திலே விளங்கும் சம்பந்தங்களினால் அருள்வேதம் உண்மைபெற்றாலும் அருள்வேதத்துக்கு சரித்திரசம்பவம், தீர்க்கதரிசனவாக்கு, அற்புத செயல், ஞான உபதேசம், மறுஜநநகுணப்படுதல் முதலான சிறந்த நேரான அத்தாட்சிகள் உண்டென்றும், இவ்வளவு பலமான திருஷ்டாந்தங்களுள்ள வேதம் மெய்யென்று விளங்கவேண்டியதென்றும் காண்பித்தோம்.

எட்டாம் அதிகாரமாகிய இந்தக் கடைசி அதிகாரத்தில் இந்த நூலில் உலகஇயலை காட்டி அதைக்கொண்டு வேத அருளை திருஷ்டாந்தப்படுத்துகிற ஒப்புமைநியாயமானது

---

* யோவா. 3. 16. எபி. 5. 9.

போதுமான தக்கந்த நியாயமல்லவென்று ஆட்சேபிக்கிறவர்களுக்குச் சமாதானம் சொன்னோம்.

இயலுக்கும் அருளுக்குமுரிய சம்பந்தத்தைப் பலவிதமான நியாயங்களைக்கொண்டும் வேத அத்தாட்சிகளைக்கொண்டும் விபரமாய்க் காண்பித்திருக்கிறபடியால், மனுஷர் போக்குச்சொல்லி அதை வேண்டாவெறுப்பாய்த் தள்ளிவிடலாகாது. இந்த நூலில் கண்டிருக்கிற நியாயங்களை நம்பாமலும் அவைகளைக்கொண்டு தேறுதலடையாமலும் இருக்கிறவர்கள், கண்கண்டகாட்சியும், காதுகேட்டசாட்சியும் உண்டாயிருந்தாலும் நம்பப்போகிறதில்லை. (லூக். 16. 31.)* கடவுள் அவர்களுக்கு ஒளியும் அருளும் அளித்து, அவர்களுடைய இருளையும் மருளையும் நீக்கி, சத்தியத்தை அவர்கள் நம்பித் தேறுதலடைந்து, இகபரசுகம் பெறும்படி அநுக்கிரகஞ்செய்வாராக.

* "அருமறை சோருமறிவிலான் செய்யும்
பெருமறைதானே தனக்கு." குறள்.

அதாவது, வேதத்தின் அரிய உபதேசப்பொருளை உட்கொள்ளாமல் தள்ளும் மூடன் தனக்குத் தானே அதிக வருத்தத்தைச் செய்துகொள்ளுவானென்று குறளில் சொல்லியிருக்கிறது.

The soul which rejects the precious Veda does itself incalculable injury.

வேதவசனம் வித்துக்கு உபமானிக்கப்பட்டிருக்கிறது: "வித்தில்லாத சம்பிரதாயம் மேலுமில்லை கீழுமில்லை." வித்தில் ஜீவன் உரு நிறம் முதலானவை உண்டு. ஒரு வித்திலிருந்து முப்பது அறுபது நூறுமடங்கு பலனுண்டாகும். வித்தானது பலிக்க நிலமும் ஆதபமும் ஒளியும் மழையும் வேண்டும். வித்து விதைக்கப்பட்டு நனைந்து ஊறி விகாரப்படாமல் விளையாது, விளையாவிட்டால் பலுகிப் பெருகாது. வித்தினாலாகிய தானியமே மனுஷருக்குரிய ஆகாரம். வித்து விளைய விண்டுமிபோகாமல் பூரணமாயிருக்கவேண்டும். அப்படியே ஜீவனுள்ள வித்தென்னும் வேதமாகிய திருவாசகமும் மனுஷருடைய உள்ளமாகிய நிலத்தில் உபதேசத்தினால் விதைக்கப்பட்டு தீட்சை ஜலத்தினால் நனைந்து இருதையில் ஊறி ஆவியாகிய ஆதபம் வீச பேரொளியாகிய சத்தியம் உயிர்தர தளிர்த்து மலர்ந்து கனிதரும். வேதமாகிய ஜீவவித்து அழியாத நித்தியவித்து. அதுவும் விண்டுமிபோனால் விளையாது. உலகஞானிகள் இந்த வித்தின் தன்மையை அறியும்படி அதைப் பிட்டு, அறுத்துப் பார்த்து எறிந்துவிடுகிறார்கள். சத்தியவானோ இந்த வித்தைப் பாதுகாத்து விதைத்து அருள்மழைபெய்ய வேண்டிக்கொண்டு. அதன் பலனைத் தனக்கு ஆகாரமாக்கிக்கொள்ளுகிறான். இந்த வித்தை விதைப்பதே திருச்சபையின் கடமை. இந்த ஜீவவாக்காகிய வித்துக்கு இறகுகளுண்டு. அது விதைக்கப்படும்போது காற்றினால் எங்கும் பறந்து விழுந்து வேர்கொள்ளும். நெற்பயிரோடு களைகள் விளைந்தாலும் நெல்மாத்திரம் களஞ்சியங்களில் சேர்க்கப்பட்டு மனுஷருக்கு ஆகாரமாகும். பொய்ப்பொருளாகிய அஞ்ஞானத்தை விதைக்கிறவர்கள் அஞ்ஞானத்தை அறுப்பார்கள். மெய்ப்பொருளாகிய ஞானத்தை விதைக்கிறவர்கள் ஞானத்தை அறுப்பார்கள். (ஏசா. 55. 10, 11. 2 கொ. 9. 10. காண்க.)

# INDEX. I.

## பத அகராதி.

# INDEX. II.

